# நல்லூர் ராஜதானி நகர அமைப்பு

திருத்திய இரண்டாம் மின்னூற் பதிப்பு

வ.ந. கிரிதரன்



தலைப்பு : நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் மின்னூற் பதிப்பு)
**Nallur Rajadhanii Nagara Amaippu**

ஆசிரியர் : வ.ந.கிரிதரன் ( V.N.Giritharan)

மொழி : தமிழ் (Tamil)

பதிப்பு : இரண்டாம் மின்னூற் பதிப்பு மே 2025
**Second e-book edition**

உரிமை : கலைச்செல்வி கிரிதரன்
**Kalaichelvi Giritharan**

பதிப்பாளர் : பதிவுகள்.காம் (Pathivukal.Com)

வாட்ஸ்அப் : +1 647 785 3760

மின்னஞ்சல் : girinav@gmail.com

நூல் வடிவமைப்பு : வ.ந.கிரிதரன் & செயற்கைத் தொழில் நுட்பம் (AI)

# உள்ளே

# முன்னுதாரணமான முயற்சி - செ. யோகநாதன் - (நல்லூர் ராஜதானி நகர அமைப்பு நூலின் முதற்பதிப்புக்கு எழுதிய அணிந்துரை)

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்துதமிழர் இலங்கையில் பண் பாட்டு வளர்ச்சி பெற்ற மக்களாய் வாழ்ந்து வந்திருக்கிறாரென்பதற்கு உறுதியான வரலாற்றுச்சான்றுகள் உள்ளன. கி.மு. மூன்றாம்நூற்றாண்டு காலத்துதமிழ் பிராமிக்கல்வெட்டுகள் அகழ்வாராய்வில் ஈழத்தமிழ்ப் பிரதேசத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. கந்தரோடை, ஆணைக் கோட்டை ஆகிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வாராய்வுகள் பெருங் கற்கால (MEGALTHC)நாகரிக மக்களாய்தமிழர்வாழ்ந்து, வளர்ச்சியும் பண்பாட்டு மேன்மையும் பெற்ற விதத்தினை உறுதி செய்கின்றன. தமிழகத்தில் ஏற்பட்ட அதே விதமான நாகரிகம், பண்பாட்டு வளர்ச்சி என்பன, மேற்கூறிய காலப்பகுதியில் இலங்கையின் பாரம்பரித் தமிழ்ப்பிரதேசத்தில் இருந்து, தென்னிந்திய நாகரிகத்திற்கு சமனாக வளர்ச்சியும், பண்பாட்டுப்பாய்ச்சல்களும், கல்வெட்டுகளும் போதிய உறுதியைக் கொடுக்கின்றன. கடல்வழி வாணிபம், ஈழத்தமிழரோடு ரோமர்கள் கொண்டிருந்தனர், அராபிய, சீனருடனான வணிக உறவு களையும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் முதிர்ந்த பண்பாட்டு வளர்ச்சி பெற்றிருந்த ஈழமக்கள்நடத்தியதற்கான பதிவுகளும் உள்ளன.

கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமிழ்-சைவமரபுள்ள அரசு யாழ்ப்பாணத்தில் உருவாயிற்று. வணிகமும், விவசாயமும்இந்த அரசின் பொருளாதார ஊற்றுக்கண்கள். செம்மை வாய்ந்த பண்பாட்டு வளர்ச்சி இந்த அரசின்காலத்தில் முக்கிய பண்பாக வெளிப்பட்டது.இந்த அரசின் ராசதானியாகநல்லூர் சிறப்புப் பெற்றது. கலாச்சார அடையாளமாகத் திகழ்ந்தது.

போர்த்துக்கேயர்வருகையுடன்இந்த அரசின்வீழ்ச்சியும் ஏற்பட்டது. பதினாறாம் நூற்றாண்டில் அடிமைப்பட்ட ஈழத்தின் மேன்மை இன்றுவரைதனது விடுதலைக்காகப் போராடிவருகிறதென்பது வரலாறு. ஈழத்தமிழரின் வரலாறு இன்னும் முழுமையாக எழுதப்படவில்லை. இலங்கையின் அரசு அகழ்வாராய்வுகளெல்லாம் சிங்கள பௌத்த, பெருமைகளை விளக்கவும் உறுதிப்படுத்தவும், தமிழரின் மேன்மையை கண்டு கொள்ளாமல் - மூடிமறைக்களும் பிரயத்தனப்பட்டனவென்பது எல்லாரும் அறிந்த விஷயம். வரலாற்று மாணவனாகப் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் நான் பயின்று கொண்டிருந்த காலத்தில் இதை ஆதார பூர்வமாகவே கண்டு அறிந்து மனம் வெம்பியிருக்கின்றேன். அகழ்வாராய்ச்சித்துறையும், குறிப்பாக டாக்டர் பரண விதான போன்றோரும் ஈழத்தமிழ் வரலாற்றில் நிறையவே புழுதியையும், சேற்றுப்படலங்களையும் நறைத்து மூடியிருக்கிறார்கள். அதிகார பூர்வமான வரலாற்று சஞ்சிகைகள், நூல்கள் என்பன இன்றளவும் இம்முயற்சியில் சளையாமல் இயங்கிவருகின்றன. துரதிருஷ்டவசமாக ஆரம்பகாலத்தில் வரலாற்றுத்துறையில்இருந்த தமிழ்ப்படிப்பாளிகள் ஈழத்துவரலாற்று உண்மைகளை வெளிக்கொணர் வதில் ஆர்வம் காட்டவில்லை. இந்த இருளிடையே பேராசிரியர் கணபதிப்பிள்ளை - அவர் தமிழ்த்துறையைச் சார்ந்தவராகஇருந்தபோதி லும் - ஆர்வத்தோடு ஒரு வெளிச்சமாய்ப் பிரவேசித்தார். பின்னர் பேராசிரியர் இந்திரபாலா ஆணித்தரமான ஆய்வுப்போக்கோடு இந்தப்பாதையை விரிவு செய்தார். இப்போது பேராசிரியர்கள் பத்மநாதன், சிற்றம்பலம் ஆகியோர்ஈழத்துவரலாற்றை மேலும் மேலும் ஆராய்வதில் அக்கறையான உழைப்போடு இயங்கி வருகின்றனர். இவர்களால் புதிய ஆய்வாளர்கள் உருவாக்கப்படுவது. ஈழவரலாறு மேலும் மேலும் வெளிச்சம் பெற உதவுதாக அமையும். நவீன அறிவியல், எல்லாத்துறைகளையும் போல வரலாற்று ஆய்விலும் பல புதுமைகளை அறிமுகப்படுத்தி ஆய்வுகளைநம்பகமும், வேகமும் பெறச்செய்கிறது. குறிப்பாக அகழ்வாராய்வில், அறிவியல் நிறையவே வெளிச்சம்

படரவைத்திருக்கிறது. யூகமானமுடிவுகளுக்கு இதனால் இடமேயற்றுப்போய் விட்டது. வெளிப்படுத்தலென்றால் உண்மைதான்

யாழ்ப்பாணத்திலே தனியான பல்கலைக்கழகம் அமைந்தது பல திருப்பங்களை உண்டாக்கின. அவற்றிலே முதன்மையானது கட்டுப் பாடற்ற வரலாற்று ஆய்வுமுறை.

காலமும் இயற்கையும் மண்ணால் மூடியிருக்கின்றதமிழ்ப்பிரதேசம் இன்னும் தனது தொன்மைமிகு வரலாற்றை வெளிப்படுத்தாமலே வைத்திருக்கின்றது. ஆயினும் இடர்கள் நிறைந்த சூழலிலும், இந்த வரலாற்றை வெளிப்படுத்துவதில் இளந்தலைமுறை ஆய்வாளர்கள் மிக அர்ப்பணிப்போடு ஈடுபட்டிருப்பதை நான் அறிவேன். அவர்களில் ஒருவராக நான் நண்பர் வ.ந.கிரிதரனை அடையாளங் காண்கிறேன். இதையிட்டு மகிழ்ச்சியும் அடைகின்றேன்.

ஆர்வத்தோடும் அர்ப்பணிப் போடும் வரலாற்று ஆய்விற்கு வந்துள்ள இந்த அறிவுஜீவிகள், இந்தக் காலத்தில் எமக்கு அவசியம் தேவைப்படுகிறவர்கள், இவர்களின் வருகை பெருகட்டும்.

அகழ்வாராய்ச்சித்துறையில் ஒரு புயலாக நான் கலாநிதி பொ.ரகுபதியை அடையாளங்கண்டிருக்கிறேன், தமிழ்ப்பகுதியில் வலுவான அகழ்வாராய்வு செய்வதில் முன்னின்ற ரகுபதியின் EARLY SETTLEMENTS என்ற நூல் இனிவரும் ஆய்வாளர்களுக்கு ஒரு பயன் நிறைந்த கையேடு. ரகுபதியைப் போலவே ஆர்வமும் ஆய்வுணர்வும் கொண்ட கிரிதரன், கட்டிடக்கலைப்பட்டப்படிப்பை மேற்கொண்டவர். அப்போதிருந்தே தனக்கு கம்பீரமளிக்கும் வரலாற்றைக் கொண்ட நல்லூர் ராஜதானி பற்றி மனதினிலே ஒப்பற்ற கனவுகளை வளர்த்துக்

கொண்டவர், மனதுள் நிறைந்திருந்த அந்த ஆய்வுணர்வு, ரத்தினச் சுருக்கமான ஆய்வுக் கையேடாக இப்போது வெளியாகியிருக்கின்றது. சோகமும், இடர்ப்பாடுகளும் நிறைந்த வாழ்விடையேயும், தன் தாயக நினைவோடு இந்நூலை எழுதியுள்ள கிரிதரனை எல்லாரும் பாராட்ட வேண்டும். சான்றாதாரங்களைப் பெற்றுக் கொள்வதிலுள்ள சிரமங்களுக்கு நடுவே, பொறுமையும் தேடுதலும்கனியஇந்தப்பிரதியை கிரிதரன் செம்மையாக எழுதியுள்ளார். பின்னொரு காலத்தில், சுதந்திரக் காற்று வீசும் சூழலில் வாழப்போகின்ற இளந்தலைமுறை ஆய்வாளர் களுக்கு இந்த நூல், ஒரு ஆக்கபூர்வமான வழிகாட்டியாக அமையும. அதைவிட இன்னொரு ஆய்வுக்கும் இது உதவியாக அமையும்.

ஈழவரலாற்றில் நல்லூரின் பங்களிப்பு உன்னதமானது. சோழர் காலத்திலேயே சிறப்புப்பெற்றிருந்தநகரம். பின்னர்யாழ்ப்பாண அரசின் தலைநகராக கம்பீரத்தோடு பொலிந்த திட்டமிட்டு உருவாக்கப்பட்ட இருப்பிடம். ஆயினும் இந்த அரசின் பரப்பிடங்கள் இன்னும் ஆய்வு செய்யப்படவில்லை. என்றாலும் கிடைத்த ஆதாரங்களின் அடிப்படை யிலும், தனது கட்டிடக்கலை அனுபவ ஆய்வறிவிலும் பரிச்சயம் முதிரப்பெற்ற கிரிதரன் நல்லூர் ராசதானியின் அமைப்பைப் பற்றி தர்க்கரீதியாக விளக்கியுள்ளார். ஒரு வரலாற்று ஆய்வாளருக்குரிய நேர்மையும், நிதானமான போக்கும் கிரிதரனிடம் முழுமை பெற்றுள்ளன. அடிப்படையற்றுக் கூறப்பட்ட பல வரலாற்று ஆதாரங்களையும் அவர் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளுகின்றார். அதை விரிவாகவே ஆராய்ந்து எது உண்மையெனநிறுவுகின்றார். ஒரு வரலாற்றாளனுக்கு வேண்டியஇந்த அறிவு முதிர்ச்சிஇந்த இளைஞரிடம் அமைந்துள்ள முறையே இவரது கற்றறிவின் சிறப்பை மேலும் உறுதி செய்கிறது. கிரிதரனின் ஆய்வுக் கண்ணோட்டத்தை மேலும் அவரது செம்மையும் எளிமையும் வாய்ந்த மொழிநடை மெருகுபெற வைக்கின்றது.

o o o

இதுவரை கிரிதரனை நான்பார்த்ததில்லை, எழுத்தின்மூலம்ஆர்வம் கொண்டஇளைஞராய், அறிவுத்தேடலுள்ள கலைஞனாகவே அறிந்து வைத்திருக்கின்றேன். அவரது இந்த ஆய்வுநூல் அவரைப் பற்றிய இன்னொரு தளத்தை நமக்கு அறிமுகம் செய்கிறது. அதுவும் அறிவுச் செருக்கோடும் திறனோடும். இந்த நூலை முன்னுரை எழுதும் பொருட்டு இருமுறை படித்தேன். இதைப் பற்றி சிந்திக்க நினைத்த போது நெஞ்சு என்னையறியாமலே கனக்கத் தொடங்கிற்று. என்விடுநல்லூரில் உள்ளது. அங்கே போயிற்று என் நினைவு, சுத்தமான காற்றிடையே அதிகாலையில் மெல்லவே கீதமென நெஞ்சைத்தொடும் நல்லூர்க்கோயில் மணிஓசை காதோடு கேட்கிறது. வீரமாகாளி அம்மன் கோயில் சட்டநாதர், வெய்யிலுகந்த பிள்ளையார், கைலாசநாதர் கோயில் வழியாக நடந்து வருகிறேன். யமுனாரிமனதினுள்ஆச்சரியம் விளைக்கின்றது. அந்தக்காற்று, பூவரசம் பூக்கள், இனிமையான பேச்சுமொழி, தலையை ஆட்டிப் பார்க்கிற மண்ணின் அடையாளமான பனைமரங்கள், வெளிரென்ற மேகங்கள், செம்புத்தண்ணீர். இவற்றோடுமண்முடியுள்ளமேடுகள், உடைந்த பழையகாலகட்டிட எச்சங்கள்நினைவில் வருகின்றன.

இன்னும் யோசித்தால் நாம் வாழ்ந்த பெருமையான காலம் கண்க ளிலே வருகின்றது. கிரிதரன் அந்தப் பழைய ராசதானிக்கு நம்மை அழைத்துச் சென்று பெருமூச்சு விடவும் வைக்கின்றார். பெருமூச்சு கஷ்டத்துக்குப்பதிலாக மேலும் மன உறுதியைத் தருகிறது. தூயவான் பரப்பின் கீழே, நானும் கிரிதரனும் நல்லூர் ராசதானியின் வீதிகளில் வெகுவிரைவிலேயே பெருமையோடு தலைநிமிர்ந்து நிற்போமென அந்த மனஉறுதிசொல்கிறது.

o o o

கட்டிடக்கலையில் தமிழர் பங்களிப்பு உலக அளவிலே இன்றும் வியந்து பேசப்படுவது, அதற்கான சிற்பசாஸ்திர, கட்டிடக்கலைமரபுகள் நமது ஒப்பற்ற செல்வங்கள். இன்னும் சொன்னால் இவை தமிழரின் கட்டிடக்கலை தொழில்நுட்ப அறிவை இன்றும் வியக்க வைத்துக் கொண்டிருப்பவை.

கிரிதரனின் கட்டிடக்கலை ஞானம் பாராட்டத்தக்கது. தனது படிப்பு எல்லைக்கு வெளியேயும் இந்த ஞானத்தை அவர் தேடித்தேடி சேகரித் திருக்கிறார். இதைஇந்தநூல் சத்தமிட்டுச்சொல்கிறது. குறிப்பாக வாஸ்து சாஸ்திரம் பற்றிய கிரிதரனின் ஆழ்ந்த விளக்கம். கட்டிடக்கலை,நகர அமைப்பு பற்றிய அடிப்படை அறிவை வெகு எளிமையாக கிரிதரன்விவரித்திருக்கின்றார், சின்னவிஷயங்களைக்கூட விட்டு விடாமல் நுணுக்கமானதகவல்களும் விளக்கமும் கொடுக்கிறார். ஆய்வு மாணவர்களுக்கு சிறந்த உதாரணப் பிரதியாக என்னால் இந்தப்பிரதியை அனுமானிக்க முடிகிறது.

இந்நூலுக்குரிய வரைபடங்கள் புகைப்படங்கள் அடுத்த பதிப்பில் இடம்பெற வாசகர்கள் கிரிதரனுக்கு உதவுவார்கள் என நம்புகிறேன். தகவல் தொடர்பற்ற நிலையிலே கிரிதரனின் முழு மூச்சான முயற்சி இவ்விதம் நூல், பயனுள்ள தொகுப்பாக உருவாகக் காரணமாயிற்று. இதற்காக பூமிப்பந்தெங்கும் பரவியும் தாய்மண்ணிலும் வாழும் ஈழத்தமிழர்கள் கிரிதரனை மனமாரப் பாராட்டுவார்கள். இதற்காகவே கிரிதரன் பெருமையும் பெருமிதமும் கொள்ளலாம். வாசிக்கின்ற எந்த ஈழவர் மனதிலும் பெருமிதம், உறுதி, தன்னம்பிக்கை, பிரதிக்கினை என்பனவற்றைநிச்சயம் இந்நூல்

உருவாக்கும். கிளர்ந்தெழ வைக்கும். இதைவிட ஒரு நூல் ஆசிரியனுக்கு வேறென்ன பெருமை வேண்டும்?

சிறந்த நூல்களை வெளியிட்டு வரும் ஸ்நேகா பதிப்பகத்தை இந்த நூலை அழகுற வெளியிடுவதற்காக நான் பாராட்டுகிறேன். இதற்காக அவர்கள் பெருமை கொள்ளலாம்.

# என்னுரை! (நல்லூர் ராஜதானி நகர அமைப்பு நூலின் முதற்பதிப்புக்கு எழுதிய என்னுரை)

ஈழத்தமிழர்களின் யாழ்ப்பாண அரசர்களின் காலத்தில் இராஜதானியாகத் திகழ்ந்த நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு எவ்விதம் இருந்திருக்கலாமென்பதை வரலாற்று நூல்கள், வெளிக்கள ஆய்வுகள் (Field Work) , தென்னிந்தியக் கட்டடக் கலை நூல்கள் மற்றும் ஆய்வுக் கட்டுரைகளின் அடிப்படையில் விளைந்த தர்க்கத்தின் அடிப்படையில் உய்த்துணர முயன்றதின் விளைவாக உருவானதே இந்த நூல். இதன் முதற்பதிப்பு ஏற்கனவே 1996 டிசம்பரில் ஸ்நேகா (தமிழகம்) மற்றம் மங்கை பதிப்பகம் (கனடா) ஆகிய பதிப்பகங்களின் கூட்டு முயற்சியாக வெளிவந்திருந்தது. இது பற்றிய மதிப்புரைகள் கணயாழி, ஆறாந்திணை (இணைய இதழ்) மற்றும் மறுமொழி (கனடா) ஆகிய சஞ்சிகை இணைய இதழ்களில் வெளிவந்திருந்தன. இலங்கையிலிருந்து கே.எஸ்.சிவகுமாரன் இலங்கையிலிருந்து வெளிவரும் 'டெய்லி நியூஸ்' பத்திரிகையில் இதுபற்றியதொரு விமரிசனத்தை எழுதியிருந்தார். ஈழத்திலிருந்து வேறெந்தப் பத்திரிகை, சஞ்சிகைகளில் இதுபற்றிய தகவல்கள் அல்லது விமரிசனங்களேதாவது வந்ததாயென்பதை நானாறியேன். இருந்தால் அறியத்தாருங்கள் (ஒரு பதிவுக்காக).

இலங்கையில் மட்டுமல்ல தமிழகத்திலிருந்துக் கூட இவ்விதமானதொரு நகர அமைப்பு நூல் நானறிந்த வரையில் வெளிவந்ததாகத் தெரியவில்லை. பொதுவாக நகர அமைப்பு பற்றித் தெரிவித்த தகவல்களைத் திரட்டி ஆய்வு நூல்கள் வந்திருக்கின்றனவே தவிர ஒரு குறிப்பிட்ட நகர அமைப்பு பற்றி முறையான ஆய்வுகளின் அடிப்படையில் ஆய்வு நூலேதும் வந்ததாகத் தெரியவில்லை. இந்நிலையில் இந்நூலுக்கொரு முதனூலென்றதொரு முக்கியத்துவமுண்டு. இந்தத் துறையில் ஆய்வு செய்ய விளையும் மாணவர்களுக்கு முதனூலாகவும் உதாரணப் பிரதியாகவும் நிச்சயம் இந்த நூலிருக்கும். இந்நூலின் அணிந்துரையில் பிரபல எழுத்தாளர் செ.யோகநாதன் கூறுவதுபோல் 'பின்னொருகாலத்தில் ,சுதந்திரக்காற்று வீசும் சூழலில் வாழப்போகின்ற இளந்தலைமுறை ஆய்வாளர்களுக்கு இந்த நூல் ஓர் ஆக்கபூர்வமான வழிகாட்டியாக அமையுமென்று நிச்சயமாக நம்புகின்றேன். ஏற்கனவே வெளிவந்த நூற் பிரதி மேலும் புதுக்கி இங்கு எழுதப்பட்டுள்ளது.

இந்நூலின் முன்னுரையில் கூறியிருப்பது போல் எனக்கு நல்லூர் நகர அமைப்பு பற்றி ஆராய வேண்டுமென்னும் ஆவல் ஏற்பட்டதற்குப் பல காரணங்களுண்டு. சிறு வயதில் நான் படித்த நாவல்கள் குறிப்பாகக் கல்கி , ஜெகசிற்பியன் போன்றவர்களின் நாவல்கள் தமிழர்களின் அன்றைய தலைநகர்களான தஞ்சாவூர், காஞ்சி போன்றவற்றின் நகர் அமைப்பு பற்றி அறியும் ஆர்வத்தினை அதிகரிக்க வைத்தன. நல்லூர் ராஜதானியைப் பொறுத்தவரையில்  போதிய வரலாற்றுச் சின்னங்கள் பாதுகாக்கப் படவில்லை. நல்லூர் இராஜதானி புகழ்பெற்று விளங்குவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் புகழ் பெற்ற தலைநகர்களாக விளங்கிய நகர்கள் அநுராதபுரம், யாப்பகூவா போன்ற தென்னிலங்கை நகரங்கள். அவை பற்றியெல்லாம் விரிவான நூல்கள், ஆய்வுகள் வெளிவந்திருக்கும் போது நல்லூர் இராஜதானியின் நகர் அமைப்பு பற்றிய ஆய்வுகளெதுவும் வெளிவராதது துரதிருஷ்ட்டமானது.

யாழ்ப்பாண வைபவமாலை போன்ற நூல்கள், போர்த்துக்கீசரின் குறிப்புகள் போன்றவற்றில் நகர் பற்றிய தகவல்கள் ஆங்காங்கு காணப்படுகின்றன. அவை தவிர ஆய்வுகள் ஏதும் இதுவரையில் வெளிவந்திருக்கவில்லை எனது இந்த நூல் தவிர. மொறட்டுவை பல்கலைக் கழகத்தில் பயின்று கொண்டிருந்த காலத்தில் 'பாரம்பர்யக் கட்டடக் கலை' (Traditional Architecture) பற்றி நிமால் டி சில்வா என்னும் சிங்களப் விரிவுரையாளர் விரிவுரைகள் நடாத்திக் கொண்டிருந்தார். அப்போது அவர் ரோலன் டி

சில்வாவின் 'பண்டைய அநுராதபுர நகர் அமைப்பு' பற்றிய ஆய்வுக் கட்டுரையினை எமக்கு ஒரு விரிவுரையில் அறிமுகப்படுத்தினார். அதுவும் எனக்கு நல்லூர் இராஜதானி நகர் அமைப்பு பற்றி அறியும் ஆர்வத்தினை ஏற்படுத்தியது. அச்சமயம் கட்டடக் கலை இறுதியாண்டில் பயின்று கொண்டிருந்த நண்பர் தனபாலசிங்கம் தானும் இந்நகர் பற்றி ஆய்வு செய்ய விரும்பியதாகவும் போதிய தகவல்களைப் பெற முடியாத நிலையில் அவ்வெண்ணத்தினைக் கைவிட நேர்ந்ததாகவும் குறிப்பிட்டிருந்தார். அதுவும் எனக்கு நல்லூர் நகர் அமைப்பு பற்றி அறியும் ஆர்வத்தினை அதிகரித்தது. இதன் காரணமாக யாழ்ப்பாணத்தில், வடபகுதியில் காணப்படும் பழமையின் சின்னங்கள் ஆதரிப்பாரற்றுக் கிடக்கும் நிலை பற்றி அறியத் தரும் முகமாகச் சில கட்டுரைகளை யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்த 'ஈழநாடு' பத்திரிகையின் வாரமலரில் எழுதினேன். 'நல்லூர் ராஜதானி'', 'நல்லூர் ராஜதானி நகர அமைப்பு', 'பழைமையின் சின்னங்கள் பேணப்படுதலின் அவசியம்' என்னும் தலைப்புகளில் ஈழநாடு பத்திரிகை அவற்றினை பிரசுரித்திருந்தது. அக்காலகட்டத்தில் தகவல்களைப் பெறும் முகமாக , யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்றில் விஞ்ஞான பிரிவில் பயின்று கொண்டிருந்த நண்பர் ஆனந்தகுமாருடன் பேராசிரியர் கா.இந்திரபாலவைச் சந்தித்தேன். அவர் சுவாமி ஞானப்பிரகாசரின் 'கோப்பாய்க் கோட்டை' பற்றிய கட்டுரை பற்றிக் குறிப்பிட்டிருந்தார். அதன் விளைவாக அது பற்றிக் 'கோப்பாய்ப் பழைய கோட்டையின் கோலம்' என்னும் கட்டுரையினை வீரகேசரியில் எழுதினேன். அதற்குச் சன்மானமாக அவர்கள் முப்பத்தைந்து ரூபா அனுப்பியிருந்தார்கள். மேலும் இவ்வாய்வு சம்பந்தமாக அப்போது யாழ் பல்கலைக்கழகத்தில் மாணவர் தலைவராகவிருந்த கவிஞர் வ.ஐ.ச.ஜெயபாலனைச் சந்தித்தேன். அவர் தன்வசமிருந்த 'யாழ்ப்பாண வைபவமாலை'யினைத் தந்துதவினார். அக்காலகட்டத்தில் 'பழைமையின் சின்னங்கள் பேணப்படுதலின் அவசியம்' பற்றி ஈழநாடு பத்திரிகையில் வெளிவந்த எனது கட்டுரையில் யாழ் சந்தையில் அமைந்திருந்த 'கங்கா சத்திரம்' போன்றவற்றைப் பேணுதலின் அவசியம் பற்றிக் குறிப்பிருந்தேன். அக்கட்டுரை வெளிவந்த சிறிது காலத்தின் பின் அச்சத்திரத்தினை யாழ்மாநகரசபையினர் உடைத்து விட்டனர். அக்காலகட்டத்தில் முழங்காவில் பகுதியில் அமைந்திருந்த 'பல்லவராயன் கட்டுக்' காட்டுப் பகுதியில் ஒரு நாள் முழுவதும் இடிபாடுகளைத் தேடி அலைந்து திரிந்தது மறக்க முடியாத அனுபவம்.

வடக்கில் மட்டுமல்ல, கிழக்கிலும் திருமலை, மட்டக்களப்பு போன்ற மாவட்டங்களில் ஆய்வுகள் நடத்தப்பட வேண்டிய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பல இடங்கள், விடயங்கள் உள்ளன. இவை பற்றியும் ஆய்வுகள் விரிவாக நடத்தப்படவேண்டும் என்பதுமென் அவா. ஈழத்தில் திராவிடர்களின் நகர் அமைப்புக் கலை பற்றிய வரலாற்றின் பரிணாம வளர்ச்சியினை அறிந்து கொள்ளுதற்கு நகர் அமைப்புக் கலையில், கட்டடக் கலையில் பாண்டித்தியம் பெற்றவர்கள், வரலாற்றறிஞர்கள், தொல்பொருள் ஆய்வாளர்களுடன் இணைந்து விரிவான ஆய்வுகள் எதிர்காலத்தில் செய்வார்களென நான் திடமாக நம்புகின்றேன். இதுவரை காலமும் தொல்பொருள் ஆய்வாளர்களும், வரலாற்றுப் பட்டதாரிகள் மட்டுமே நகர் அமைப்புக் கலை அல்லது கட்டடக் கலை பற்றிய போதிய அடிப்படை விடயங்கள் பற்றிய அறிதலோ புரிதலற்று தம் வழியில் ஆய்வுகளை மேற்கொண்ட காரணத்தினால் தான் திராவிடர்களின் நகர் அமைப்புக் கலை பற்றியோ, அல்லது கட்டடக்கலை பற்றியோ விரிவாக ஆய்வு ரீதியில் தமது கவனத்தைப் போதிய அளவில் செலுத்தவில்லையென நான் கருதுகின்றேன். அந்நிலை மாறுவதற்கு அனைத்துப் பிரிவினரும் ஆய்வுகளில் பூரண பங்களிப்பினை வழங்க வேண்டியதன் தேவை முக்கியம்.

பேராசிரியர் கா.இந்திரபாலா இந்த விடயத்தில் விதிவிலக்கானவர். அவர் ஈழத்துத் திராவிடக்கலை பற்றிக் கட்டுரைகள் பல எழுதியிருக்கின்றார். அவரும் கூட ஈழத்துத் தமிழ் மன்னர்கள் காலத்தில் புகழ்பெற்று விளங்கிய இராஜதானிகள் பற்றிய விரிவான நகர் அமைப்பு பற்றியெதுவும் எழுதவில்லை. ஏனைய வரலாற்றுத்துறைப்

பேராசிரியர்களால் வரலாறு பற்றிய ஆய்வுகளைச் செய்ய முடிந்ததே தவிர அதற்கு மேல் அவர்களாலும் செல்ல முடியவில்லை. பொ.ரகுபதி போன்ற தொல்லியர் துறை ஆய்வாளர்களும் அகழ்ந்தெடுத்ததைத்தான் ஆய்வு செய்தார்கள். போதிய ஆதாரங்கள் இல்லாத விடயத்தில் கை வைக்கத் துணியவில்லை. இந்த விடயத்தில் ஈழத்தில் பட்டம் பெறும் கட்டடக் கலைஞர்களின் பட்டப்படிப்பிலுள்ள முக்கிய குறைபாடுகளிலொன்று அவர்களுக்குத் திராவிடக்கட்டடக்கலை பற்றியெதுவும் விரிவாகக் கற்பிக்கப்படுவதில்லை. பெரும்பாலான பட்டதாரிகள் பட்டம் பெற்று வரும் பொழுது திறமையான வரைபடஞர்களாகத்தான் வெளிவருகின்றார்களே தவிர கட்டக்கலைத் துறையிலோ, அல்லது நகர அமைப்புத் துறையிலோ அவற்றின் பலவேறு காலகட்ட பரிணாம வளர்ச்சியினை நன்கு புரிந்து கொண்ட ஆழ்ந்த புலமை மிக்கவர்களாகவோ வெளிவருவதில்லை. அவர்கள் தங்களது பட்டப்படிப்புக்குத் தேவையான ஆய்வுகளுக்குரிய கருப்பொருட்களாக ஏற்கனவே இருக்கும் கோட்டைகள், மாளிகைகள், மடங்கள், கிறிஸ்தவ ஆலயங்கள் போன்றவற்றைத்தான் எடுத்துக் கொள்கின்றார்கள். இந்நிலை மாறி ஈழத்தமிழர்களின் வரலாற்றில் தெளிவற்றுக் கிடக்கும் விடயங்களை தெளிவுபடுத்தும் விடயங்களை மையமாக வைத்து, உதாரணமாக சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நகர்களின் நகர அமைப்பு, காணப்படும் சிதைவுகளின் , வரலாற்றுத் தகவல்களின் அடிப்படையில் நிலவிய கட்டடக்கலை போன்ற விடயங்களை மையமாக வைத்து ஆய்வுகளைச் செய்ய முன்வரவேண்டும். சித்தியடைவதை மட்டுமே சிந்தனையாகக் கொண்டு ஆய்வுக்குரிய விடயங்களைத் தெரிவு செய்வதை அவர்கள் குறைத்துக் கொள்ள வேண்டும். நல்லூர் இராஜதானி பற்றி நான் ஆராய விளைந்ததற்கு இதுவுமொரு முக்கிய காரணங்களிலொன்று. தமிழ்ப்பகுதிகளிலுள்ள பல்கலைக்கழங்களில் கட்டடக்கலை பற்றிய பட்டப் படிப்பினை ஆரம்பிக்க முயற்சிகளெடுக்க வேண்டும். திராவிடக்கட்டடக்கலை/ நகர அமைப்பு பற்றிய ஆய்வுகள் அதிகரிப்பதற்கிது உதவும். மேலும் முன்பே குறிப்பிட்டுள்ளதுபோல் கட்டடக்கலை/நகர அமைப்புத் திட்டமிடும் வல்லுனர்கள், வரலாற்றுப் பேராசிரியர்கள், தொல்லியல் ஆய்வாளர்கள் கிய அனைத்துப் பிரிவினரும் ஒன்றிணைந்து இயங்குவதன் மூலம் ஈழத்தமிழர்களின் கட்டடக்கலை, நகர அமைப்புக் கலை பற்றிய பல ஆய்வுகளைத் துரிதமாக்க முடியும். இது ஈழத்துக்கு மட்டுமல்ல தமிழகத்துக்கும் கூடப் பொருந்தும். அங்கும் பண்டைய தமிழர்களின் இராஜதானிகள் அல்லது புகழ்பெற்ற புராதன நகர்கள் பற்றிய விரிவான ய்வுகளேதும் வந்ததாக நானறிந்த வரையில் தெரியவில்லை. திராவிடக்க கட்டடக்கலை பற்றிக் கூடத் தமிழில் பிரெஞ்சு அறிஞரான மூவோ துப்ருயல் முயன்ற அளவுக்கு வேறு யாரும் முயன்றதாகத் தெரியவில்லை. பிரபல நாவலாசிரியர் மறைந்த நா. பார்த்தசாரதி தமிழர்களின் நகர் அமைப்புக் கலை பற்றிச் சங்க இலக்கியங்களில் கூறப்படும் தகவல்கள் அடிப்படையில் பொதுவானதொரு நூலொன்றினை எழுதியிருக்கிறார்; ஆனால் வேறு யாரும் ஏதாவதொரு நகர் பற்றி விரிவாக ஆய்வு பூர்வமாக எழுதியதாகத் தெரியவில்லை. இந்நிலை மாற வேண்டும். இத்தகையதொரு சூழலில்தான் இந்த 'நல்லூர் இராஜதானி: நகர அமைப்பு' என்னுமிந்த நூலுக்கொரு முக்கியமுண்டு. காணப்படும், வீதி/காணிப் பெயர்கள், சரித்திர சின்னங்கள், பண்டைய இந்துக் கட்டடக்கலை/ நகர அமைப்பு பற்றிய ஆய்வுகள், வரலாற்று நூல்கள்/குறிப்புகள் போன்றவற்றின் அடிப்படையில் ஆய்ந்து பெற்ற முடிவுகளின் அடிப்படையில் தர்க்கபூர்வமாக எழுதப்பட்டுள்ள முதனூலென்ற பெருமை இதற்குண்டு.

மேற்படி 'நல்லூர் இராஜதானி: நகர அமைப்பு' நூலினைப் 'பதிவுகள்' வாசகர்களுக்காக இங்கு பிரசுரிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். பதிவுகள் மூலம் உலகின் பல பகுதிகளிலும் வாழும் தமிழ் மக்கள் பலரைச் சென்றடையும் வாய்ப்பிருப்பதால் இங்கு பிரசுரிப்பதும் பொருத்தமானதே.

## அத்தியாயம் ஒன்று: நல்லூரும் சிங்கை நகரும்!

ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்தில் தலைநகராக விளங்கிய நகர்களாக 'சிங்கை நகர்', நல்லூர் ஆகியவற்றைக் கூறலாம். நாக அரசர்களின் காலகட்டத்தில் கதிரமலை என அழைக்கப்பட்ட கந்தரோடை ராஜதானி அந்தஸ்தினை வகித்து வந்தது. அதன்பின் அந்த நிலையினை அடைந்தவை மேற்கூறப்பட்ட சிங்கை நகர், நல்லூர் ஆகிய நகர்களே. வரலாற்று ஆய்வாளர்கள் மத்தியில் மேற்படி சிங்கைநகர், நல்லூர் பற்றிய விடயத்தில் ஒரு குழப்பநிலை நிலவுவதை அவதானிக்க முடிகிறது. ஒரு சாரார் சிங்கை நகரும் நல்லூரும் ஒன்றேயெனெக் கருதுகின்றார்கள். மறுசாராரோ நல்லூரும் சிங்கை நகரும் ஒருவேறு காலகட்டங்களில் இராஜதானிகளாக விளங்கிய இருவேறுநகர்களெனக் கருதுகின்றனர். கலாநிதி சி.க.சிற்றம்பலத்தின் கருத்துப்படி நல்லூரும் சிங்கை நகரும் ஒன்றே. "பொதுவாக நல்லூரே சிங்கைநகரென அழைக்கபப்ட்டு வந்தது எனலாம்..'(கட்டுரை: யாழ்ப்பாண இராச்சியம்; ஈழமுரசு(கனடா) 25-02-1994).

"..குவேறா சுவாமிகளின் சான்றுப்படி கரையிலிருந்து நல்லூருக்கு வரும் வழியில் சுங்குநயனார் (chungainayanar) அதாவது சிங்கைநகர் எனும் பலமான அரணுள்ள இடம் பற்றிக் குறிப்பு வருகின்றது. இதுவே தமிழ் நூல்களிலும்ம் கோட்டகத் தமிழ்ச் சங்கத்திலும், தமிழகக் கல்வெட்டிலும் வரும் சிங்கைந்கர் அல்லது நல்லூராகும்..."(ஈழமுரசு, கனடா, 11-03-1994).

முத்துக்கவிராசர் என்பவரால் கி.பி.16ஆம் நூற்றாண்டின் முடிவில் அல்லது 17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் கைலாயமாலையும் முதலாவது சிங்கை ஆரியன் நல்லூரைத் தலைநகராக அமைத்த வரலாற்றைக் கூறும். சுவாமி ஞானப்பிரகாசர், முதலியார் செ.இராசநாயகம், கலாநிதி க.செ.நடராசா போன்றவர்களின் கருத்துப்படி நல்லூரும் சிங்கை நகரும் இருவேறு வேறான இரு நகரங்கள்.

"யாழ்ப்பாணத்தில் ஆரியச் சக்கரவர்த்தியின் ஆட்சி கி.பி.13ஆம் நூற்றாண்டில் ஆரம்பித்ததென்பர் வரலாற்றாசிரியர்கள். அம்மன்னர் செகராசசேகரன், பரராசசேகரன் என்ற பட்டப்பெயர்கள் ஒருவர் பின் ஒருவர் ஒருவராகச் சூடிக்கொண்டு சிலகாலம் சிங்கை நகரிலிருந்தும் பின்னர் நல்லூரிலிருந்தும் அரசு செலுத்தினர்.." (க.செ.நடராச்வின் 'ஈழத்தமிழ் இலக்கிய வளர்ச்சி', பக்கம் 6).

"பராக்கிரமபாகுவின் கபடசிந்தையை அறியாத செண்பகப்பெருமாள் யாழ்ப்பாணம் போய்ப் பழைய தலைநகர் பாழாய்ப்போய் விட்டமையினால் நல்லூரிலே கி.பி.1450இல் ஒரு புது நகரெடுப்பித்துச் ஸ்ரீசங்கபோதி புவனேகபாகு என்னும் சிங்கள நாமத்தோடு பதினேழு வருடங்களாக அரசு செய்து வந்தான்.."(முதலியார் இராசநாயகத்தின் 'யாழ்ப்பாணச் சரித்திரம்', பக்கம் 75).

கைலாயமாலை, வையாபாடல் போன்ற நூல்களின் அடிப்படையில் எழுதப்பட்ட யாழ்ப்பாண வைபவமாலையில் மயில்வாகனப் புலவரோ சிங்கையாரியராசன் (முதல் ஆரியராசன்) நல்லூரிலேயே தனது அரசிருக்கையை ஸ்தாபித்ததாகக் கூறுவார்.

இவ்விதமாக நல்லூர் பற்றியும் சிங்கைநகர் பற்றியும் நிலவுகின்ற இருவேறான கருத்துக்களில் சுவாமி ஞானப்பிரகாசர், முதலியார் செ.இராசநாயகம், க.செ.நடராசா போன்றோர் கருதுவது போன்று நல்லூரும் சிங்கை நகரும் இருவேறு நகரங்கள் என்பதே ஏற்கக் கூடியதாக உள்ளது. இவற்றிற்கு ஆதாரங்களாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்.

1. கேகாலையில் கொட்டகமா என்னுமிடத்தில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டொன்று பின்வருமாறு கூறுகிறது. "..கங்கணம் வேற் கண்ணிணையாற் காட்டினார் காமர்வளைப் பங்கயயக்கை மேற்றிலதம் பாரித்தார்- பொங்கொலி நீர்ச்சிங்கைநகராரியனைச் சேராவனுரேசர் தங்கள் மடமாதர்தாம்...".

இவ்வெண்பாவில் 'பொங்கொலிநீர்ச் சிங்கைந்கராரியர்..' என சிறப்பித்துக் கூறப்படுவதுபற்றி முதலியார் செ.இராசநாயகம் பின்வருமாறு கூறுகின்றார்:

"..இச்சிங்கைநகர் அடியடியாகப் பலவாரியச் சக்கரவர்த்திகளுக்கு மகோன்னத இராசதானியாகவதற்கு முதன் முதலடியிட்டவன் இவ்வுக்கிரசிங்கனே. 'பொங்கொலி நீர்ச் சிங்கை நகர்' எனச் சிறப்படை கொடுத்து விதந்தோதப்பட்டிருப்பதால், சிங்கை நகர் பொங்கியெழும் திரையொலியையுடைய சமுத்திரக் கரையோரமென்பது நிதர்சனமாயிற்று. அவ்வாறமைந்துள்ளவிடம் வல்லிபுரக் கோயிலைச் சார்ந்த கடலோரத்தில் மணற்றிடரிற் புதைந்து ஆங்காங்கு கிடக்கும் அனேக பாரிய கட்டடங்களாலும் வலியுற்று வெலிவுற்று உறுதி பெற்றொளிர்கின்றவென்க.." (யாழ்ப்பாணச்சரித்திரம் 235-236). சுவாமி ஞானப்பிரகாசரின் கருத்தும் இதுவே.

2. புகழ்பெற்ற முஸ்லீம் பயணியான இபின் பதூத்தா தனது குறிப்புகளில் ஆரிய மன்னனை 'இலங்கையின் சுலதானெனவும்', பல கப்பல்களுடன் விளங்கிய கடற்படையை அவன் வைத்திருந்தது பற்றியும் தெரிவித்திருக்கின்றான். வலிய கடற்படையையை வைத்திருந்த ஆரியமன்னர்கள் தலைநகரான சிங்கைநகரைத் துறைமுகத்திற்கண்மையில் தான் வைத்திருக்க வேண்டும். இவ்வகையில் நல்லூரைவிட வல்லிபுரமே துறைமுகப் பொலிவு மிக்கதொரு நகர்.

கைலாயமாலை நல்லூரினை 'நல்லைமூதூர்' என அழைக்கின்றது. நல்லூரின் தொன்மையினை இது சுட்டிக் காட்டுகிரது. முதலாம் இராசேந்திர சோழன் காலத்திலேயே நல்லூர் ஓர் ஆலயமமைந்த புனித ஸ்தலமாக விளங்கியதை அறிய முடிகின்றது. யாழ் கோட்டையிலிருந்து பெறப்பட்ட முதலாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டொன்றைப் பற்றிய ஆய்வுகளை ஏற்கனவே கலாநிதி கா.இந்திரபாலா நடத்தியுள்ளார். இது பற்றிக் கலாநிதி சி.க.சிற்றம்பலம் பின்வருமாறு கூறுகின்றார்: "...இக்கல்வெட்டில் தானத்தை அளித்தவராக சாந்தன் காணப்படுகின்றான். நல்லூரிலமைந்த இந்துக் கோயிலுக்கு இவன் அளித்த மிருகங்கள் இதில் குறிப்பிடப்பட்டுள்ளன..." ('சிந்தனை'- யாழ் பல்கலைக்கழகக் கலைபீட வெளியீடு; ஆடி 1984, பக்கம் 121).

ஏற்கனவே புகழ்பெற்று விளங்கிய தொன்மை வாய்ந்த நல்லூரைச் சிங்கைநகரென அழைத்திருப்பார்களாவென்பது சந்தேகத்துக்குரியது. இவற்றையெல்லாம் நோக்கும்போது நல்லூரும், சிங்கைநகரும் இருவேறான நகரங்களென்பதே ஏற்கக் கூடியதாகப் படுகின்றது.

# அத்தியாயம் இரண்டு: நல்லூரும் யாழ்ப்பாணமும்!

கலாநிதி சி.க.சிற்றம்பலம், சுவாமி ஞானப்பிரகாசர் போன்றவர்களின் கருத்துப்படி யாபாபட்டுன எனக் கூறுவது நல்லூரையே. "...யாழ்ப்பாணப் பட்டினம் (சிங்கள நூல்கள் யாபாபட்டுன எனக் கூறுவன) என்பதும் நல்லூரையே குறித்தது எனலாம்". ('யாழ்ப்பாண இராச்சியம்', கலாநிதி சி.க.சிற்றம்பலம்; ஈழமுரசு 25-06-1994). மேலும் சுவாமி ஞானப்பிரகாசர், எஸ்.டபிள்யு.குமாரசுவாமி போன்றவர்களின் கருத்துப்படியும் சிங்களவர் நல்லூருக்கு வைத்த 'யாப்பநே', 'யாப்பா பட்டுநேயே' பின்னர் யாழ்ப்பாணமாக மருவியதென்பதையறியலாம். "..வண. ஞானப்பிரகாச சுவாமியவர்களும் இடப்பெயர் ஆசிரியராகிய திரு.எஸ்.டபிள்யு.குமாரசுவாமியவர்களும் யாழ்ப்பாடியின் கதை புனைந்துரையெனவும் இது போன்ற கதைகள் வையாபாடலிலும், தஷிண கைலாய புராணத்திலும் மலிந்து கிடக்கின்றனவெனக் கூறியதோடு, அந்தகக் கவி வீரராகவன் உண்மைச் சரிதையை யாழ்ப்பாடி தலையில் வைபவமாலைக்காரர் கட்டி வைத்தாரெனவும், அப்படியொருவன் இருக்கவுமில்லை, யாழ்ப்பாணம் பரிசிலாக ஒருவருக்குக் கொடுக்கப் படவில்லையெனவும், சிங்களவர் நல்லூருக்கு வைத்த 'யாப்பநே', 'யாப்பா பட்டுநே'யென்னும் பெயரே பிற்காலத்தில் யாழ்ப்பாணமென மருவியதெனவும், யாழ்ப்பாணன் கதையை எமது புலவர்கள் உருவகப்படுத்தி வைத்தார்களெனவுங் கூறுவர்.."('யாழ்ப்பாணச் சரித்திரம்', செ.இராசநாயகம்; பக்கம் 253).

முதலியார் இராசநாயகம் , கலாநிதி க.செ.நடராசா போன்றவர்களின் கருத்துகள் மேலுள்ள கருத்துக்கு முற்றுமெதிரானது. யாழ்ப்பாணப்பட்டினம் என்ற தமிழ்ப் பெயரின் சிங்களத் திரிபே 'யாப்பாபட்டுநே' என்பதே இவர்களது கருத்து. "...சிங்களப் புலவரொருவர் தங்காலையில் எழுதி வைத்த நூலில் கண்ட 'யாப்பாபட்டுநே'யென்னும் பெயரை யாழ்ப்பாணவாசிகள் எவ்விதமாயறிந்தமைத்துக் கொண்டனரென்பது ஆச்சரியம். 'யாப்பாபட்டுநே'க்கும், நல்லூருக்கும் கருத்துப் பொருத்தமிருந்தாலும் முந்திய பெயரை நல்லூருக்கிட்டு வழங்கவேண்டிய அவசியமில்லை. நல்லூரென முற்காலத்தில் தமிழர் சிங்கள நாட்டிலிட்டு வழங்கிய ஊர்ப்பெயர்களை இன்றும் அவ்வண்ணமே நல்லூரென அழைக்குஞ் சிங்களவர், யாழ்ப்பாணத்திலிருக்கும் நல்லூரென்னும் பெயரைச் சிங்களமாக மாற்றி வைத்தாரென்பது விந்தையே. யாழ்ப்பாணத்திலுள்ள சிங்களப் பெயருடைய ஊர்களையுங் காணிகளையுந் தமிழர்தமிழ்ப் பெயராக்காது விட்டது அதினும் விந்தையே. இனிப் 'பட்டுந' என்பது சிங்கள மொழியா? பட்டினமென்னுந் தமிழ் மொழியின் சிதைவென்பதைப் பள்ளிச் சிறுவருமறிவாரே. ஆகையால் யாழ்ப்பாணப் பட்டினம் என்னுந் தமிழ்ப் பெயரையே 'யாப்பாபட்டுநே'யென்ச் சிங்களவர் சிதைத்து வழங்கினர் என்பது தெளிவாகும்.." (யாழ்ப்பாணச்சரித்திரம்'-முதலியார்.செ.இராசநாயகம்; பக்கம் 254).

இப்பிரச்சினைபற்றிய கலாநிதி க.செ.நடராசாவின் கருத்தும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியது. இவர் இது பற்றி நல்லதொரு விளக்கத்தைத் தந்துள்ளார். "....சிங்களப் பெயராகக் கருதப்பட்ட 'யாப்பாபட்டுன' என்பது 'யாபா' என்ற பதமும், 'பட்டுன' என்ற பதமும் இணைந்த சொற்கூட்டாகும். 'பட்டுன'வென்பது தமிழிலே பட்டினம் என்று வழங்கும் துறைமுக நகரத்தைக் குறிக்கும் சொல்லின் திரிபாகும். அச்சொல் தமிழிலேசங்ககால இலக்கியத் தொகுதிகளுள் ஒன்றான பத்துப்பாட்டில் பட்டினப்பாலை என்ற பாடலில் உபயோகிக்கப்பட்டுள்ளது. இது கிறிஸ்துவுக்கு முற்பட்ட சிங்களச் சொல் என்று கொள்ள எள்ளளவும் இடமில்லை... ..யாவா என்பது யாபா என மருவி வந்தது என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாயில்லை. அதனால் யாபா என்பது ஜாவா என்பதன் தமிழ் உருவம் என்று கருதமுடியாது. அன்றியும் அது ஜாவா என்பதன் சிங்கள வடிவமுமன்று. ஏனெனில் சிங்கள இலக்கியங்களில் ஜாவாவை யாபா என்று குறிப்பிடும் வழக்கம் என்றும் இருந்ததில்லை...அதனால் யாழ்ப்பாணப்பட்டினம் என்ற பெயரைக் கொண்டே சிங்களப் பெயரான 'பாப்பாபட்டுநெ' என்ற பெயர் புனையப்பட்டிருக்கிறது

என்பதே பொருத்தமான முடிவாகும்." ('யாழ்ப்பாணம் என்ற பெயரின் காரணங்கள்' - கலாநிதி.க.செ.நடராசா;' 'தமிழோசை' 11-11-1993).

மேற்படி கட்டுரையில் க.செ.நடராசா தந்து முடிவிற்காதாரமாக இன்னுமொரு காரணத்தையும் முன்வைக்கிறார். "..மேலும் ஊர்ப்பெயர்களை மற்றொரு மொழியிற் பெயர்த்து அவ்வூரவர்களால் உபயோகிக்கப்படும் வழக்கம் நடைமுறையில் இருப்பதில்லை. யாழ்ப்பாணத்து நல்லூரை அதன் சிங்கள மொழி பெயர்ப்பு என்று கருதப்படும் 'யாபனே' என்ற பதத்தால் வழங்காது ஏன் 'நல்லூருவ' என்று வழங்கி வழங்கி வருகின்றார்கள் என்பது விளங்கிக் கொள்ள முடியாததாகி விடும்... எனவே 'யாபனே' என்பது தமிழில் யாழ்ப்பாணம் என்று கூறும் பெயரின் சிங்களத் திரிபென்றே கொள்ள வேண்டும்..." ('தமிழோசை'; 11-11-1993).

மயில்வாகனப் புலவரின் யாழ்ப்பாண வைபவமாலை ((முதலியார் குல.சபாநாதன் பதிப்பித்தது) அந்தகக் கவி வீரராகவனென்னும் யாழ்ப்பாணன் யாழ்பாடிப் பரிசு பெற்றதால் ஏற்பட்ட பெயரே யாழ்ப்பாணம் என எடுத்துச் சொல்லும். "..அக்காலத்திலே சோழ நாட்டிலிருந்து இரண்டு கண்ணுங் குருடனாகிய கவி வீரராகவன் என்னும் யாழ்ப்பாணன் செங்கடக நகரிலிருந்து அரசாட்சி செலுத்தும் வாலசிங்கமகராசன் பேரிற் பிரபந்தம் பாடிக்கொண்டு போய் யாழ் வாசித்துப் பாடினான். அரசன் அதைக் கேட்டு மிக்க சந்தோஷம் கொண்டு அவனுக்குப் பரிசிலாக இலங்கையின் வடதிசையிலுள்ள மணற்றிடல் என்னும் இந்நாட்டைக் கொடுத்தான். யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் என்ற பெயரிட்டு..." ('யாழ்ப்பாண வைபவமாலை'; பக்கம் 25).

மயில்வாகனப் புலவர் கூறும் 'செங்கடகநக'ரென்பது சிங்கை நகரைக் குறிக்குமென்பதே முதலியார் இராசநாயகத்தின் கருத்தாகும். "..சிங்கைநகர் என்னும் பெயரை மயில்வாகனப் புலவரோ அவருக்குப் பின் ஏடெழுதியவர் எவரோ, 'செங்கடகநகர்' என்று வைபவமாலையில் மாற்றி விட்டனர். உக்கிரசிங்கன் காலத்தில் 'செங்கடகநகர்' என்னும் நகர் கனவிலும் அறியப்படாததொன்று." ('யாழ்ப்பாணச்சரித்திரம்'; பக்கம் 29).

"..பின்வந்த யாழ்ப்பாணத்தரசர் காலத்தில் எழுதப்பட்ட நூல்களிலெல்லாம் அவ்வரசர்கள் சிங்கை நகரிலிருந்து அரசாண்டார்களெனக் கூறியிருப்பதால், உக்கிரசிங்கன் தன்னிராசதானியைச் சிங்கைநகருக்கு மாற்றினானென்று கூறுவதே பொருத்தமுடைத்தாம். சிங்கை நகரே பிற்காலத்தில் 'செங்கடக நக'ரெனத் திரிந்திருக்க வேண்டும்" ('யாழ்ப்பாணச் சரித்திரம்'; பக்கம் 235).

'யாழ்ப்பாண சரித்திரம்' என்ற மற்றுமொரு நூலினைத் தந்த ஆசிரியர் ஆ.முத்துதம்பிப்பிள்ளை என்பவரின் கருத்துப்படி கி.மு.2 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஏலேலசிங்கனென்ற மன்னன் அந்தகனான யாழ்ப்பாடி என்பவனிற்குக் கொடையாக வழங்கப்பட்ட நிலமே யாழ்ப்பாணம் என்பதாகும். அதற்காதாரமாக அவர் தனிப்பாடற் திரட்டில் கானப்படும் பின்வரும் பாடலைக் காட்டுவார்:

"..நரை கோட்டிளங்கன்று

நல்வளநாடு நயந்தளிப்பான்

விரையூட்டு தார்ப்புயன்வெற்

பீழமன்னனெ தேவிரும்பிக்

கரையோட்ட மாக மரக்கலம்

போட்டுனைக் காணவந்தாற்

திரை போட்டிருந்தனை யேலேல

சிங்க சிகாமணியே.."

இப்பாடலின் யாப்பைக் கொண்டு இது கி.பி.3 ஆம் நூற்றண்டிற்குப் பிற்பட்டதென்று க.செ.நடராசா கருதுவார். இலனக்கையின் வடபுறத்துலிருந்து மணற்றிடரினைத் திருத்தி வளமாக்கியவன் விபீடணனிடம் யாழ்வாசிக்குமொருவனே என்பதை வையாபாடல் கூறும்.

ம.க.அந்தனிசிலும் இதுபற்றி நல்லதொரு கட்டுரையினை வீரகேசரியில் எழுதியுள்ளார். அதில் அவர் மூவகைப் பாணர்களில் ஒருவரான யாழ்ப்பாணர் வாழ்ந்த இடமே யாழ்ப்பாணமாயிற்று என்று சொல்வார். ",,தமிழருள் பழைய சாதியினரான பாணர் மூவகையினராவர். அவர்களுள் ஒரு பிரிவினரே யாழ்ப்பாணர் என்பதாம். தமிழரின் பழைய இசைக்கருவிகள் மூன்று. அவை யாழ்,குழல், முழவு என்பன. இவற்றில் யாழ் மீட்டிப் பாடிடும் பாணரே யாழ்ப்பாணர் என்ற பெயரைப் பெற்றனர். காலப்போக்கில் அது சாதிப்பெயராக மாறியது. எனவே யாழ்ப்பாணர் என்பது சாதிப்பெயராகும்....அவ்வாறு தமிழ்ப் பெருங்காப்பியங்களிலும் இலக்கியங்களிலும் சொல்லபப்ட்டிருக்கும் யாழ்ப்பாணர் என்னும் சாதியினரில் ஒரு பகுதியினர் இலங்கைத் தீவின் வடபகுதியில் வாழ்ந்த இடமே யாழ்ப்பாணம் என்ற பெயரைப் பெற்றது." ( 'வீரகேசரி; 9-12-1990).

*1இது பற்றி முதலியார் குலசபாநாதனும் கருத்துத்தெரிவித்துள்ளார். "..யாழ்ப்பாணம் எனும் பெயர் 15-ஆம் நூற்றாண்டுச் சிங்கள நூலிற்றான் முதன் முதற் காணப்படும். 14-ஆம் நூற்றாண்டிறுதியில் இருந்தவராகக் கருதப்படும் அருணகிரிநாதர் 'யாழ்ப்பாணாயன் பட்டின மருவிய பெருமாளே' எனக் குறிப்பிட்ட இடம் யாழ்ப்பாணத்தையே குறித்ததென்றும், அதனால் யாழ்ப்பாணம் எனும் பெயர் தமிழ்ப் பெயரெனவுங் கொள்வர் ஒரு சாரார். அருணகிரிநாதர் குறித்த இடம் எருக்கத்தம்புரியூர் என்பாருமுளர். எங்னனமாயினும், அருணகிரிநாதர் குறிப்பிட்ட தலம் ஈழநாட்டின் கண்ணதேயென்பது வலியுறின், யாழ்ப்பாணம் எனும் சொல் சிங்களப் பெரடியாகப் பிறந்ததெனுங் கொள்கை வலியிழந்துபடும்." [முதலியார் குலசபாநாதன் பதிப்பித்த 'யாழ்ப்பாண வைபவமாலை'; பக்கம் 24 , அடிக்குறிப்பு.]

இவற்றையெல்லாம் பார்க்கும் பொழுது பின்வரும் முடிவுக்கே வர முடிகிறது. நல்லூர் என்பதன் சிங்கள மொழிபெயர்ப்பான 'பாப்பாபட்டுநே' என்பதிலிருந்து வந்த பெயரே யாழ்ப்பானம் எனப்திலும் பார்க்க , யாழ்ப்பாணம் என்ற தூய தமிழ் சொல்லின் சிங்களத் திரிபே 'யாப்பாபட்டுநே' என்பதே பொருத்தமுடையதாகப் படுகின்றது. 'பாப்பாப் பட்டுநேக்கும் நல்லூருக்கும் கருத்துப் பொருத்தமிருந்தாலும், முந்திய பெயரை நல்லூருக்கிட்டு வழங்க வேண்டியதில்லை' என்ற முதலியார் இராசநாயகத்தின் கூற்றே ஏற்கக் கூடியதாகவிருக்கின்றது. மேலும் அவரே பிறிதோரிடத்தில் சுட்டிக் காட்டும் '..மேலும் கி.பி.9 ஆம் நூற்றாண்டு முதல் 13 ஆம் நூற்றாண்டுக்கிடையே இத்துறையில் வந்திறங்கிய மேலைத்தேய முஸ்லீம் பிரயாணிகளும் 'ஜப்பா', 'ஸ¤ப்பா'வென அத்தொனிப்படவே கூறியிருக்கின்றனர்..."( 'யாழ்ப்பாணச் சரித்திரம்'; பக்கம் 255) என்ற கூற்றும் கவனத்தில் கொள்ளப்படவேண்டியதே.

மேலும் கைலாயமாலையில் வரும் பின்வரும் பாடலும் யாழ்ப்பாணைத்தையும் நல்லூரையும் பிரித்துக் கூறுவதும் கவனிக்கத் தக்கது.

"..மார்ப்பனாம் புவனேகவாகு

நலமிகும் யாழ்ப்பாண நகரி

கட்டுவித்து, நல்லைக்குலவிய

கந்தவேட்குக் கோயிலும்

புரிவித்தானே..."

இவற்றிலிருந்து இறுதியாக நாம் வரக் கூடிய முடிவு இதுதான். நல்லூரும் சிங்கை நகரும் இரு வேறு வேறான இராஜதானிகள். இரு வேறான நகரங்கள். 'யாப்பாப்பட்டுநே'யென்பது யாழ்ப்பாணத்தின் சிங்களத் திரிபே. நல்லூரின் சிங்கள மொழிபெயர்ப்பான 'யாப்பாப்படுனே'யினின்றும் யாழ்ப்பாணம் என்னும் பெயர் வந்ததென்பது பொருத்தமற்றதாகவே படுகின்றது.

*1 'நல்லூர் ராஜதானி' நூலில் இப்பகுதித்தவறி விட்டது. இங்கு சேர்த்துள்ளோம்.

# அத்தியாயம் மூன்று: நல்லூர் ராஜதானி: வரலாற்றுத் தகவல்கள்!

நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு பற்றிய தகவல்கள் வெகு அரிதாகவே காணப்படுகின்றன. நல்லூர் ராஜதானியின் முக்கிய பகுதிகளாக ஆலயங்கள், சந்தை, அரச மாளிகைகள், தொழிலாளருக்குரிய பகுதிகள், குருக்கள், போர் வீரர், வணிகருக்குரிய இருப்பிடங்கள், நகரைச் சுற்றியமைந்திருந்த மதில், நகரைச் சுற்றி அமைந்திருந்த ஏனைய கோட்டைகள் என்பவற்றைக் குறிப்பிடலாம். பிரபலமான முருக ஸ்தலமாக விளங்கிய நல்லூர் கந்தசுவாமி ஆலயத்தைப் பற்றிப் போர்த்துகேயரின் நூல்களான Conquest of Ceylon, Early Christianity in Ceylon போன்ற நூல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. Conquest of Ceylon நூலினை எழுதிய குவேறாஸ் சுவாமிகளின் (Queroz) குறிப்புகளின்படி நல்லூர்க் கந்தசுவாமி ஆலயம் யாழ்ப்பாணத்திலேயே பெரிய கோயிலாக விளங்கியதையும், இக்கோயிலைச் சுற்றி நெடுமதில்கள் அமைக்கப்பட்டிருந்ததையும் அறிய முடிகிறது. மேலும் மேற்குறிப்பிட்ட நூல்களின்படி மேற்படி கந்தசுவாமி ஆலயம் தற்போது காணப்படும் கிறித்தவ ஆலயமுள்ள பகுதியிலேயேயிருந்தது என்பதையும் அறியக் கூடியதாகவுள்ளது.

யமுனாரிக்குச் செல்லும் ஒழுங்கையில், அதற்கண்மையில் காணப்படும் கட்டடச் சிதைவுகள் இப்பெரிய கோயிலின் மதிலினைச் சேர்ந்ததென்பதேயென்று கலாநிதி கந்தையா குணராசா கூறுவார் (வீரகேசரி 15-08-93).

யாழ்ப்பாண வைபவமாலை முதலாவது சிங்கையாரியராசன் நல்லூரில் இராதானியை அமைத்தது பற்றிப் பின்வருமாறு கூறும்.

"..சோதிடர்கள் தேர்ந்து சொல்லிய நன்முகூர்த்தத்தில் அஸ்திவாரம் போட்டு, நாலுமதிலும் எழுப்பி, வாசலும் ஒழுங்காய் விடுவித்து மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும், பூங்காவும், பூங்காவன நடுவிலே ஸ்நான மண்டபமும், முப்புடைக் கூபமும் உண்டாக்கி, அக்கூபத்தில் யமுனாநதித் தீர்த்தமும் அழைப்பித்துக் கல்ந்துவிட்டு, நீதி மண்டபம், யானைப்பந்தி, குதிரைப்பந்தி, சேனாவீரர் இருப்பிடம் முதலிய அனைத்தும் கட்டுவித்து, தன்னுடன் வந்த காசியிற் பிரமகுல திலகரான கெங்காதர ஐயரும், அன்னபூரணி அம்மாள் என்னும் அவர் பத்தினியும் வாசஞ் செய்வதற்கு அக்கிரகாரமும் உண்டாக்கிக் கீழ்த்திசைக்குப் பாதுகாப்பாக வெயிலுகந்த பிள்ளையார் கோயிலையும் மேற்றிசைக்கு வீரமாகாளியம்மன் கோவிலையும் வடதிசைக்கு சட்டநாதேசுவரர் கோவில், தையல்நாயகியம்மன் கோவில், சாலைவிநாயகர் கோவிலையும் கட்டுவித்துத் திலகவதியார் என்னும் பத்தினியாருடனே கிரகப் பிரவேசஞ்செய்து வாழ்ந்திருந்தான்..." (யாழ்ப்பாணவைபவமாலை; பக்கம் 27).

யாழ்ப்பாண வைபவமாலையின் 'உதயதாரகை"ப் பிரதியின்படி 'தென்றிசைக்குக் கைலை விநாயகர் கோவிலையும்' மேற்படி மன்னன் அமைத்ததாக அறியக் கிடக்கின்றது. மேற்படி வைபவமாலையாரின் கூற்றில் மிகுந்துள்ள வரலாற்று நெறியின்மையைப்பற்றி ஏற்கனவே பார்த்திருந்தோம். சிங்கையாரியன் நல்லூரையல்ல, சிங்கை நகரையே முதலில் தலைநகராக்கினான் என்பதே பொருத்தமான நிலைப்பாடாகும். முதலியார் இராசநாயகத்தின் 'யாழ்ப்பாணச் சரித்திரம்' நல்லூர் இராஜதானியைப் பற்றிப் பின்வருமாறு கூறும்:

"..கனகசூரியன் தன் புத்திரர்களுடனுஞ் சேனைகளுடனும் யாழ்ப்பாணம் வந்து, விஜயபாகுவுடன் போர் புரிந்து அவனைக் கொன்று தான் அரசனாகி நல்லூரிலிருந்து அரசாண்டான். தன் பழைய ராஜதானியாகிய சிங்கைநகர் அழிந்து காடாய்ப் போந்தால்,

நல்லூர் பலவளங்களாலுஞ் செறிவுற்றிருத்தலைக் கண்டு அதனையே புதுக்குவான் வளைந்து, இராசவீதிகளும், அரண்மனைகளும், அவற்றைச் சூழ்ந்து குதிரைப்படை, யானைப்படைக் கொட்டாரங்களும், நறுமணங்கமழும் செவ்விய மலர் பொலிந்திலங்கும் சிங்காரவனமும், பட்டாலும் பருத்தி நூலாலும் நுண்ணிய தொழில் புரமக்களிருக்கைகளும், பலவகை அணிநலஞ் சிறந்த சாளரங்களோடு கூடிய மாளிகைகளும், தச்சர், கொல்லர், ஓவியக்காரர், தட்டார், இரத்தின வணிகர், புலவர், இசை நூல்வல்ல பாணர், இவர்களிற்கு வெவ்வேறிருக்கைகளும், உயர்குடி வணிகர் வாழ் மாளிகை மறுகுகளும், வேதமோதுமந்தணர் மந்திரங்களும், உழுவித்துண்ணுங் காணியாளரோங்கிய மாடங்களும், மருத்துவர், சோதிடர் வாழும் வளமனை வீதிகளும் உழுவித்துண்போருக்குதவி பூண்டு உழுதுண்டு வாழ்வார் குடிகளுமாகிய இவைகளை வேறுவேறு தெருக்களிலமைப்பித்து 'இந்திரன் நகரோ, குபேரன் நகரோ' எனக் கண்டார் வியப்புறக்கவின் பொலிந்திலங்கும் நல்லூரை நல்லூராக ஆக்கினான்..'( யாழ்ப்பாணச் சரித்திரம்; பக்கம் 76-77).

கனகசூரிய சிங்கையாரியனின் புத்திரனான சிங்கைப் பரராசசேகரன் காலத்து நல்லூரைப் பற்றி முதலியார் இராசநாயகம் பின்வருமாறு கூறுவார்:

"...கனகசூரியனுக்குப் பின் அவன் முதற் குமாரன் சிங்கைப் பரராசசேகரன் என்னும் நாமத்தோடு கி.பி.1478இல் அரசனானான். இவனே சிங்கையெனும் பெயரி முதன் முதல் தலைப் பெயராக அமைத்தவன். இவன் தந்தையினுஞ் சிறந்தவனாய் நக்ரிற்கு வடபாலில் சட்டநாதர் திருத்தளியையும் தென் திசையில் கைலாயநாதர் கோயிலையும் குணபாலில் வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்தையும் குடதிசையில் வீரமாகாளியம்மன் திருபதியையும் கட்டுவித்துத் தன் தலைநகரை முன்னையினுமணிபெற விளங்க வைத்தான். கந்தசுவாமி கோயில்றகண்மையில் ஓர் ஏரி அமைப்பித்து, யமுனா நதியின் திவ்விய தீர்த்தத்தைக் காவடிகளிற் கொணர்வித்து அவ்வேரிக்குள்ளே பெய்வுத்து, அதனை யமுனையேரி (யமுனாரி) எனப்பெயர் தந்தழைத்தான்.." (யாழ்ப்பாணச்சரித்திரம்; பக்கம் 77).

நல்லூர் இராஜதானியைப் பொறுத்தவரையில் பல்வேறு ஆவணங்களை நுணுகி ஆராய்ந்த முதலியார் இராசநாயகம் வந்தடைந்த முடிவே ஏற்கக் கூடியதாகவுள்ளது. செண்பகப்பெருமாள் என்ற சபுமல் குமாராயாவின் படையெடுப்பின்போது சிங்கைநகர் உட்பட யாழ்நகர் முழுவதுமே அழிந்துவிட, அவன் நல்லூரில் புதிய இராஜதானியை அமைத்தான். கோட்டையில் ஏற்பட்ட அரசுரிமை காரணமாக அவன் விஜயபாகு என்பவனை நல்லூரில் பொறுப்பாக நிறுத்திவிட்டுச் சென்ற சமயம், முன்னர் செண்பகபெருமாளிடம் தோற்றுத் தமிழகம் சென்றிருந்த கனகசூரிய சிங்கையாரியன் தன்னிரு புத்திரர்களான பரராசசேகரன், செகராரசேகரனுடன் மீண்டும் படையெடுத்து வந்து, விஜயபாகுவிடமிருந்து முன்னர் இழந்த இராச்சியத்தை மீளக் கைப்பற்றிக் கொண்டது வரலாற்று நிகழ்வு. இவன் காலத்திலும், இவனது மகன் காலத்திலும் நல்லூர் இராஜதானி நகர அமைப்பைப் பொறுத்தவரையில் பலமுக்கிய மாற்றக்களைக் கண்டது. நல்லூர் இராஜதானியாகியபின்னர் ஏற்பட்ட இந்த நிகழ்வுகளை, சிங்கைநகரும் நல்லூரும் ஒன்றென நினைத்துக் குழம்பியதால் தான் போலும் கைலாயமாலையாரும் அதனை ஆதாரமாகக் கொண்டு வைபவமாலையினைப் படைத்த மயில்வாகனப் புலவரும் சிங்கை நகரை இராஜதானியாக்கிய ஆரியமன்னன் காலத்தில் நடைபெற்ற நிகழ்வுகளாக எண்ணிவிட்டனர் போலும். அதிகமான வரலாற்றாய்வாளர்களும் முதலியார் இராசநாயகத்தின் கருத்தினை ஏற்றுக் கொள்வதாலும், வைபவமாலையாரின் கூற்றில் காணப்படும் வரலாற்று நெறியின்மையினை முதலியார் இராசநாயகத்தின் கருத்தே சீர் செய்வதாலும், அதுவே எனக்கும் சரியாகப் படுகிறது. இந்த அடிப்படையிலேயே நல்லூர் இராஜதானி பற்றிய வரலாற்றுத் தகவல்கலைச் சரியானதாக ஏற்றுக் கொண்டு கவனத்தை ஏனைய தகவல்களின்பாற் திருப்புவோம்.

## அத்தியாயம் நான்கு: நல்லூர் கந்தசாமி கோயில்!

நல்லூர் இராஜதானியில் அமைந்திருந்த ஏனைய பகுதிகளைப் பற்றி நூல்கள் கூறுவதைச் சிறிது பார்ப்போம். நல்லூர் இராஜதானியின் முக்கிய அம்சங்களில் ஒன்றான நல்லூர்க் கந்தசாமி கோயிலைப் பற்றிய பல முரண்பாடான தகவல்கள் சரித்திர நூல்களில் காணப்படுகின்றன. கைலாயமாலையில் வரும் பின்வரும் பாடலே சர்ச்சைக்குக் காரணம். " ..இலக்கிய சகாப்த மெண்ணூர், றெழுபதா மாண்ட தெல்லை,அலர் பொலி மாலை மார்பனாம் புவனேகவாகு,நலமிகும் யாழ்ப்பாண நகரி,கட்டுவித்து நல்லைக்,குலவிய கந்தவேட்குக், கோயிலும் புரிவித்தானே.." இப்பாடலில் வரும் எண்ணூற்றெழுபதை சுவாமி ஞானப்பிரகாசர், வ.குமாரசாமி போன்றவர்கள் கி.பி.1248 ஆம் ஆண்டைக் குறிக்குமெனக் கருதுவார்கள். மேற்படி பாடலில் உள்ள எண் என்பது ஆயிரத்தைக் குறிக்குமெனவும் ஆயிரத்துடன் நூற்றெழுபதைக் கூட்ட வருவது சகவருடம் 1170 என்பதும் இது கி.பி.1248ஐக் குறிக்கும் என்பதும் இவர்களது கருத்து. டானியல் ஜோன் என்பவரின் கருத்துப்படி சகவருடம் எண்ணூறெழுபது என்பது கி.பி.948ஐக் குறிக்கும் என்பதாகும். முதலியார் இராசநாயகத்தின் கருத்துப்படியும் சகவருடம் 870 என்பது கி.பி.948ஐக் குறிக்கும். இதில் வரும் புவனேகபாகுவை ஆரிய மன்னனின் மந்திரியாகவும், நல்லைக் கோயிலைக் கட்டியவனாகவும் கைலாயமாலை, யாழ்ப்பாணவைபவமாலை போன்ற நூல்களில் குறிக்கப்பட்டுள்ளன. ஆனால் நல்லூர்க் கோயில் கட்டியத்தில் அதனைக் கட்டியவன் சிறிசங்கபோதி புவனேகபாகு எனக் குறிப்பிடப் பட்டிருப்பதை மறைத்து விட முடியாது. இந்தச் சிறிசங்கபோதி புவனேகபாகு என்பவனே கி.பி.1450இலிருந்து கி.பி.1467வரை நல்லூரை இராசதானியாக்கி அதிலிருந்து அரசாண்ட சப்புமல்குமாரய என்பவனாவான்.

கந்தையா குணராசாவின் கருத்துப்படி இந்த இரண்டு புவனேகபாகுகளையும் உண்மைகளாகக் கொண்டு அதற்கொரு விளக்கம் காணப்படிருப்பதை அறியக் கூடியதாகவுள்ளது. முதல் புவனேகபாகுவை இவர் ஒரு தமிழ்ப் பெயராகவே முடிவு செய்கின்றார்.

"..நல்லூர் கந்தசாமி கோயிலைக் கட்டியவர் புவனேகவாகு (தமிழ்ப் பெயர் வீரவாகு போல) என்பதற்கு வேறிரு ஆதாரங்களுமுள்ளன.." (வீரகேசரி 15-08-1993).

"எவ்வாறாயினும் கி.பி.948ஆம் ஆண்டில் புவனேகவாகு என்பவரால் முதன் முதலில் நல்லூர்க் கந்தசாமி கோயில் கட்டப்பட்டது எனக் கொள்ளலாம். இவரை ஓர் அமைச்சரென வரலாற்று நூல்கள் சில குறிப்பதால் சோழ அரசனின் அரசப் பிரதிநி அல்லது அமைச்சர் அவர் எனக் கொள்வதில் தவறில்லை" (வீரகேசரி; 15-08-1993) என்ற முடிவுக்கு வந்தபின் க.குணராசாவினால் இரண்டு புவனேகபாகுவுகளுக்கு இடையில் சமரசம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. இதன்படி இருவேறு புவனேகபாகுவுகளால் இருவேறு காலங்களில் கட்டப்பட்ட நல்லூர்க் கந்தன் ஆலயம் போர்த்துக்கேயரால் இடிக்கப்பட்டு மூன்றாவது முறையாகக் கட்டப்பட்டது என்ற முடிவுக்கே இறுதியாக இவரால் வர முடிகிறது. இவரால் குறிப்பிடப்படுகின்ற வரலாற்று நூல்கள் உண்மையில் யாழ்ப்பாண வைபவமாலை, கைலாயமாலை போன்றவையே. இந்நூல்களில் கூறப்பட்டுள்ள வரலாற்று நிகழ்வுகள் பல வரலாற்று நெறியின்றி அமைந்துள்ளன என்பது முதலியார் இராசநாயகமுட்படப் பல வரலாற்றாய்வாளர்களின் முடிவாகும். இந்தப் பிரச்சனையில் முதலியார் இராநாயகத்தின் முடிவே தர்க்கரீதியாக ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவுள்ளது.

"..புவனேகபாகு முதலரசனாகிய செகராசனுடைய மந்திரியெனக் கைலயாயமாலையும், அவனே நல்லூர்க் கந்தசாமி கோயிலைக் கட்டினானென வைபவமாலையும் கூறும். ஆனால் புவனேகபாகு நல்லூர்க் கந்தசாமி கோயிலைக் கட்டினானென்னும் கேள்வி வழக்குவரை உண்மையாகலாம். கேள்விப்பட்ட கைலயாயமாலையார் நூலெழுத முன்னூறு வருடங்களுக்குள் வாழ்ந்த புவனேகபாகுவை இன்னாரென அறிய முடியாமலோ, அன்றிச் சிங்களவரென்பதை மறைத்து விட வேண்டுமெனக் கருதியோ, யாதினாலோ அவனை செகராசனுடைய மந்திரியென அலங்கரித்து விட்டார். நல்லூர்க் கந்தசுவாமி கோயிற் கட்டியத்தில் ஸ்ரீசங்கபோதி புவனேகபாகு எனப் புகழ்ந்து கூறுவது கேட்கப்படுவதால் அதனை மறைக்க எவராலும் முடியாது." (யாழ்ப்பாணச் சரித்திரம்: பக்கம் 252).

இது இவ்வாறில்லாமல் கந்தையா குணராசா கூறுவது போல இரு புவனேகபாகுகளால் இருவேறு காலங்களில் நல்லூர் முருகன் கோயில் கட்டப்பட்டது உண்மையாயிருந்தால் அது ஆச்சரியமானது. ஏனெனில் இருவருக்கும் புவனேகபாகு என்ற ஒரே பெயர் ஏற்பட்டது (அதுவும் இருவேறு இனங்களைச் சேர்ந்த) சாதாரணமாக ஏற்படக் கூடிய நிகழ்வல்ல. அதற்கான சாத்தியம் அரிதானதே.

## அத்தியாயம் ஐந்து: நல்லூர்க் கோட்டையும் மதில்களும்!

தமிழ் அரசர்கள் தங்களது இராஜதானிகளையே கோட்டைகளாக அமைப்பது பாதுகாப்புக் காரணங்களினால் ஏற்பட்ட வழக்கம். நல்லூர்க் கோட்டையைப் பற்றி யாழ்ப்பான வைபவமாலை, கைலாயமாலை, போத்துக்கேய மற்றும் கோகில சந்தேஸ (குயில் விடு தூது) போன்ற சிங்கள நூல்கள் ஆகியவற்றில் ஆங்காங்கே குறிப்புகள் காணப்படுகின்றன. தமிழகத்தில் தலைமறைவாகவிருந்துவிட்டு, மீண்டும் படையெடுத்து வந்த கனகசூரிய சிங்கையாரியனைப் பற்றி யாழ்ப்பாண வைபவமாலை பின்வருமாறு கூறும்:
"....கனகசூரிய சிங்கையாரியன் மதுரையிற் சேர்ந்த பொழுது பாண்டிநாட்டைப் பகுதியாய் ஆண்ட சிற்றரசர் பலரும் சேனைகளையும் ஆயுதங்களையும் கொடுத்துவிட, அவன் சகல ஆயுதங்களுடனேயே யாழ்ப்பாணம் வந்து சேர்ந்து, மேற்கு வாசல் வழியாக நுழைந்தான்" (வைபவமாலை; பக்கம்:47)  இங்கு குறிப்பிடப்பட்டுள்ள மேற்கு வாசலென்பது நலூர்க் கோட்டையிம் மேற்கு வாசலே என்பது வெள்ளிடமலை.

இம்மேற்கு வாசலைப்பற்றிப் பறங்கிகளின் படையெடுப்புப் பகுதியிலும் கூறப்பட்டுள்ளது. "...யுத்தம் வாசற்புறத்தே நல்லூர்க் கோட்டையின் கோவிலுக்கு முன்னதாகவிருந்த வெளியையே இடமாக நியமித்துக் குறித்த நாளிலே யுத்தத்தை ஆரம்பித்துப் பதினொரு நாளாக நடத்தினார்கள்" (வைபவமாலை; பக்கம் 70).

இந்த யுத்தத்தைப் பற்றிப் போர்த்துகேயரின் குறிப்புகளும் விபரமாக விளக்குகின்றன. Conquest of Ceylon நூலில் வீரமாகாளியம்மன் கோவிலுக்கு அண்மையில் நல்லூர்க் கோட்டையின் மேற்கு வாயில் அமைந்திருந்ததும், யுத்தம் நிகழ்ந்ததும் குறிப்பிடப்பட்டுள்ளது. நல்லூர்க் கோட்டைக்கு வடக்கு வாயிலொன்று இருந்த விபரமும், அதற்குப் பாதுகாப்பாகச் சிவாலயமொன்று இருந்த விபரமும் வைபவமாலயில் வரும் சுபதிட்ட முனிவர் கதையில் கூறப்பட்டுள்ளன:

"...அவ்வாலயங்களில் வடமதில் வாயில் காப்பாக நின்ற சிவாலயம் ஒன்று மாத்திரமே சிவகடாட்சம் பெற்ற ஒருவனால் முதன் முதல் நிறைவேறும்" (வைபவமாலை; பக்கம் 53-54).

நகரின் கிழக்கு அல்லது தெற்கு வாயில்கள் பற்றிய குறிப்புகளை வரலாற்று நூல்களிலிருந்து என்னால் பெற முடியவில்லை. போர்த்துக்கேயரின் நூல்கள் போன்ற வரலாற்று நூல்களை இந்த விடயத்தில் மீண்டுமொருமுறை நுணுகி ஆராய வேண்டுமென்பது எனது அவா. அதன் மூலம் மேலும் பல உண்மைகள் கிடைக்கக் கூடும்.

### சந்தை பற்றிய தகவல்கள்!

போர்த்துக்கேயரின் நூல்களிலொன்றான Early Christianity in Ceylon (17th Centuray Narrative) நல்லூர் இராஜதானியிலமைந்திருந்த சந்தை பற்றியும், இச்சந்தையின் நடைமுறைகளை அரசன் தனது மாளிகையிலிருந்து பார்க்கக் கூடியதாகவிருந்ததையும் கூறுகின்றது. இச்சந்தையே முத்திரைச் சந்தையாகவிருக்க வேண்டும். தமிழரசர் காலத்தில் சந்தையில் விற்கப்படும் துணிகள் அரசாங்க முத்திரையிடப்பட்டே விற்கப்பட்டு வந்தனவென்பதை அறியக் கூடியதாகவிருக்கின்றது.

"..தமிழரசர் காலத்திற்போலவே அரசாட்சி முத்திரையில்லாத துணிகள் விற்கப்படமாட்டா. முத்திரை குத்துவதற்கும் ஒரு வரி அறவிடப்பட்டது. "(யாழ்ப்பாணச்சரித்திரம்; பக்கம் 48). இதனால்தான் முத்திரைச் சந்தை என்னும் பெயர் தோன்றியிருக்கலாம் போற்படுகின்றது.

## யமுனா ஏரி!

தற்போது நல்லூர்ப் பகுதியில் அரிதாகக் காணப்படும் பழமையின் சின்னங்களில் ஒன்றான யமுனாரிபற்றியும் பல்வேறுவிதமான கருத்துகள் நிலவுகின்றன. தமிழ் மன்னர்கள் நீராடப் பாவித்த கேணி இதென்பர் ஒரு சாரார். மறுசாராரோ பெரிய கந்தசாமி ஆலயத்திற்குரிய தீர்த்தக் கேணியென்பர். இக்கேணியை முதலாவது சிங்கையாரியராசன் கட்டியதாக வைபவமாலையார் கூறுவார். முதலியார் இராசநாயகமோ கனகசூரிய சிங்கையாரியனின் புத்திரர்களில் ஒருவனான சிங்கைப் பரராசசேகரன் என்பவனே கட்டியமைத்தான் எனக் கூறுவார்.

இந்த யமுனா ஏரி பழைய கந்தசாமி கோவிலிருந்த இடத்திற்கு அண்மையில் இருப்பதாலும், இந்துக்களின் புனித நதிகளில் ஒன்றான யமுனா நதியினின்றும் கொண்டு வரப்பட்ட நீரைப் பெய்வித்ததால் யமுனாரி என்று அழைக்கப்படுவதாக குறிப்பிடப்படுவதாலும், தீர்த்தக் கேணியற்று பெரிய முருகன் கோயிலொன்று இருப்பதற்குச் சாத்தியம் குறைவாகவிருப்பதாலும் இந்த யமுனாரி அரச குடும்பத்தினரால் நீராடப் பாவிக்கப்பட்டது என்பதிலும் பார்க்கப் பழைய கந்தசாமி ஆலயத்திற்குரிய தீர்த்தக் கேணியாகவே இருந்திருக்க வேண்டும் என்பதே பொருத்தமுடையதாகப் படுகிறது. 'ப' கரவான இக்கேணி மிகவும் அழகானது. பின்னாளில் அந்நியர் ஆட்சிக் காலங்களில் அவர்களால் நீராடப் பயன்பட்டிருக்கலாம். அதனால்தான் போலும் ஜே.பி.லூயி போன்றோர் இக்கேணியானது தமிழ் அரச குடும்பத்தினரால் நீராடப் பயனபட்டது எனக் கருதினர் போலும்.

## நகரமைப்பில் மக்களிருக்கைகள்!

நல்லூர் இராஜதானியில் மக்கள் புரியும் தொழில்களுக்கேற்ப அவர்களுக்குரிய இருக்கைகளும் அமைந்திருந்தன என முதலியார் இராசநாயகம் போன்றோர் கூறுவர். கனகசூரிய சிங்கையாரியனால் மீளக் கைப்பற்றப்பட்ட நல்லூர் புதுக்கியமைக்கப்பட்டதைப் பற்றி யாழ்ப்பாணச் சரித்திரம் பின்வருமாறு கூறும்:

"..நல்லூர் பல்வளங்களாலும் செறிவுற்றிருத்தலைக்கண்டு அதனாலேயே புதுக்குவான் விழைந்து, இராச வீதிகளும், அரன்மணைகளும் அவற்றைச் சூழந்து குதிரைப்படை, யானைப்படைக் கொட்டாரங்களும் , நறுமணங்கமழும் செவ்விய மலர் பொலிந்திலங்குஞ் சிங்கார வனமும், பட்டாலும் பருத்தி நூலாலும் நுண்ணிய தொல்ழிபுரி மக்களிருக்கைகளும் பல்வகை அணிநலஞ் சிறந்த சாளரங்களோடு கூடியமாளிகைகளும், தச்சர், கொல்லர், ஓவியக்காரர், தட்டார், இரத்தின வணிகர், புலவர், இசைநூல் வல்ல பாணர் இவர்களுக்கு வெவ்வேறிருக்கைகளும்..."
(யாழ்ப்பாணச்சரித்திரம்)

இவ்விதமாக நகர அமைப்பு காணப்பட்டது. இதில் எவ்வளவு தூரம் உண்மையிருந்தது என்பதைப் பின்னர் இந்துக்களின் நகர் அமைப்புக் கோட்பாடுகளைத் தற்போதைய நல்லூரில் காணப்படும் வீதி, மற்றும் காணிப்பெயர்களை ஆராயும்போது கண்டு கொள்ளலாம்.

## நகரில் காணப்பட்ட கட்டடங்கள்!

பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்று கருதப்படும் கோகில சந்தேஸமென்னும் (குயில் விடு தூது) சிங்கள் நூலில் (இது சப்புமல் குமாரயாவின் யாழ்ப்பாண வெற்றியைப்

புகழ்ந்து பாடுவதற்காக எழுதப்பட்டது) நகரில் அமைக்கப்பட்டிருந்த கட்டடங்களைப் பற்றியும் விபரிக்கபப்ட்டுள்ளது.

"..யாபாபடுனவிலே சிறந்த உயர்ந்த கட்டடங்கள் நிரை நிரையாக உள்ளன. பொன்மயமான கொடிகள் இவற்றினை அலங்கரிக்கின்றன. குபேரனின் தலைநகரான அழகாபுரியுடன் இது ஒப்பிடற்பாலது.." (யாழ்ப்பாண் இராச்சியம்; கலாநிதி சி.க.சிற்றம்பலம்).

நல்லூர்க் இராஜதானிக்குப் பாதுகாப்பாக மூன்று சிறு கோட்டைகள் இருந்ததைப் போர்த்துக்கேயரின் குறிப்புகள் கூறி நிற்கின்றன. இவை கோப்பாய், பண்ணைத்துறை மற்றும் கொழும்புத்துறை ஆகிய இடங்களில் அமைக்கப்பட்டிருந்தன. பண்ணைத்துறைக்கு அண்மையில் காணப்படும் கொட்டடி என்பது கோட்டையடி என்பதன் திரிபாகவே படுகின்றது. இக்கோட்டைகளை நல்லூர் இராஜதானியுடன் இணைக்கப் பிரதான வீதிகள் இருந்ததையும், இவ்வீதிகள் நெடுக ஆங்காங்கே காவலரண்கள் இருந்தமையும் போர்த்துக்கேயரின் நூல்கள் கூறுகின்றன.

பறங்கிகள் நல்லூர் இராஜதானிமேல் தொடுத்த போர்பற்றிய விபரங்க்ளை நேர்முக வர்ணனை போன்று குவேறாஸ் குருக்களின் Conquest of Ceylon விபரிக்கின்றது.

# அத்தியாயம் ஆறு: வெளிக்கள ஆய்வுத் தகவல்கள்!

பழமையின் சின்னங்களைப் பாதுகாப்பதைப் பொறுத்தவரையில் தமிழர்கள் பொதுவாகப் பின்தங்கியவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆண்ட பெருமையை, பழைய வரலாற்றைப்பற்றி வாயளக்கின்ற அளவுக்குப் பழமையின் சின்னங்களைப் பாதுகாப்பதில் நம்மவர்கள் போதிய கவனம் செலுத்துவதில்லை என்பதற்கு நல்லூர் மட்டுமே போதுமானது. ஒரு காலத்தில் இராஜதானியாக விளங்கிய நகரில் இருக்கின்ற ஒரு சில வரலாற்றுச் சின்னங்கள் கூட பரிதாபகரமான நிலையில்தான் காணப்படுகின்றன. புதர்மண்டிக் கிடக்கும் யமுனாரி, கட்டடச் சிதைவுகளுடன் அமைதியிலாழ்ந்து கிடக்கும் பண்டாரக்குளம், தன்னகத்தே ஒரு காலகட்ட வரலாற்றைக் கூறிக்கொண்டிருக்கும் கோப்பாய்க்கோட்டையிருந்ததாகக் கருதப்படும் நிலப்பரப்பு,.. இவையெல்லாம் எத்தனையோ கதைகளைக் கூறி நிற்கின்றன. நல்லூர் இராஜதானியின் பெருமைகளை விளக்கக் கூடிய கட்டடச் சின்னங்கள் மிகச் சொற்ப அளவிலேயே காணக்கிடந்தாலும் தற்போதும் வழக்கிலிருந்து வரும் காணிப்பெயர்கள், வீதிப்பெயர்கள் மூலம் நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு பற்றிய தகவல்களை ஓரளவிற்கு உய்த்துணர முடிகின்றது.

தற்போது காணப்படும் ஆலயங்களான சட்டநாதர் ஆலயம், வெயிலுகந்தத பிள்ளையார் கோயில், கைலாசநாதர் ஆலயம், வீரமாகாளியம்மன் மற்றும் நல்லைக் கந்தன் ஆலயம் யாவுமே போர்த்துக்கேயரால் இடித்தொழிக்கப்பட்டுப் பின்னர் கட்டப்பட்டவை. இவை நல்லூர் இராஜதானியாக இருந்தபோது உருவான கட்டடங்களாகவில்லாத போனாலும், இராஜதானியாக நல்லூர் நிலவிய போதிருந்த ஆலயங்களின் நகல்களே என்பதால் இவையும் மறைமுகமாக நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பை எடுத்துக் காட்டும் சின்னங்களாகவே திகழ்கின்றன. .

## முத்திரைச் சந்தை!

நல்லூர் ஆலயத்திற்குக் கிழக்காகச் செல்லும் வீதியும், பருத்தித்துறை வீதியும் சந்திக்குமிடத்தை அண்டிய பகுதி முத்திரைச் சந்தை அழைக்கபப்டுகின்றது. தமிழரசர்களின் இராஜதானியாக நல்லூர் இருந்த காலத்தில் இங்குதான் சந்தையிருந்திருக்க வேண்டும். இம்முத்திரைச் சந்தையென்னும் பகுதியினூடு பயணித்த பொழுது , ஒரு காலத்தில் அப்பகுதியில் நிலவியிருக்கக் கூடிய சந்தைக்குரிய ஆரவாரத்தையும், மாளிகையிலிருந்து அதன் நடைமுறைகளை அவதானித்துக் கொண்டிருந்த ஆரிய மன்னர்களையும் ஒருகணம் நினைக்காமலிருக்க முடியவில்லை.

## தொழிலாளர்களுக்குரிய தென்கிழக்குப் பகுதி!

பொதுவாகச் சந்தை நகரின் மையத்திலேயே அமைந்திருப்பது வழக்கம். நல்லூர் இராஜதானியின் மையமாக இச்சந்தையிருந்திருக்கும் சாத்தியத்தை மனதிலெண்ணி, நகரினூடு வெளிக்கள ஆய்வை நடத்தியபொழுது பல ஆச்சரியம் தரக்கூடிய தகவல்களை அறிய முடிந்தது.

இச்சந்தைக்குத்த்தென்கிழக்காக அமைந்துள்ள பகுதியில் காணப்பட்ட பெயர்கள் பொதுவாக தொழிலாளர்களையே குறிப்பதையறிய முடிந்தது. தட்டாதெரு, சாயாக்காரத்தெரு, 'கொப்பர் ஸிமித் தெரு', 'டையர்ஸ் தெரு' போன்ற வீதிப்பெயர்கள் அப்பகுதி ஒருகாலத்தில் தொழிலாளர்களுக்குரிய இருப்பிடமாகவிருந்திருக்கலாமென்பதைக் குறிப்பாகக் கூறி நிற்கின்றன.

## வணிகர், வீரர் அரண்மனை ஊழியர்களுக்குரிய தென்மேற்குப் பகுதி!

தென்மேற்குப் பகுதியில் காணப்படும் வீதி, காணிப்பெயர்கள் ( குங்கைக்கணக்கன் வளவு, இராசகுலத்தான் வளவு, செட்டி வீதி போன்ற )பொதுவாக வணிகர்கள், அரண்மனை ஊழியர்கள், வீரர்கள் போன்றோர்க்குரிய பகுதியாக அப்பகுதி அமைந்திருக்கலாமோவென்ற சந்தேகத்தினை எழுப்புகின்றன.

## அரசர், அந்தணர், அரசவைப் புலவருக்குரிய பகுதி!

முத்திரைச் சந்தைக்கு வடமேற்காக அமைந்துள்ள பகுதி நல்லூர் இராஜதானியின் முக்கியத்துவம் வாய்ந்த பகுதியென்பதை அப்பகுதியில் காணப்படும் காணி, வீதிப் பெயர்கள், பண்டாரக்குளம் போன்றவை அறிவித்து நிற்கின்றன. முக்கியமான பகுதிகளாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்:

1) சங்கிலித் தோப்பு (மந்திரிமனை அமைந்துள்ள பகுதியின் காணிப்பெயர் சங்கிலித் தோப்பென நில அளவை வரைபடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் 'கல்தோரண வாயில்' எனும் முகப்புள்ள பகுதி சங்கிலித் தோப்பெனப் பொதுமக்களால் அழைக்கப்பட்டு வந்தாலும், அம்முகப்பு அமைந்துள்ள காணித்துண்டின் பெயர் பாண்டிமாளிகை வளவு என நில அளவை வரைபடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.)

2) சங்கிலியன் வீதி,

3) அரச வீதி,

4) பண்டார மாளிகை வளவு,

5) அரசகேசரி வளவு,

6) குருக்கள் வளவு,

7) அரச வெளி,

8) மந்திரிமனை

சங்கிலித் தோப்பு, சங்கிலியன் வீதி, அரச வீதி, அரசவெளி, பண்டாரமாளிகை வளவு, பண்டாரக்குளம் போன்ற பெயர்களே தமிழ் அரசுக்கும், அவற்றிற்குமிடையிலான தொடர்பினைக் கூறி நிற்கின்றன. பண்டார மாளிகை, பண்டாரக்குளம் போன்ற பெயர்களிலுள்ள 'பண்டார'மென்பது தமிழ் அரசரைக் குறிக்குமென்பது பலரது கருத்து. முதலியார் குல சபாநாதன் இது 'பரராசசேகர பண்டாரத்தைக் குறிக்கு'மென்பார். பண்டாரமென்ற பெயரில் முடியும் தமிழ் மன்னர்கள் பலர் இருந்திருக்கின்றார்கள். புவிராஜ பண்டாரம் அவர்களிலொருவன். பரராசசேகரனின் பட்டத்து மனைவியான இராசலக்குமியின் புத்திரர்களிலொருவனின் பெயரும் பண்டாரம்.




பண்டாரமாளிகை வளவு என்ற பெயரில் வழங்கப்படும், ஆறு ஏக்கர் விஸ்தீரணமுள்ள தென்னந்தோப்பு, தற்போதைய நல்லூர் முத்திரைச் சந்தையை அண்மித்த, பருத்தித்துறை வீதியை நோக்கிக் காணப்படுகிறது. இவ்வளவின் பருத்திதுறை வீதியை நோக்கிய பகுதியில் பண்டாரமாளிகை என்ற எழுத்துகள் பொறிக்கப்பட்ட தூணொன்று காணப்படுகின்றது. இதற்கண்மையில் சிறியதொரு முகப்புடன் கூடிய வயிரவர் சிலையொன்று காணப்படுகின்றது. அம்முகப்பில் பின்வரும் வாசகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன: "இரண்டாயிரம் ஆண்டு பழமை வாய்ந்த தமிழ் மன்னர் வழி காத்துப் பூஜித்த நல்லை தேரடிப் பதியுரை பண்டாரமாளிகை வாசல் ஶ்ரீ பைரவர் ஆலயம் ஆதிமூலம் உள்ளே"

## அரசகேசரி வளவு!

இப்பகுதியில் காணப்படும் காணித்துண்டொன்றின் பெயர் அரசகேசரி வளவு. காளிதாசனின் வடமொழி நூலான 'இரகுவம்சத்தை'த் தமிழ்ப்படுத்திய தமிழ்க் கவிஞனான அரசகேசரியை ஞாபகமூட்டுவது இந்த வளவு. அரசகேசரியைப் பரராசசேகரனின் மருமகனாக மயில்வாகனப் புலவர் கூறுவார்: "... பரநிருபசிங்கனின் மைத்துனனும், பரராசசேகரனின் மருமகனுமாகிய அரசகேசரி என்பவன் இரகுவம்சம் என்னும் நூலை வடமொழியிலிருந்தும் மொழிபெயர்த்து பிராணநடையாகப் பாடித் திருவாரூரிலே கொண்டு போய் அடைந்தான்" (யாழ்ப்பாண வைபவமாலை -50-51).

முதலியார் இராசநாயகமோ சிங்கைப் பரராசசேகரனின்மைத்துனன் எனச்சொல்வார்:

"..இன்ன காதையின்ற விரும்பொருட்

டுன்னு செஞ்சோற் றுகடபு தூய நூல்

பன்னு செஞ்சோற்பரராசசேகர

மன்ன னின்ப மனங்கொள வாய்ந்ததே.."

சுவாமி ஞானப்பிரகாசரோ இரகுவம்சம் எதிர்மன்னசிங்க பரராசசேகரன் காலத்தில் இயற்றப்பட்டதென்பர். மேற்படி பரராசசேகரன் சிங்கைப் பரராசசேகரனா அல்லது எட்டாம் பரராசசேகரனா என்பதில் நிலவும் குழப்பத்தின் விளவுதான் மேற்படி முரண்பாட்டிற்குக் காரணம்.

## குருக்கள் வளவு!

தற்போதுள்ள நல்லூர் கந்தசுவாமி ஆலயம் அமைந்துள்ள காணியின் பெயர் குருக்கள் வளவு. தமிழரசர் காலத்தில் அந்தணர்கள் வாழ்ந்த பகுதியானதால் இக்காணி குருக்கள் வளவு என அழைக்கப்பட்டது போலும்.

## சங்கிலித் தோப்பும் மந்திரிமனையும்!

தற்போது மந்திரிமனையென அழைக்கப்படும் கட்டடம் 19ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியைச் சேர்ந்ததாகக் கூறுவர். அதற்காதாரமாகத் தற்போதுள்ள கட்டடத்தின்

முகப்பில் பதிக்கப்பட்ட எழுத்துகள் உள்ளன. 1980இல்கட்டப்பட்டது என்பது தெளிவாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. தம்பையாப்பிள்ளை, சிவப்பிரகாசம்பிள்ளை சகோதரர்களுக்குச் சொந்தமானதென்று அம்முகப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது.



ஏற்கனவே இங்கு அரச முக்கியத்துவம் வாய்ந்த மாளிகை இருந்ததா? அவ்விதமிருந்ததால்தான் அப்பகுதியில் போர்த்துக்கீசர் , ஒல்லாந்தர் காலங்களில் மாளிகைகள் கட்டப்பட்டனவா? அவ்விதமான மாளிகையைத்தான் தம்பையாப்பிள்ளை குடும்பத்தினர் வாங்கி, தம் பெயர்களையும் பதிப்பித்து மேலும் புதுப்பித்தார்களா? இவ்விதம் ஊகிக்கலாம். ஆனால் அவற்றுக்கான ஆதாரங்களில்லை. ஆனால் அரச முக்கியத்துவம் வாய்ந்த வடமேற்குப் பகுதியில் அமைந்திருப்பதும். இம்மாளிகை அமைந்துள்ள காணிப்பெயர் 'சங்கிலித்தோப்பு' என்றழைக்கப்படுவதும் கவனத்திலெடுக்கப்பட வேண்டியவை.

இந்தப் பகுதி மன்னனுக்குரியதா அல்லது மந்திரிக்குரியதாவென்பதைத் தீர்மானிப்பது சிறிது சிக்கலானது. இருந்தாலும் இப்பகுதிகண்மையில் அரசவெளி, அரசவீதி, சங்கிலியன் வீதி, பண்டாரக்குளம், பண்டாரமாளிகை வளவு என அரசகுலத்தவர்களுக்கே அதிக முக்கியத்துவம் வாய்ந்தபகுதிகள் அதிகமாக இருப்பதும், மேற்படி மந்திரிமனை அமைந்துள்ள காணித்துண்டு சங்கிலித்தோப்பென நிலஅளவை வரைபடங்களில் குறிப்பிடப் பட்டுள்ளதாலும் தமிழரசருக்குச் சொந்தமான தோப்பொன்று இப்பகுதியில் இருந்திருக்கலாம்; பின்னாளில் அன்னியர் ஆட்சிக்காலத்தில் அவர்கட்கடங்கி பெயருக்கு ஆட்சி புரிந்த தமிழ் மன்னரின் வம்சத்தவர்கள் காலகட்டத்தில் அல்லது அதற்குப் பின்னர் மந்திரியொருவனின் இருப்பிடமாக இத்தோப்பிருந்திருக்கலாமென்று நினைப்பதற்கும் சாத்தியங்கள் இல்லாமலில்லை.

ஐரோப்பிய, திராவிடக் கட்டடக் கலையின் கூறுகளை இக்கட்டடத்தில் காணலாம். நுனியில் குவிந்த வளைவானது (Pointed Arch) 'கோதிக்' வகைக் கட்டடங்களில் காணப்படும் வளைவுகளைப் புலப்படுத்தும். தூணின் போதிகை போன்ற அலங்காரங்கள் திராவிடக் கட்டடக் கலையின் (இறுதிக் காலகட்டத்துக்குரிய) கூறுகளைப் புலப்படுத்துவது அவதானிக்கத்தக்கது. போதிகையின் வடிவத்தின்படி இக்கட்டடம் நிச்சயம் கி.பி.1665இற்குப் பிற்பட்டதென்று கூறலாம். திராவிடக் கட்டடக்கலை பற்றிய ஆய்வுகளைச் செய்த அறிஞர் ழுவோ துப்ருயல் இத்தகைய முழுமையான போதிகைகளைக் கொண்ட தூண்களுள்ள கட்டடங்கள் கி.பி,1650ற்குப் பிறப்பட்டவையென்று கருதினார்.

இவையெல்லாம் மேற்படி வடமேற்குப் பகுதியின் முக்கியத்துவத்தைக் கூறி நிற்கும் சின்னங்களாகும்.

## அரசதெய்வ முக்கியத்துவம் வாய்ந்த வடகிழக்கு!

இந்த வடகிழக்குப் பகுதியில் காணப்படும் முக்கிய வரலாற்றுச் சின்னங்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்:

1) யமுனாரி (யமுனா ஏரி)

2) தற்போது காணப்படும் கிறிஸ்தவ ஆலயமுள்ள பகுதி. இதுவே பழைய கந்தசுவாமி ஆலயம் அமைந்திருந்த பகுதி.

3) ஒல்லாந்துக் கட்டடக் கலையினைப் பிரதிபலிக்கும் மாளிகையொன்றின் முகப்பு. பொதுமக்களால் 'சங்கிலித் தோப்'பென அழைக்கப்படும். பலர் இப்பகுதியில் அரச மாளிகை இருந்ததாகக் கருதுகின்றார்கள். 1903ஆம் ஆண்டில் அரச அதிபராகவிருந்த ஜே.பி.லூயிஸ் (J.P.Lewis) என்பவரும் அவ்வாறே கருதுகின்றார். அவரது கருத்துப்படி யமுனாரி அரசர், அரசியர் நீராடப்பயன்படுத்திய ஏரி. ஆனால் வரலாற்று நூல்களின்படி இவ்வேரி யமுனாரி என்று அழைக்கப்படுவதற்குக் காரணம் யமுனை நதியிலிருந்து கொண்டு வரப்பட்ட தீர்த்தம் இடப்பட்டது என்பதால்தான்.

மேலும் பழைய கந்தசாமி ஆலயம் சுற்றுமதில்களுடன் கூடிய பெரியதோர் ஆலயமாகவிருந்துள்ளதாக அறியப்படுகின்றது. யமுனாரி பழைய நல்லூர்க் கந்தசாமி ஆலயமிருந்த பகுதிக்கு அண்மையிலிருப்பதால் (தற்போதுள்ள செம்மணி சேர்ச் அமைந்துள்ள பகுதியில்தான் நல்லூர் ஆலயம் அமைந்திருந்தது) அது ஆலயத்துக்குரிய தீர்த்தக்கேணியாக இருந்திருப்பதற்கே சாத்தியங்கள் அதிகமுள்ளன. புனித நதியின் தீர்த்தமிடப்பட்ட கேணியை அரச, அரசியர்கள் நீராடப்பாவித்திருப்பார்கள் என்பது ஏற்றுக்கொள்ளக்கூடியதாகவில்லை. ஆனால் பின்னாளில் ஒல்லாந்தர் தமது மாளிகையைத் தற்போதுள்ள முகப்பு அமைந்துள்ள பகுதியில் அமைத்திருக்கலாம். அழகான யமுனாரி கேணியைத் தாம் நீராடுவதற்குப் பாவித்திருக்கலாம். அப்பொழுது அங்கு பழைய நல்லூர் ஆலயம் அழிக்கப்பட்டு கிறிஸ்தவ ஆலயம் கட்டப்பட்டிருந்ததால் கேணியின் புனிதம் பேணப்பட வேண்டிய தேவையிருக்கவில்லை.

தற்போதுள்ள முகப்பு அமைந்துள்ள காணித்துண்டின் பெயர் 'பாண்டிமாளிகை வளவு' என நில அளைவை வரைபடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது இப்பகுதியில் அரச முக்கியத்துவம் வாய்ந்த இருப்பிடம் அல்லது இருப்பிடங்கள் அமைந்திருக்காலம் என்பதைப்புலப்படுத்துகின்றது.

மேற்படி சரித்திரச் சின்னங்களே இப்பகுதி அரச, தெய்வ முக்கியத்துவம் வாய்ந்த பகுதியென்பதைப் புலப்படுத்தும்.

# அத்தியாயம் ஏழு: 'கோட்டை வாசலும், கோட்டையடியும் வெயிலுகந்தபிள்ளையார் ஆலயமும்'

முத்திரைச் சந்தையை மையமாக வைத்துப் பார்க்கும்போது தற்போதைய நல்லூர்ப் பகுதியில் காணப்படும் ஒருவிதமான ஒழுங்கு நிறைந்த அமைப்பு பழைய நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு முறையைக் குறிப்பாக உணர்த்திக் கொண்டிருப்பதை அவதானிக்க முடிகிறது. இதே சமயம் நல்லூர் இராஜதானியின் மேற்கு, வடக்கு வாசல்களைப் பற்றி வரலாற்று நூல்கள் கூறுவது நினைவுக்குவரவே, இராஜதானியின் கிழக்கு, தெற்கு வாசல்களைப்பற்றி ஏதாவது தகவல்களைத் தற்போது காணப்படும் நல்லூர் நகர அமைப்பில் அறிய முடியுமா என முயன்றபோது மேலும் சில தகவல்கள் கிடைத்தன. வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்திற்கு அண்மையில் உள்ளகாணித்துண்டொன்றிற்குப் பெயர் 'கோட்டைவாசல்' என்பதாகும். தென்கிழக்குப் பகுதியிலுள்ள இன்னொரு காணித்துண்டின் பெயர் 'கோட்டையடி' என அழைக்கப்படுகிறது. வெயிலுகந்த பிள்ளையார் கோயிலிற்கண்மையில் 'கோட்டைவாசல்' என்ற பெயருள்ள காணித்துண்டொன்று காணப்படுவது அப்பகுதியில்தான் நல்லூர் இராஜதானியின் கிழக்குவாசல் இருந்திருக்க வேண்டுமென்ற சிந்தனையைத் தோற்றுவிக்கிறது. இதுபோல் 'கைலாசநாதர்' ஆலயத்திற்கண்மையில் ஏதாவது 'கோட்டையை' ஞாபகப்படுத்தும் காணித்துண்டேதாவதிருக்கிறதா என ஆராய்ந்தபோது முயற்சி வெற்றியளிக்கவில்லை. அப்போதுதான் சிந்தையிலொரு பொறி பறந்தது. முத்திரைச்சந்தைதான் நல்லூர் இராஜதானியின் முக்கியமான மையமாக இருந்திருந்தால், நிச்சயமாக இராஜதானியின் இருபெரும் வீதிகளான வடக்கு-தெற்கு, கிழக்கு-மேறு வீதிகளிரண்டும் சந்தைக்கண்மையில்தான் ஒன்றையொன்று சந்தித்திருக்க வேண்டும். அப்படியென்றால் வடக்கிலிருந்து முத்திரைச்சந்தையை நோக்கிவரும் வீதி (தற்போதிருப்பதைப்போல் நல்லூர் ஆலயம் நோக்கி வளையாமல் நேராகச் சென்றிருக்க வேண்டும். இதே போல் மேற்கிலிருந்து முத்திரைச் சந்தை நோக்கி வரும் வீதியும் நேராகச் சென்றிருக்க வேண்டும். தற்போது காணப்படும் வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்திற்கருகாகச் செல்லும் வீதி கிறித்தவ ஆலயத்திற்கண்மையில் வளைந்து வந்து பருத்தித்துறை வீதியைச் சந்திக்கிறது. ஆனால் அந்த வீதி நேராக வந்திருக்கும் பட்சத்தில் சரியாக முத்திரைச் சந்தையை ஊடறுத்து மேற்காகச் சென்றிருக்கும் சாத்தியம் அவதானத்திற்குரியது. [பொதுவாக பண்டைய நகரங்கள் பல சந்தையை மையமாக வைத்து அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இலங்கையின் பண்டைய நகர்களிலொன்றான அனுராதபுரம் எவ்விதம் சந்தையை மையமாக வைத்து அமைக்கப்பட்டிருந்ததென்பதை ரோலன் டி சில்வாவின் பண்டைய அனுராதபுர நகர் அமைப்பு பற்றிய ஆய்வுகள் புலப்படுத்துவன.]

எமது வெளிக்கள ஆய்வில் இன்னுமொன்றையும் அறிய முடிந்தது. முத்திரைச் சந்தையிலிருந்து அண்ணளவாக சமமான தூரத்தில் வெயிலுகந்த பிள்ளையர் ஆலயமும், சட்டநாதர் ஆலயமும் இருப்பதை அறிய முடிந்தது. கிடைக்கப்பெறும் வரலாற்று, வெளிக்கள ஆய்வுத்தகவல்களை வைத்துப் பார்க்கும்போது நல்லூர் இராஜதானி ஒருவித ஒழுங்கான வடிவில் இருந்திருக்க வேண்டுமென்றே படுகிறது. பண்டைய இந்துக்களின் கட்டட மற்றும் நகர அமைப்புக்கலைக் கோட்பாடுகள் இத்தகையதொரு ஒழுங்கிற்கு எவ்விதம் காரணமாகவிருந்திருக்கக் கூடுமென்பதை நாம் பின்னர் அவை பற்றி ஆயும்போது அறிந்து கொள்ள முயல்வோம். ஆக, முத்திரைச்சந்தையிலிருந்து அண்ணளவாகச் சமமான தூரத்தில்தான் நான்கு கோயில்கலுமே இருந்திருக்க வேண்டுமென்றே படுகிறது. போத்துகேயர் காலத்தில் இடிக்கப்பட்ட ஆலயங்களில் நல்லூர்க்கந்தன் ஆலயம் ஏற்கனவே ஆலயமிருந்த பகுதியில் கிறித்தவ ஆலயம் கட்டப்பட்டு விட்டதால், குருக்கள்வளவு என்னும் பகுதியில் மீண்டும் அமைக்கப்பட்டது. இதனை மையமாக வைத்துத்தான் பின்னர் கட்டப்பட்ட

கைலாசநாத ஆலயமும், வீரமாகாளியம்மன் ஆலயமும் அமைக்கப்பட்டன போலும். ஏனென்றால் இவ்விரு ஆலயங்களுமே இன்றுள்ள கந்தன் ஆலயத்திலிருந்து அண்ணளவாகச் சமமான தூரத்திலிருக்கின்றன. இன்னுமொரு ஆச்சரியமென்னவென்றால் மேற்படி தூரமானது முத்திரைச் சந்தையிலிருந்து வெயிலுகந்த பிள்ளையார் ஆலயம், சட்டநாதர் ஆலயம் ஆகியன அமைந்துள்ள தூரங்களுக்கு ஏறக்குறையச் சமமாகவிருக்கின்றதென்பதுதான். இவற்றின் முக்கியத்துவம் பற்றிப் பின்னர் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை பற்றி ஆயும்போது இன்னும் சிறிது விரிவாகப் பார்ப்போம்.

முத்திரைச்சந்தையானது நல்லூர் இராஜதானியின் மையப்பகுதியாக இருந்திருக்கலாமென்பதை ஏற்றுக்கொண்டு பார்க்கையில் மேற்படி சந்தையிலிருந்து நான்கு திக்குகளிலுமிருந்த ஆலயங்கள் ஓரளவு சமமான தூரத்தில் இருந்திருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வர முடிகிறது. ஆனால் தற்போது காணப்படும் வெயிலுகந்த பிள்ளையார் ஆலயமும், சட்டநாதர் ஆலயமும் முத்திரைச் சந்தையிலிருந்து அண்ணளவாகச் சமமான தூரத்திலிருப்பதைப் பார்க்கும்போது இடிக்கப்பட்ட அவ்வாலயங்கள் மீண்டும் அமைக்கப்பட்டபோது பழைய இடத்தில், அல்லது அதற்கண்மையில் கட்டப்பட்டிருக்க வேண்டும் போல் படுகிறது. இதற்கு வெயிலுகந்த பிள்ளையார் ஆலயமிருக்கும் பகுதிக்கண்மையிலுள்ள கோட்டை வாசல் மற்றும் கோட்டையடி ஆகிய காணித்துண்டுகளின் பெயர்களிருப்பது ஓரளவுக்குச் சாதகமாகவுள்ளது. அதே சமயம் இன்றுள்ள நல்லூர் கந்தன் ஆலயத்தை மையமாக வைத்து, ஓரளவு சமமான தொலைவில், மற்றைய இரு ஆலயங்களான கைலாசநாதர் ஆலயம், வீரமாகாளியம்மன் ஆகிய ஆலயங்கள் இருப்பதைப் பார்க்கும்போது, அவை மீண்டும் கட்டப்பட்டபோது புதிதாக அமைக்கப்பட்டிருந்த நல்லூர்க் கந்தன் ஆலயத்தை மையமாக வைத்துக் கட்டப்பட்டன போலும்.

இன்னுமொரு விடயத்தையும் வெளிக்கள ஆய்வின்போது அறிய முடிந்தது. ஆனைப்பந்தி போன்ற போருடன் சம்பந்தப்பட்ட பகுதியில் தமிழர்களின் போர்க்கடவுளான கொற்றவையின் ஆலயமான வீரமாகாளியம்மன் ஆலயம் அமைந்துள்ளது. வயல்கள் மலிந்த செம்மணியை அண்மித்த பகுதியில் உழவர்களின் காவற் தெய்வமான வெயிலுகந்த பிள்ளையார் ஆலயம் அமைந்துள்ளது. இராஜதானியின் பாதுகாப்பிற்காக ஏனைய இரு ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ளன. நல்லூர் இராஜதானி பற்றிய வெளிக்கள ஆய்வுத்தகவல்களை, விளைந்த ஊகங்களைப் பண்டைய இந்துக்களின் நகர் அமைப்புக் கோட்பாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தபோது மேலும் பல உண்மைகளை அறிய முடிகிறது.

# அத்தியாயம் எட்டு: பண்டைய நூல்களும் கட்டடக்கலையும்!

[இவ்வத்தியாயம் மேலும் சில தகவல்களுடன் திருத்தி எழுதப்பட்டுள்ளது. அதன் விளைவாக அடுத்துவரும் அத்தியாயமும் தமிழர்களின் நகர அமைப்பு மற்றும் கட்டடக்கலை பற்றி வரலாற்றுத் தகவல்கள், தற்போதும் காணப்படும் வரலாற்றுச் சின்னங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் சிறிது விளக்கும்.] வேதகாலத்திலேயே இந்துக்களின் கட்டடக்கலைத்துறை வள்ர்ச்சியுற்றிருந்தது. கட்டடக்கலைத்துறை வளர்ச்சியுற்றிருந்தது. கட்டடக்கலை பற்றிய அறிவியற்துறை வாஸ்து வித்யா (Vastu-Vidaya) என அழைக்கப்பட்டது. இதனை விளக்கும் நூல்கள் வாஸ்து சாஸ்திர நூல்கள் (Vastu Shastras) என அழைக்கப்பட்டன. மச்யபுராண (Matsyapurana), விஷ்ணு தர்மோத்தர புராண (Vishnudhamotrapurana) போன்ற புராண நூல்களும், ஹயாசேர்சா பஞ்சார்த்திர ஆகம (Hayasirsha pancharatra Agama), வைகாநாச ஆகம் (Vaikhanasa Agama) போன்ற ஆகம நூல்களும் ஆலய அமைப்பு முறைபற்றிய விதிகளைக் கூறும். மத்திய காலகட்டத்தில் மேலும் சில நூல்கள் இத்துறையில் தோன்றின. மானசர (Manasara) , சிற்பப்பிரகாச (Shilpaprakasha) போன்றன குறிப்பிடத்தக்கன. தமிழிலும் சிந்தாமணி, சிற்பரத்தினம் போன்ற நூல்கள் தோன்றின. இவற்றிற்கிடையில் சிற்சில வேறுபாடுகள் காணப்பட்டாலும் பொதுவாக ஒரே கருத்தையே கொண்டிருந்தன.

பிரபல நாவலாசிரியரான நா.பார்த்தசாரதி தமிழில் 'பழந்தமிழர் கட்டடக்கலையும் நகர அமைப்பும்' என்னுமொரு ஆய்வு நூலினை எழுதியிருக்கின்றார். மேற்படி நூலினைத் தமிழ்ப் புத்தகாலயம் பதிப்பகத்தார் நா.பா.வின் மறைவுக்குப் பின்னர் வெளியிட்டுள்ளார்கள். தமிழ் இலக்கிய நூல்களில் கூறப்படும் தகவல்களிலிருந்து இன்றைய ஸ்தபதிகளின் கட்டுரைகள் வரையிலான ஆய்வுகளின் அடிப்படையில் மேற்படி நூலினை எழுதியுள்ள நா.பா. உண்மையிலேயே பாராட்டுக்குரியவராகின்றார். மேற்படி நூலில் பிரதான சில்ப சாஸ்திர நூல்களாக பரங்கிப்பேட்டை எஸ்.ஏ.குமாரசாமி ஆச்சாரியார் பதிப்பித்த 'சில்பரத்னாகரம்' 'விசுவகன்மீயம், விசுவம், விசுவசாரம், பிரபோதம்.... சௌரம் வரையிலான 32 நூல்களையும், இதுவரை பதிப்பிக்கப்படாத மனுசாரம் நூல் கூறும் ஈசாநம், விசுவகன்மீயம், விருத்தம்.... தேசிகம் முதலான 28 நூல்களையும் பிரதான சில்பசாஸ்திர நூல்களாக நா.பா. குறிப்பிடுவார். மேலுமவர் கணபதி ஸ்தபதியின் இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டு மலரில் வெளிவந்த கட்டுரையின் அடிப்படையில் 52 சிற்பநூல்கள் தென்னிந்தியப் பிரிவில் காணப்பட்டதாகவும் , அவற்றில் தற்போது தமிழகச் சிற்பிகளால் கற்கவும், நடைமுறையில் பாவிக்கப்படுவது முழுமையாக எஞ்சியுள்ள மயமதம், விசுவகன்மீயம், மானசரம், மனுசாரம், இந்திரமதம், வாஸ்துவித்யா, தாஸ்யபம், சித்ர காஸ்யபம், நாராயணீயம் ஆகிய 9 நூல்களே என்றும் கூறுவார். மேலும் மேற்படி கண்பதி ஸ்தபதியின் கட்டுரையின் அடிப்படையில் நடைமுறையிலுள்ள 'சிற்ப உபநிஷங்கள்' ஸ்ரீகுமாரரின் சில்பரத்தினம், சில்பரத்னாகரம், மனுஷ்யாலய சந்திரிகா, சர்வார்த்த சிற்ப சிந்தாமணி, பிராமீயம், சரஸ்வதீயம் ஆகிய கோயில் ஆகமங்களுடன் தொடர்புடைய 'சிற்ப உபநிஷங்களே என்பார்.'

பொதுவாக வட இந்தியக் கட்டடக்கலை நூல்களின் மூல ஆசிரியராகத் தேவலோகச் சிற்பியான விசுவகர்மாவைக் குறிப்பிடுவர். தென்னிந்திய நூல்களின் மூல ஆசிரியராக மயனைக் குறிப்பிடுவர். இக்கட்டடக்கலை நூல்கள் கூறும் கோட்பாடுகளிலிருந்து சமயம் எவ்வளவுதூரம் கட்டட, நகர அமைப்பு முறைகளைப் பாதித்துள்ளனதென்பதை அறிய முடிகின்றது.

மத்தியகாலம் வரையில் இத்துறை பற்றிய தகவல்கள் யாவும் வாய்வழி மூலமாகவே தந்தையிடமிருந்து புத்திரருக்கு என்ற முறையில் பேணப்பட்டு வந்துள்ளன. மத்திய காலகட்டத்திலேயே முதன்முறையாக இத்துறை பற்றிய தகவல்கள் யாவும்

பனையோலைச் சுவடிகளில் எழுத்து மூலமாகப் பதிக்கப்பட்டு வந்தன. 1920ம் ஆண்டில் Stella Kramisch என்பவர் இச்சுவடிகள் பலவற்றை ஆராய்ந்திருக்கின்றார். இச்சுவடிகள் தரும் முக்கியமான தகவல்கள் சிலவற்றைப் பார்ப்போம். முக்கியமாக நகர அமைப்பு பற்றிக் கூறப்படும் தகவல்களை நோக்குவோம்.

## பிரபஞ்சமும் இந்துக்களின் கட்டடக்கலையும்!

இந்துக்களின் உபநிடதங்கள் கூறும் தத்துவங்களில் 'பிரம்மம்' பற்றி விபரிக்கப்பட்டுள்ளது. உருவமற்ற, ஆதி அந்தமற்று, எங்கும் பரந்து, நீக்கமற நிறைந்திருப்பதே பிரம்மம். இந்த உருவமற்ற பிரம்மத்தின் உருவ வடிவங்கள்தான் சிவன், விஷ்ணு, பிரம்மன் போன்ற தெய்வங்கள். இவ்விதமான உருவற்ற மூல வடிவத்திலிருந்து உருவானவன்தான் 'வாஸ்துபுருஷன்' அல்லது 'வாஸ்துதேவன்' என்பவன்.

இவனை மையமாகவைத்தே இந்துக்களின் கட்டடக்கலைத்துறை வளர்ச்சியுற்று வந்திருக்கின்றது. இவ்வித உருவ வடிவான வாஸ்து புருஷனை வாஸ்து புருஷ் மண்டல(ம்) என மேற்படி கட்டடக்கலை நூல்கள் வர்ணிக்கின்றன. இப்பிரபஞ்சத்தை இயக்கும் விதிகளின் உருவ வடிவமே இந்த வாஸ்துபுருஷனாகும். ஆரம்பத்தில் எவ்விதம் உருவற்ற பிரம்மத்திலிருந்து உருவ வாஸ்து புருஷன் படைக்கப்பட்டானோ அவ்விதமே கட்டடக்கலைஞர்களும் உருவற்ற புறச்சூழலை (Environment) உருவவடிவமான கட்டடங்களாக வடிவமைக்கும்போது அக்கட்டடங்கள் மேற்படி வாஸ்துதேவனைத் திருப்திப்படுத்தும் வகையிலேயே அமைப்பார்கள். பிரபஞ்சத்துக்கும் மனிதர்களுக்குமிடையிலுள்ள தொடர்பினைக் கட்டடங்கள் அமைப்பதிலும் பேணியவர்கள் இந்துக்கள் என்பது இதிலிருந்து புலனாகின்றது.

## வட்டமும், சதுரமும், வாஸ்துபுருஷ மண்டலமும்!

இந்துக்களின் கட்டடங்களையும், பெளத்தர்களின் கட்டடங்களையும் நோக்குபவர்கள் ஒன்றினை இலகுவாக அறிந்து கொள்வார்கள். பெளத்த கட்டடங்கள், தாது கோபுரங்கள் போன்றவை வட்டவடிவில் அமைக்கப்பட்டன. இந்துக்களின் கட்டடங்களோ சதுர அல்லது செவ்வக வடிவங்களில் அமைக்கப்பட்டன. அநுராதபுர நகர, கட்டட அமைப்புத் துறையினை வட்ட வடிவம் எவ்வளவு தூரம் பாதித்துள்ளதென்பதை ரோலன் டி சில்வா என்ற சிங்களப் பேராசிரியர் ஆராய்ந்து தெளிவு படுத்தியுள்ளார். சந்தையை மையமாக வைத்து உருவான பண்டைய அநுராதபுர நகரைச் சுற்றி வட்ட ஒழுக்கில் வட்ட வடிவமான தாது கோபுரங்கள், இரு வேறு ஒழுக்குகளில் அமைக்கப்பட்டிருந்ததை அவரது ஆய்வுகள் புலப்படுத்தும். வட்ட வடிவம் இயக்கத்தை உணர்த்தும். தோற்றமும், அழிவும், இரவும், பகலும் இவ்விதமாக ஒருவித வட்ட ஒழுக்கில் நகரும் காலத்தை மேற்படி வட்டவடிவம் உணர்த்தும். மேலும் இவ்வட்ட வடிவம் நாம் வாழும் பூமிக்குரிய வடிவ இயல்பையும் குறிக்கும். பொருள் முதல்வாதக் கோட்பாட்டினை அதிகம் நம்பும் பெளத்தர்கள் வட்டவடிவத்தைத் தேர்ந்தெடுத்தது ஆச்சரியமானதொன்றல்ல.

மாறாக சதுரவடிவம் ஓர் இறுதியான, தெளிவான வடிவம். வட்டத்தைப்போல் இது இயக்கத்தைப் புலப்படுத்துவதில்லை. இந்துக்கள் இப்பிரஞ்சத்தை வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு போன்ற திசைகளால் உருவான சதுர வடிவான வெளியாகவும், அவ்வெளியில் நேரத்தின் பாதிப்பை இராசிகளாலும் உருவகித்தார்கள். நவீன பெளதிகம் கூறுவதைப் போல இந்துக்களும் இப்பிரஞ்சத்தை ஒருவித வெளி-நேர (Space- Time) அமைப்பாகத்தான் விளங்கி வைத்திருந்தார்களென்பது இதிலிருந்து புலனாகின்றது. இவ்விதம் இப்பிரஞ்சத்தைச் சதுர வடிவாக உருவகித்த இந்த்துக்கள் இவ்விதிகளுக்கமைய உருவாக்கப்பட்ட கட்டடங்கள், நகரங்கள் என்பவற்றையும் சதுர வடிவாகவே (அல்லது செவ்வக) அமைத்தார்களென்பது ஆச்சரியமானதொன்றல்லதான்.

மாறாக சதுரவடிவம் ஓர் இறுதியான, தெளிவான வடிவம். வட்டத்தைப் போல் இது இயக்கத்தைப் புலப்படுத்துவதில்லை. இந்துக்கள் இப்பிரபஞ்சத்தை வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு போன்ற திசைகளால் உருவான சதுரவடிவான வெளியாகவும், அவ்வெளியில் நேரத்தின் பாதிப்பை இராசிகளாலும் உருவகித்தார்கள். நவீன பெளதிகம் கூறுவதைப் போல் இந்துக்களும் இப்பிரபஞ்சத்தை ஒருவித வெளி(Space) நேர (Time) அமைப்பாகத்தான் விளக்கி வைத்திருந்தார்களென்பது புலனாகின்றது. இவ்விதம் இப்பிரபஞ்சத்தைச் சதுர வடிவாக உருவகித்த இந்த்துக்கள் இவ்விதிகளிற்கமைய உருவாக்கப்பட்ட கட்டடங்கள், நகரங்கள் என்பவற்றையும் சதுர வடிவாகவோ (அல்லது செவ்வக வடிவாகவோ) அமைத்தார்களென்பதும் ஆச்சரியமானதொன்றல்லதான்.

இவ்விதம் சதுரவடிவில் அமைக்கப்பட்ட 'வாஸ்து' புருஷமண்டலத்திற்கேற்ப நகரங்கள் அல்லது கட்டடங்கள் அமைக்கப்பட்டன. வாஸ்து புருஷனை இச்சதுர வடிவில் இழுத்துப் பிடித்து வைத்திருக்கும் தெய்வங்கள் ஒவ்வொருவரும் சிறுசிறு சதுரங்களாக உருவாக்கப்பட்டார்கள். மேற்படி சதுரவடிவான வாஸ்து புருஷ மண்டலம் மேலும் பல சிறுசிறு சதுரங்களாகப் பிரிக்கப்பட்டன. இத்தகைய

சிறுசதுரங்கள் 'படா'க்கள் (Padas) என அழைக்கப்பட்டன. ஒவ்வொரு சிறு சதுரத்தையும் ஒவ்வொரு தெய்வம் ஆக்கிரமித்திருக்கும்.

வாஸ்து புருஷமண்டலத்தின் மையப்பகுதியில் பலசிறு சதூரங்களை உள்ளடக்கிய பெரிய சதுரமொன்று காணப்படும். இச்சதுரத்தை பிரம்மனிற்கு உருவகப்படுத்தினார்கள்.

**மண்டுக மண்டலம் (படம் 1):**



படம் 1

1. பிரம்மாவுக்குரியது; 4 சதுரங்கள்.

2. அடுத்த முக்கியத்துவம் வாய்ந்த கடவுள்களுக்குரியது; 2 சதுரங்கள்.

3. ஏனைய கடவுள்களுக்குரியது' 1 சதுரம்.

பிரம்மனைச் சுற்றி ஏனைய முக்கியமான தெய்வங்களைக்கொண்ட சதுரங்களும், அவற்றிற்கு வெளிப்புறமாக ஏனைய முக்கியம் குறைந்த தெய்வங்களைக் கொண்ட சதுரங்களுமாக மேற்படி வாஸ்து புருஷ மண்டலம் பிரிக்கப்பட்டிருக்கும். வாஸ்து புருஷ மண்டலத்தை 32 வகைகளில் சதுர வடிவில் உருவாக்கலாம். ஒரு சதுர வடிவான வாஸ்து புருஷமண்டலத்திலிருந்து 4, 9, 16, 25, 36, 49, 64, 81, ... என்று 1024 சிறு

சதுரங்களைக் கொண்ட முப்பத்திரண்டு வகைகளில் வாஸ்துபுருஷ மண்டலத்தை உருவாக்கலாமென்பதைப் பண்டைய இந்தியக் கட்டடக்கலை நூல்கள் கூறுகின்றன. இத்தகைய வாஸ்துபுருஷ மண்டலங்களில் 64 சிறு சதுரங்களை உள்ளடக்கிய மண்டுக மண்டலம் (Manduka mandala), 81 சிறு சதுரங்க்ளை உள்ளடக்கிய பரமசாயிக்க மண்டலம் (Parama sayika mandala) என்பவை முக்கியமானவை.

### பரமசாயிக்க மண்டலம் (படம் 2):




மண்டுக மண்டலத்தைப் பொறுத்தவரையில் வடக்கு-தெற்கு, கிழக்கு-மேற்காகச் செல்லும் இரு அச்சுக்களாலும் முழு சதுர வடிவமும் பிரிக்கப்பட்டிருக்கும். பரமசாயிக்க மண்டலத்தைப் பொறுத்தவரையில் முழு சதுர வடிவமும் சமச்சீரற்றுப் பிரிக்கப்பட்டிருக்கும். இவ்விதமாக இந்துக்களின் கட்டடக்கலைக் கோட்பாடுகளின்படி அமைக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு கட்டடமும் (ஆலயமோ அல்லது இல்லமோ) நகரமும் உண்மையிலேயே இந்துக்களின் படைப்புத் தத்துவக் கோட்பாடுகளைப் புலப்படுத்தும் சின்னங்களாகத்தான் உருவாக்கப்படுகின்றனவென்பதை அறியமுடிகின்றது. இது சமயத்தின் பாதிப்பு எவ்வளவுதூரத்திற்கு நகர, கட்டடக்கலைத்துறைகளில் உள்ளதென்பதை வெளிப்படுத்துகின்றது. வட இந்தியக் கட்டடக்கலை நூல்கள் கூறும் வாஸ்து புருஷ மண்டலத்திற்கும், தென்னிந்திய நூல்கள் கூறும் விளக்கத்திற்குமிடையில் சிறு சிறு வேறுபாடுகள் நிலவியபோதும் பொதுவில் பெரிய அளவில் மாற்றமில்லையென்றே கொள்ளலாம். தென்னிந்திய ஆலய நகரங்களான மதுரை, ஸ்ரீரங்கம் போன்றவற்றில் இம்மாற்றத்தை வெளிப்படையாகவே அவதானிக்க முடிகின்றது.

# அத்தியாயம் 9: இந்துக்களின் நகர அமைப்பும் அதில் சாதியின் பாதிப்பும், வகைகளும்!

[இந்த அத்தியாயம் மீண்டும் திருத்தி எழுதப்பட்டுள்ளது. ] இந்துக்களின் நகர அமைப்புக் கலையைப் பல காரணிகள் நிர்ணயித்தன. அதிலுள்ள மண்ணின் அமைப்பு, அம்மண்ணில் நிலவி வந்த சாதிக் கட்டுப்பாடுகள் போன்ற சமுதாய அமைப்புமுறை, சாத்திரங்கள் எல்லாமே இந்துக்களின் நகர அமைப்புக் கலையில் முக்கிய பாத்திரத்தை வகித்தன. மண்ணின் அமைப்பு முறைக்கேற்ப நிலத்தை மூன்று வகைகளாகப் பிரித்தார்கள். 'யங்கள': நீர், நதி, வளமற்ற வறண்ட நிலத்தை இது குறித்தது. 'அநோபா': நீர் வளம் மிகுந்த , குளிர்ந்த சுவாத்தியம் மிக்க, வளம் மலிந்த மண்ணைக் கொண்ட நிலத்தை இது குறித்தது. 'சாதனா': 'யங்கலவு'க்கும், 'அநோபா'வுக்கும் இடைப்பட்ட சாதாரண வகையான நிலத்தை இவ்விதம் அழைத்தனர். மண்ணின் நிறம், மணம், அது எழுப்பும் ஒலி, அதன் சுவை, இவையெல்லாம் எவ்விதம் இந்துக்களின் நகர அமைப்புக் கலையில் பங்காற்றின என்பது பற்றி, மேற்கு நாட்டவரான Andras Volwahsan என்பவர் Living Architecure: Indian என்ற நூலில் பின்வருமாறு கூறுவார்.

"மண்ணின் நிறம், மணம், ஒலி, சுவை, அது தரும் உணர்வு இவையெல்லாம் மிகுந்த கவனத்துடன் பரிசீலிக்கப்பட்டன. மண்ணின் நிறம் அம் மண்ணில் குடியமர்த்தப் பொருத்தமான சாதி மக்களை இனங்காட்டியது. வெள்ளை , சிவப்பு, மஞ்சள். கறுப்பு ஆகியவை முக்கியமானவை. வெள்ளை நிற மண் பிராமணர்களுக்கும், சிவப்புநிற மண் சத்திரியர்களுக்கும், மஞ்சள் நிற மண் வைச்யர்களுக்கும், கறுப்பு இந்ற மண் சூத்திரர்களுக்கும் உரியனவாகக் கொள்ளப்பட்டன. மண்ணின் சுவைக்கும் சாதியமைப்புக்குமிடையிலும் தொடர்பிருந்தது. இனிமையான மண் பிராமணர்களுக்கும், காரமண் வைசியர்களுக்கும், கசப்பான மண் சூத்திரர்களுக்கும், உவர்ப்புமிக்க மண் சத்திர்யர்களுக்கும் உரியனவாகக் கொள்ளப்பட்டன. தட்டும்பொழுது நரிகள் ஊளையிடுவதைப் போலவோ, நாய்கள் குரைப்பதைப் போலவோ அல்லது கழுதைகள் கத்துவதைப் போலவோ ஒலியெழுப்பும் மண்ணினைத் தவிர்க்க வேண்டும்"- [Living Architecure; பக்கம் 44].

நில அமைப்பின் சாய்வும் கவனத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டது. வடக்கை அல்லது வட-கிழக்கை நோக்கிச் செல்லும் சாய்வைக் கொண்ட மண்ணின் மீதே நகரம் அமைக்கப்பட வேண்டும். தெற்கு நோக்கிய சாய்வு மரணத்தையும், தென்மேற்கு நோக்கிய சாய்வு துன்பத்தையும், மேற்கு நோக்கிய நாய்வு வறுமையையும், பயிர் அழிவையும், வடமேற்கு நோக்கிய சாய்வு போரையும் கொண்டுவருமென இந்துக்கள் நம்பினார்கள். பள்ளமான தாழ்ந்த பிரதேசத்தில் நகரங்கள் அமைக்கப்படுவதானது ஆபத்தினைக் கொண்டு வரும்.

இவ்விதமாக நகர் அமைப்பதற்குரிய நிலம் தெரிவு செய்யப்பட்டதும் 32 வகைகளில் காணப்படும் வாஸ்துபுருஷ மண்டலத்தில் பொருத்தமான வகை சோதிடத்தில் நிபுணத்துவம் பெற்ற குருக்களினால் தெரிவு செய்யப்படும். நகரம் சதுரவடிவில் (இயலாத பட்சத்தில் செவ்வக வடிவில்) அமைக்கப்படும். சிலவகையான கட்டடக்கலைச் சுவடிகள் தரும் தகவல்களின்படி பூரனமான சதுர வடிவான நகரங்கள் பிராமணர்களுக்கு மட்டுமே உரியதென்றும், ஏனைய சாதியினரைப் பொறுத்தவரையில் செவ்வக வடிவான நகரங்களிலேயே வாழ வேண்டுமெனவும் அறியமுடியவதாக மேற்படி நூலில் நூலாசிரியர் எடுத்துக் காட்டுவார். இவ்விதமாகப் பொறுத்தமான வாஸ்து புருஷ மண்டல அமைப்பு தெரிவு செய்யப்பட்டு அமைக்கப்படும் நகர அமைப்பு பின்வருமாறு காணப்படும்.

1. நகரைச் சுற்றி மதில் அமைக்கப்படும்.

2. வடக்கு தெற்காகவும், கிழக்கு மேற்காகவும் செல்லும் வீதிகளால் பிரிக்கப்பட்ட பல சிறு சிறு சதுரங்களை உள்ளடககிய பெரிய

சதுரமாக நகர் காணப்படும்.

3. நகரமானது வடக்கு-தெற்கு, கிழக்கு-மேற்காகச் செல்லும் அகன்ற இரு இராஜ வீதிகளால் பிரிக்கப்பட்டிருக்கும்.

4. இவ்விதம் அமைக்கப்படும் இராஜபாட்டையானது நகரின் தன்மைக்கேற்ப அளவில் வேறுபடும். உதாரணமாக மாநகர்களைப் பொறுத்தவரையில் இந்த இராஜபாட்டை 12 மீட்டர்கள் அகலமுடையதாகவும், சாதாரண நகரங்களைப் பொறுத்தவரையில் 10 மீற்றர்கள் அகலமுடையதாகவும், வெறும் சந்தையை மட்டுமே கொண்டதாகவிருக்கும் நகரமாயின் 8 மீற்றர்கள் அளவுடையதாகவுமிருக்கும்.

5. நகரினைச் சுற்றிவர மதிலின் உட்புறமாகவும் பாதையொன்று அமைக்கப்படும். இராஜபாட்டையின் அகலத்தையொத்ததாக இப்பாதையிருக்கும்.

இதுதவிர நகரின் எந்த வகையான திசையில் எந்த வகையான மக்கள் வாழலாம் என்பது பற்றியும் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை சம்பந்தமான நூல்கள் கூறுகின்றன. இவையெல்லாமே வாஸ்துபுருஷ மண்டல விதிகளினடிப்படையில் பல்வேறு தொழில்களையும், சாதிகளையும் உள்ளடக்கிய நகரங்கள் அமைக்கப்பட வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றன. மிக எளிமையான நகர அமைப்புத் திட்டப்படி பிராமணர்கள் நகரின் வடக்குப் பகுதியில் வாழ்ந்து, தொழில் செய்து வரவேண்டும். இதுபோல் சத்திரியர்கள் கிழக்கிலும், தென்கிழக்கிலும், வைஷியர்கள் தெற்கிலும், சூத்திரர்கள் மேற்கிலும் வசிக்க வேண்டும்.இது முடியாதவிடத்து, குறைந்தது குடியிருப்புகள் சாதி அடிப்படையில் பிரிக்கப்பட்டு அமைக்கப்பட்டடிருக்க வேண்டும். மேற்படி உபபிரிவுகள் சம்பந்தமான இன்னுமொரு விதியின்படி பிராமணர்கள், சோதிடர்கள், காவல்துறை தலைமையகம், அரச அதிகாரிகள் போன்றோர் வாழுமிடங்கள் வடக்கிலும், வடமேற்கிலும்,பொற்கொல்லர்கள் போன்ற தொழிலாளர்கள் வாழும் பகுதிகள் தென்கிழக்கிலும், சிறையதிகாரிகள் , போர்வீரர்கள், இடையர்கள், மீனவர்கள் போன்றோர் வாழுமிடங்கள் தென் மேற்கிலும், சந்தை வடகிழக்கிலும், அரண்மனைகள் போன்றவை கிழக்கிலும் அமைந்திருக்க வேண்டும். இவையெல்லாம் இந்துக்களின் நகர அமைப்புத் துறையில் சாதி வகித்த பங்கினைத் துலாம்பரமாக வெளிக்காட்டுகின்றன.

பண்டைய இந்திய நகர வகைகள்:

இவ்விதமாக வாஸ்துபுருஷ விதிகளுக்கேற்ப கிராமங்கள், நகரங்கள் மற்றும் கோநகரங்கள் அமைக்கப்பட்டன. தண்டகம்,, சர்வதோபாத்ரா, நந்தியாவர்த்தம், பத்மம், சுவாஸ்திகம் பிரஸ்தரம், காமுகாண்ட, சதிர்முகா, பிரகீர்ணம், பராகம், ஸ்ரீபிரதிஷ்டம்... இவ்விதமாகப் பல்வேறு வகைகளில் இவை விளங்கின. இவற்றில் சில சிறிய நகரங்கள், கிராமங்களுக்குப் பொருத்தமாகவிருந்தன. உதாரணமாக தண்டகம் வகையினைக் கூறலாம். நீளக்கோல் (தண்டம்) போன்று நீண்ட வீதிகளை வ்டக்காகவும், கிழக்காகவும் நடுவில் நான்கு சந்துக்களைக் கொண்டு விளங்கிய இத்தகைய சிறிய நகரங்கள் அல்லது கிராமங்கள் இரு பிரதான வாயில்களைக் கொண்டு விளங்கின. நந்தியாவர்த்த போன்ற வகை நகரங்கள் ஆலயத்தை மையமாகக் கொண்டு விளங்கின. வடக்கு-தெற்கு, கிழக்கு-மேற்கு என, மையத்தில் சந்திக்கும் இரு பிரதான வீதிகளுடன், மதில்களும் கொண்டு விளங்கிய வகைகளில் முக்கியமானது சுவாஸ்திகா வகை. இதுவே எல்லாவகைகளிலும் பிரபல்யமானது. ஊரின் கிழக்கு , மெற்குப் பகுதிகளில் வடக்கு நோக்கிய வீதிகளின் எண்ணிக்கை மூன்று, நான்கு, ஐந்து ,ஆறு அல்லது ஏழாகவிருப்பின்

அவ்விதமாக அமைக்கபப்டும் நகரங்கள் அல்லது கிராமங்கள் பிரஸ்தரம் என அழைக்கப்பட்டன. பிரகீர்ண அமைப்பில் கிழக்கு நோக்கி நான்கு வழிகளும், வடக்கு நோக்கி எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று அல்லது பன்னிரண்டு வழிகளில் வீதிகள் காணப்பட்டன. பராகத்தில் வடக்கு நோக்கிப் பதினெட்டிலிருந்து இருபத்திரண்டு வழிகளும், கிழக்கு மேற்காக ஆறு வழிகளும் அமைந்திருந்தன. நந்தியாவர்த்தப் பூவினையொத்துச் சிறுசிறு வீதிகளையும், சந்துக்களையும் ஊரின் உட்புறமாகக் கொண்டிருந்த நந்தியாவர்த்த வகை ஊர்களில் கிழக்கு-மேற்காக ஐந்து வழிகளும், வடக்கு நோக்கிப் பதின்மூன்றிலிருந்து பதினேழு வழிகளும், அத்துடன் நான்கு திசைகளிலும் பிரதான வழிகள் காணப்பட்டன. தாமரைப் பூவினையொத்த பத்மம் வகையிலான அமைப்பினில் கிழக்கு-மேற்காக ஏழு வழிகளும், தெற்கு-வடக்காக மூன்றிலிருந்து ஏழுவரையிலான வழிகளும் காணப்பட்டன. பண்டைய மதுரை மாநகர் தாமரை வடிவமைந்திருந்ததைப் பரிபாடல் விளக்கும். பண்டைய நகரங்களிலொன்றான கலைகளில் சிறந்து விளங்கிய காஞ்சி நகர் தண்டியலங்காரத்தில் தோகை விரித்தாடும் மயிலுக்கு ஒப்பிடப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டும் நா.பார்த்தசாரதி தனது 'பழந்தமிழர் கட்டடக்கலையும் நகரமைப்பும்' என்னும் ஆய்வு நூலில் மயூரம் என்றொரு பிரிவும் நகர அமைப்பு வடிவங்களில் இருந்திருக்கலாம் என்பார்.

இவை தவிர வேறுவகையான சில வகைகளும் காணப்படுகின்றன. இத்தகைய வகையான நகரங்கள் குறிப்பிட்டதொரு சாதிக்கு மட்டுமேயுரியதாக விளங்கின. உதாரணமாகக் கேட்டாவைக் குறிப்பிடலாம். இந்தவகை நகரத்தில் சூத்திரர்கள் மட்டுமே வாழ அனுமதிக்கப்பட்டனர். இந்துக்களின் சாதிவழிச் சமுதாயத்தில் தாழ்ந்த படியில் இருந்த காரணத்தினால் சூத்திரர்கள் பூரணத்துவமற்ற மனிதர்களாகக் கருதப்பட்டனர். இதனால் இவர்கள் மட்டுமே வாழ உருவாக்கப்பட்ட நகரங்களும் பூரணத்துவமற்றவையாகவே அமைக்கப்பட்டன. எந்தவித முக்கியமான மையப்பகுதியையும் கொண்டிராத வகையில், முக்கியதுவம் குறைந்த நிலையில் இத்தகைய நகரங்களின் அமைப்பு காணப்பட்டது. சமுதாயத்தில் முக்கியத்துவமற்ற படியில் வாழ்ந்த சூத்திரர்களின் நிலையை மேற்படி நகரங்களின் நகர அமைப்பு வெளிப்படுத்துகின்றது.

அதே சமயம் இந்துக்கள் பெரும்பாலும் சதுர அல்லது செவ்வக வடிவங்களிலேயே கட்டடங்கள், நகரங்களை அமைத்தாலும் வட்டவடிவிலும் சில சமயங்களில் அமைக்கத்தான் செய்தார்களென்பதை Andras Volwahsan தனது Living Architecure: Indian நூலில் சுட்டிக்காட்டுவார். அதற்காக மண்டுக மண்டல அடிப்படையில் அமைந்த வட்ட வடிவ நகர் அமைப்பு வடிவங்களைச் சுட்டிக் காட்டுவார். இருந்தாலும் பொதுவாக பெரும்பாலும் பண்டைய இந்துக்கள் பாவித்த வடிவங்கள் சதுரங்கள் அல்லது செவ்வகங்களாகவேயிருந்தன.

இந்துக்களின் நகர அமைப்புக் க்லையில் சமயம், சாதி போன்றவற்றின் பங்களிப்பை அல்லது பாதிப்பைப் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை மற்றும் நகரமைப்புக்கலை பற்றிய நூல்கள் வழங்கும் தகவல்கள், மற்றும் காணப்படும் பழமையின் சின்னங்கள், காணிப்பெயர்கள் ஆகியன தற்போதும் வெளிப்படுத்தி நிற்கின்றன. இவ்விதமாக நகர அமைப்புக்கலையினை சமயம், சமுதாயத்தில் நிலவிய சாதி அமைப்பு, காலநிலை, நில அமைப்பு, பாதுகாப்பு எனப் பல்வேறு காரணிகள் பாதித்தன. சங்ககாலத்தில் தமிழர் ஊரமைப்பானது எவ்விதம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் மற்றும் பாலை ஆகிய நில அமைப்புகளால் வேறுபட்டு விளங்கின என்பதைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடியும். மேலும் ஆரம்பத்தில் நகரங்கள் அமைக்கப்படமுன்னர் ஆரியக் குழுக்களினால் அமைக்கப்பட்ட கிராமங்களின் அமைப்பு முறை பற்றியும் அறிய முடிகிறது. பெரியதொரு கிளைவிட்டுப் பரந்ததொரு மரத்தினை மையமாக வைத்துக் கிராமங்கள் அமைக்கப்பட்டன. அம்மரங்களின் கீழமர்ந்து அக்கிராமத்து முதியவர்கள்

ஊர்ப்பிரச்சினைகளுக்கு ஆலோசனைகள், தீர்ப்புக் கூறினார்கள். மேலும் இப்பிரபஞ்சமும், இங்கு காணப்படும் அனைத்தும் எதனை மையமாக வைத்துச் சுழல்கின்றனவோ அந்த ஒழுக்கினையே அம்மரங்கள் பிரதிநிதிப்படுத்துவதாகவும் அன்றைய இந்துக்கள் கருதினார்கள் என்பதையும் மேற்படி நூல்கள் விளக்குவதை அறிய முடிகிறது.

ஸ்தபதி வை.கணபதி இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக் கையேட்டில் ஊரமைப்புக்கலை' பற்றியொரு விரிவான கட்டுரை எழுதியுள்ளார். அதில் மயமதத்தினொரு பிரிவான சிற்பநூல் நகரமைப்புப் பற்றியும் விவரிப்பதாக அவர் கருதுவதை நா.பார்த்தசாரதியின் 'பழந்தமிழர் கட்டடக்கலையும் நகரமைப்பும்' சுட்டிக் காட்டும். இவ்விதமாக 'மயமத' அடிப்படையிலமைந்த ஊரமைப்பானது அதன் சுற்றளவின் அடிப்படையில் ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததையும் அறிய முடிகிறது. 20,000தண்டங்களைச் சுற்றளவாகக் கொண்ட கிராமம் (ஒரு தண்டமென்பது நான்கு முழங்களை அல்லது பதினொரு அடிகளைக் குறித்தது)., 40,000 தண்டங்களைச் சுற்றளவாகக் கொண்ட கிராமம், 60,000 தண்டங்களைச் சுற்றளவாகக் கொண்ட கிராமம், 80,000 தண்டங்களைச் சுற்றளவாகக் கொண்ட கிராமம், 1,00,000 தண்டங்களைச் சுற்றளவாகக் கொண்ட கிராமம் எனக் கிராமங்கள் பல்வேறு அளவுகளில் அமைக்கப்பட்டன. இவ்விதமான கிராமங்களின் இருபதினொரு பாகத்தில் மட்டுமே வீடுகள் கட்ட ஒதுக்கப்பட்டன. எஞ்சியவற்றில் விளைநிலங்கள், நீர்நிலைகள், மேய்ச்சல் நிலங்கள், விருட்சங்களுக்கு, தோப்புக்களுக்கென ஒதுக்கப்பட்டன. இவ்விதமாக நகர அமைப்பானது கிராமம், கேடம், கர்வடம், துர்க்கம், நகரம் ,கோநகரெனப் பரிணாம வளர்ச்சியுற்று வந்ததை மேற்படிக் கட்டடக்கலை/நகரமைப்பு நூல்கள் குறிக்கின்றன. இவ்வத்தியாயத்தில் பண்டைய இந்துக்களின் நகர அமைப்புக் கலைபற்றியும், வகைகள் பற்றியும், அதில் சாதியின் பாதிப்புப் பற்றியும் பார்த்தோம். இனிவரும் அத்தியாயத்தில் பண்டைய இந்துக்களின் குறிப்பாகத் தமிழர்களின் தென்னிந்திய நகரங்கள் பற்றிச் சிறிது பார்ப்போம்.

## அத்தியாயம் பத்து: பண்டைய தமிழர்களின் ஆலய, துறைமுக, கோ நகரங்கள்!

பண்டைய தமிழர்கள் தரைவழியாக மற்றும் கடல்வழியாக பாரதத்தின் ஏனைய நகரங்களுடன் மட்டுமல்ல கடல்கடந்தும் ஏனய நாடுகளுடனெல்லாம் வணிகம் செய்து சிறப்புற்று விளங்கியதை வரலாறு கூறும். யவனர்கள், அரேபியர்களெல்லாம் கடல்கடந்து தமிழகம் வந்து வர்த்தகம் செய்ததை வரலாற்றறிஞர்களின் பிரயாணக் குறிப்புகள், பண்டையத் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் தகவல்கள், அகழ்வாராய்ச்சிகள் மற்றும் வரலாற்றுச் சின்னங்களெல்லாம் புலப்படுத்தும். கிழக்கிந்தியத் தீவுகள் கூட்டத்தை உள்ளடக்கிய சாவகம் (இன்றைய இந்தோனேஷியா), ஈழம், காழகம் (பர்மா) போன்ற நாடுகளுடனெல்லாம் தமிழர்களின் வர்த்தகம் கொடி கட்டிப் பறந்தது.

யவனர்கள், அரேபியர்களெல்லாம் தமிழகத்துடன் வியாபாரம் செய்து வந்தார்கள். இவர்களைப் பற்றி 'பயனற வறியா யவனர் இருக்கையும் / கலந்தரு திருவிற் புலம் பெயர் மாக்கள் / கலந்தினி துறையும் இலங்குநீர் வரைப்பும்' எனவும், 'மொழி பெயர் தேத்தோர் ஒழியா விளக்கம்' எனவும் சிலம்பும், 'மொழிபல பெருகிய பழிநீர் தேஎத்துப் / புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும் / முட்டாச் சிறப்பிற் பட்டினம்' எனப் பட்டினப்பாலையும் கூறும். கிரேக்கர்களையும் , ரோமர்களையும் யவனர்களென சிறப்புப் பெயர் பெற்றிருந்தார்களென மயிலை சீனி. வேங்கடசாமி கூறுவார். வணிகத்தின் பொருட்டுத் தமிழகம் வந்த யவனர்கள் வணிகத்தில் மட்டுமின்றி வேறு சில தொழில்களையும் செய்ததையும் அறிய முடிகிறது. மதுரையின் கொற்கைத் துறைமுகம் தமிழ் வாணிபத்தில் சிறந்து விளங்கியது. கோட்டை மதில்களுடன் விளங்கிய மதுரையின் கோட்டை வாயில்களை யவன வீரர்கள் காத்து நின்றதை 'கடிமதில் வாயில் காவலிற் சிறந்து / அடல்வாள் யவனர்க்கு அயிராது புக்கு' எனச் சிலம்பும், 'மந்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை / மெய்ப்பை புக்கு வெருவருந் தோற்றத்து / வலிபுணரி யாக்கை வன்கண் யவனர்' என முல்லைப் பாட்டும் கூறும். இதுதவிர யவனர்கள் தச்சுத் தொழிலும் சிறந்து விளங்கியதை மணிமேகலையின் 'யவனத் தச்சர்' பற்றிக் கூறும் வரிகள் தெரிவிக்கும். புதுச்சேரிக்கண்மையில் அரிக்கமேடு என்னும் பகுதியில் நிகழ்ந்த அகழ்வாரய்ச்சிகள் யவனர்கள் கண்ணாடி மணிகளைச் செய்வதில் சிறந்து விளக்கியதை எடுத்துக் காட்டும்.

கி.மு.இரண்டாம் ஆண்டிலிருந்தே தமிழ் வாணிகர் இலங்கைக்குச் சென்று வாணிபம் செய்ததை அநுராதபுரத்தில் கண்டெடுக்கப்பட்ட பிராமி எழுத்துக் கல்வெட்டு கூறும். தமிழர்களைப் பொறுத்தவரையில் பருவக்காற்றின் உதவியினால் நடுக்கடலில் விரைவாகப் பயணிக்கும் அறிவினைப் பண்டைய காலத்தில் யவனர்களுக்கு முன்னரே அறிந்திருந்ததாக அறிய முடிகிறது. இதன் காரணமாக யவனர்கள் கரையோரமாக நீண்டகாலக் கடற்பிரயாணம் செய்துதான் தமிழகத் துறைமுகங்களை வந்தடைந்தார்கள். கி.பி.முதல் நூற்றாண்டலவில்தான் அவர்கள் இவ்வறிவினைப் பெற்று நடுக்கடலினூடு பருவக்காற்றின் உதவிகொண்டு முதன்முதலாக முசிறித் துறைமுகத்திற்கு வந்ததாக அறிய முடிகிறது. தமிழர்களின் கடல் கடந்த வாணிபம் காரணமாகப் பண்டைய தமிழகத்தில் பல துறைமுகப் பட்டினங்கள் புகழ்பெற்று விளங்கின. தமிழகத்தின் கிழக்குக் கரையில் புகழ்பெற்று விளங்கிய பட்டினங்களாக வங்காளக் கடலில் கொல்லத்துறை, எயிற்பட்டினம் (சோபட்டினம்), அரிக்கமேடு, காவிரிப்பூம்பட்டினம் (பூம்புகார்), தொண்டி, மருங்கை (மருங்கூர்ப் பட்டினம்), கொற்கை ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இத்துறைமுகப் பட்டினங்களெல்லாம் பிறகாலத்தில் மறைந்து விட்டன. இதே சமயம் தமிழகத்தின் தெற்குக் கரையில் கன்னியாகுமரியில் குமரி துறைமுகப் பட்டினமாகவும், புண்ணிய நகராகவும் புகழ்பெற்று விளங்கியது.

இது தவிர பண்டைய தமிழகத்தின் மேற்குக் கரையில் அரபிக் கடலில் மங்களூர், நறவு, தொண்டி, முசிறி போன்றவை விளங்கின.

மதுரை பண்டைய தமிழகத்திலும் புகழ்பெற்று விளங்கிய முக்கியமான நகர். மதுரை இராஜதானியாக, ஆலய நகராகப் புகழ்பெற்று விளங்கியதை தமிழ் இலக்கிய நூல்கள் விளக்குகின்றன. நான்மாடக்கூடல், ஆலவாய் எனப் புகழ்பெந்று விளங்கிய மதுரை மூன்று பக்கங்களிலும் வையையை அகழியாகவும், மதிலையொட்டி இன்னுமொரு அகழியையும் கொண்டு விளங்கியது. . மதுரையைப் போல் அன்றும் இன்றும் புகழ்பெற்று விளங்கும் நகர் காஞ்சி. பண்டையச் சோழர்களின் தலைநகராக விளங்கிய உறையூர், சேரரின் தலைநகராக விளங்கிய வஞ்சி ஆகிய நகர்கள் காலப்போக்கில் தம் முக்கியத்துவத்தை இழந்து விட்டன.

இத்தகைய நகர்கள் பற்றி இனிச் சிறிது பார்ப்போம். அதற்கு முன் தென்னிந்திய ஆலய நகரங்களுக்கும், வட இந்திய ஆலய நகரங்களுக்குமிடையில் நிலவும் வேறுபாட்டினையும் அறிந்து கொள்வோம். வாஸ்துபுருஷக் கோட்பாடுகளைப் பொறுத்தவரை தென்னிந்தியக் கோட்பாடுகள் தத்துவார்த்தரீதியில் வட இந்தியக் கோட்பாடுகளிலிருந்து சிறிது விலகியிருப்பதை அறிய முடிகிறது.

தென்னிந்தியக் கோட்பாடுகளின்படி பிரதான ஆலயம் அமைந்துள்ள மையப்பகுதி ஆதி, அந்தமற்ற, உருவற்ற பிரம்மாவுக்குரியதாகவும், இதனைச் சுற்றி மதிலினைக் கொண்டதாகவும், இதனையடுத்து ஏனைய தெய்வங்களுக்குரிய பகுதியினைக் கொண்டதாகவும், அதற்கடுத்து மனிதர்களுக்குரியதாகவும், அடுத்து பேய்கள்,பூதகணங்களுக்குரியதாகவும் அமைந்திருப்பதை அறிய முடியும். வட இந்திய வாஸ்து புருஷ மண்டலக் கோட்பாடுகள் படைப்பைப் பற்றிக் கூறினால் தென்னிந்தியக் கோட்பாடுகளோ படைக்கப்பட்ட பிரபஞ்சத்தில் நிலவும் ஒழுங்கைப் பற்றிக் கூறுவதை அறியமுடிகிறது. இன்றைய மதுரை மற்றும் ஸ்ரீரங்க நகர்களின் அமைப்பு இதனைத்தான் புலப்படுத்துகின்றன. இனிச் சிறிது விரிவாகப் பண்டைய தமிழர்களின் துறைமுக மற்றும் ஆலய, கோ நகர்களைப்பற்றிப் பார்ப்போம்.

மதுரை மாநகர்!

தமிழர்களின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நகர்களில் பிரதானமானது மதுரை. கி.மு.விலிருந்து, முதற் சங்கம், இடைச் சங்கம் , கடைச் சங்கம் எனப் பல காலகட்டங்களைக் கடந்து பின்னர் நாயக்கர் காலத்திலும் புகழ்பெற்று விளங்கி இன்றும் தமிழர்களின் புண்ணிய பூமியாக விளங்கும் நகரமிது. இன்றைய ஆலயநகரமான மதுரை திருமலை நாயக்கரின் மதுரை. பாண்டியர்களின் காலகட்டங்களிலெல்லாம் தலைநகராக விளங்கிச் சிறந்த மதுரை பின்னர் நாயக்கர் காலகட்டத்தில் சிறிதுகாலம் திருசிரபுரத்தைத் தலைநகராகக் கொண்டு விளங்கியது. அதனை மாற்றி மீண்டும் மதுரையையே தலைநகராக்கி, புது மண்டபம், தெப்பக்குளம், அரண்மணைகளெனக் கலைச் செல்வங்களால் நிறைத்தவர் திருமலை நாயக்கர். பண்டைய மதுரையின் அரன்மணை இன்றைய மதுரையில் காணப்படும் 'அந்திக்கடைப் பொட்டலருகே'யுள்ள கடைவீதியிலிருக்கும் பழைய கோட்டைப் பகுதியாயிருக்கக் கூடுமெனக் கருதுவார் 'பழந்தமிழர் கட்டடக்கலையும் நகரமைப்பும்' நூலில் நா.பார்த்தசாரதி. மேற்படி நூலில் மதுரை நகரம் பற்றிய நல்லதொரு ஆய்வுக் கட்டுரையினை சங்கால நூல்கள் தரும் தகவல்களின் அடிப்படையில் எழுதியிருக்கின்றாரவர். பாண்டியரின் மதுரை எவ்வளவு தொன்மை வாய்ந்ததென்பதர்குப் பல சான்றுகளுள. கி.மு.4 அல்லது 5ஆம் ஆண்டளவில் வெளிவந்ததாகக் கருதப்படும் இராமாயணம், மகாபாரதம் போன்ற வடமொழி இதிகாசங்கள் பாண்டியரைப் பற்றிக் கூறுகின்றன. இலங்கையின் மகாவம்சமும் கி.மு.478இல் விசயன் பாண்டியகுமாரியொருத்தியை மணந்ததைக் கூறும். கி.மு.3இல்

வாழ்ந்த அசோகமன்னனின் கற்றூண் கட்டளைகளில் மூவேந்தர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். பல்வேறு காவியங்களும் இலக்கிய நூல்களும் மதுரையைச் சிறப்பித்துக் கூறுகின்றன. 'மாட மதுரை', 'மதுரை மூதூர்', 'மணி மதுரை', 'வானவர் உறையும் மதுரை', 'மாண்புடை மரபின் மதுரை', 'ஓங்கு சீர் மதுரை', 'மண மதுரை' எனப் பல்வேறு சொற்றொடர்களால் சிறப்பித்துக் கூறும் சிலப்பதிகாரம். 'மதுரைப் பெருநன் மாநகர்' என மணிவாசகர் பாடுவார் திருவாசகத்தில்.

'மிக்குபுகழ் எய்திய பெரும்பெயர் மதுரை' என மதுரைக் காஞ்சி பெருமிதமுறும். 'தமிழ் கெழு கூடல்' எனப் புறநானூறும், 'பாடு தமிழ் வளர்த்த கூடல்' என இன்னுமொரு தமிழ்ப் பாடலொன்றும் மதுரையின்மாண்பினை எடுத்துரைக்கும். திருளையாடற்புராணம் '.. மதி தபழு சுதை யிலகு புதுமைதரு நிதிதிகழு மதில்தழுவு மதுரை நகர்' என்றும், 'அலகில் வண்புகழுடைய மதுரை' எனவும், 'நகர்கட் கெல்லாம் பயனா நகர் பஞ்சவந்தன் மதுரை நகர்' என்றும் புகழும். இவ்விதமாகச் சிறப்புற்று விளங்கியது பாண்டியர்களின் தலைநகராக அன்று விளங்கிய மதுரை மாநகர்.

சங்கத்தொகை நூல்களிலொன்றான பரிபாடல் மதுரை நாகர் பற்றிப் பின்வருமாறு கூறும்:

'மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்

பூவொடு புரையும் சீரூர்- பூவின்

இதழ்கத் தனைய தெருவம் இதழகத்

தரும் பொகுட் டணைத்தே அண்ணல் கோயில்

தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்

தாதுண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்

பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த

நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப

ஏம் இந்துயில் எழுதல் அல்லதை

வாழியும் வஞ்சியும் கோழியும் போலக்

கோழியின் எழாது எம்பேருள் துயிலே'

மாயோனாகிய திருமாலின் உந்தியிலமைந்த தாமரை மலரையொத்து அமைந்திருந்ததாம் மதுரை. அத்துடன் அதன் தெருக்களெல்லாம் அம்மலரின் இதழ்களைப் போலவும், மன்னனின் அரன்மணை அம்மலரின் நடுவிலுள்ள பொகுட்டையும், நகரத் தமிழ் மாந்தர் அம்மலரின் தாதுக்களையும், அதனை பரிசில் பொருட்டு நாடிவரும் புலவர் பெருமக்கள் தாதுண்ண வரும் வண்டுகளையும் ஒத்து விளங்கியதாக மேற்படி பாடல் கூறும்.

மதுரையின் தோற்றம் பற்றித் திருவிளையாடற்புராணத்தில் பல புராணக் கதைகளுள. அதன்படி பண்டைய மதுரை மாநகர் இருந்த பகுதியில் முன்னர் கடம்ப வனத்துடன் கூடிய மணலூரென்னுமோரூர் இருந்ததாகவும், அதனைத் தலைநகராகக் கொண்டு குலசேகரப் பாண்டியனென்னும் மன்னன் ஆட்சிபுரிந்து வந்ததாகவும், அவன் கனவில்

தோன்றிய சிவபெருமான் கடம்பவனத்தை அழித்து நகரமாக்கப் பணித்ததாகவும், அதன் பொருட்டு அம்மன்னன் அவ்வனத்திலுள்ள பொற்றாமரைக் குளத்தில் நீராடிப் பின்னர் காட்டை அழித்து நகரை உருவாக்கியதாகவும் அறிய முடிகிறது. நகரை உருவாக்கும் சமயம் சித்தர் வடிவில் வந்த சிவபெருமான் நகரமும், ஆலயமும், கோபுரமும் சிற்பநூல்களின் விதிப்படி, சிவாகமங்களின் வழிப்படி அமைய வலியுறுத்தி மறைந்ததாகவும், அதன்படி மதில்கள், மண்டபங்கள், கோபுரங்கள், அகழிகள், ஆகியவற்றுடன் மீனாட்சி அம்மன ஆலயம் போன்றவை அமைக்கப்பட்டதாகவும் திருவிளையாடற் புராணம் கூறும். இவ்விதமாக அமைக்கப்பட்ட நகரானது அரசவீதிகள், அந்தணர் வீதிகள், வணிகர் தெருக்கள்,வேளாளர் தெருக்கள், கடைவீதிகள், பலர் கூடிபேச அம்பலங்கள், மாடமாளிகைளைகளை உள்ளடக்கிய பெருந்தெருக்கள், ஆனை மற்றும் குதிரைக் கூடங்கள், தேர்ச்சாலைகள், கல்விக் கூடங்கள், பொய்கைகள், பூங்காக்கலெல்லாம் கொண்டு விளங்கியதையும், நகரின் வடகிழக்குத் திசையில் மன்னனின் அரன்மணையையும் கொண்டு விளங்கியதையும் மேற்படி திருவிளையாடற்புராணத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.

நான்மாடக் கூடல், ஆலவாய் மற்றும் மதுரா நகரெனப் பல்வேறு பெயர்களில் மதுரை அழைக்கப்பட்டத்தற்குக் காரணங்களைத் திருவிளையாடற்புராணம் கூறும். சிவனின் சடைமுடியிலுள்ள சந்திரக்கலையின் மதுரமயான அமுதம் நகரைத் தூய்மையாக்கியதால் அந்நகருக்கு மதுரா நகரென்னும் பெயர் ஏற்பட்டதாம். இதுபோல் ஒருசமயம் வருணன மதுரா நகரை அழிக்கும் பொருட்டு ஏழு மேகங்களையும் நகரை நோக்கி ஏவி விட்டபோது பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்கேற்ப சிவபெருமானால் அத்தாக்குதலையெதிர்த்து ஏவி விடப்பட்ட நான்கு மேகங்களும் நகரின் நான்கு எல்லைகளிலும் நான்கு மாடங்களாகி வருணனின் தாக்குதல்களை முறியடித்ததாகவும் அதனாலேயே நகர் நான்மாடக் கூடலென அழைக்கப்பட்டதாம். இவையே பின்னர் திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என அழைக்கப்பட்டதாக கலித்தொகையில் நச்சினார்க்கின்யர் கூறுவார்.

இதுபோல் மதுரை ஆலவாய் என அழைக்கப்படுவதற்குமொரு கதையினைத் திருவிளையாடற்புராணம் கூறும். அதன்படி வங்கியசேகரனென்னுமொரு பாண்டியன் மக்கள் தொகை பெருகிய மதுரையை விரிவுபடுத்த முனைந்தான். அதற்காக அவன் சிவனிடம் தன் முன்னோர்களால் வரையறுத்த பழைய நகர எல்லைகளைத் தெரியப்படுத்துமாறு வேண்டினானாம். அதற்காகச் சித்தராக அவன் முன்னால் தோன்றிய சிவபெருமான தன் கையிலிருந்த பாம்பினைப் பார்த்துப் பாண்டிய நாட்டின் எல்லையினையும் மதுரை நகரத்தையும் மன்னனுக்குக் காட்டுமாறும் பணித்தானாம். அப்பொழுது அந்த அரவம் தான் எல்லையினைக் காட்டியதும். அதுமுதல் நகரம் தன்பெயரால் அழைக்கப்பட வேண்டுமென வேண்டிக் கொண்டதாம். சித்தரான சிவனும் அதற்கிசைய அந்தப் பாம்பானது கீழ்த்திசையிலிருந்து தன் வாலை நீட்டி நகரைச் சுற்றிச் சென்று வாலைத் தன் வாயில் வைத்து எல்லைகளை உணர்த்தியதாம். அதன்படி மன்னனும் நகர மதில்களை எழுப்பினானாம். தெற்கில் திருப்பரங்குன்றமும், வடக்கே இடபக் குன்றமும், மேற்கில் திருவேடகமும், கிழக்கில் திருப்பூவண நகரும் எல்லைகளாக அமையும் வண்ணம் மதிலின் வாயில்களை அமைத்தானாம். இந்த மதிலே ஆலவாய் என அழைக்கப்பட்டதாம்.

அரவத்திற்குச் சித்தர் கொடுத்த வாக்கின்படி அதுமுதல் நகரும் ஆலவாய் நகரென அழைக்கப்பட்டதாம். இவையெல்லாம் மதுரை நகருக்கு மேற்படி பெயர்கள் வந்ததற்கான காரணங்களைப் பற்றித் திருவிளையாடற் புராணம் கூறும் தகவல்கள்.

இவை தவிர மதுரை மாநகர் பற்றிப் பல்வேறு தகவல்கள் சிலப்பதிகாரம், மதுரைக் காஞ்சி போன்ற இலக்கிய நூல்களில் மலிந்து காணப்படுகின்றன. அகழிகள் காவற்காட்டுடன்

விளங்கின ('அருமிளை உடுத்த அகழிசூழ்' சிலம்பு- புறஞ்சேரி இறுத்த காதை; 183). நகர் அகநகர், புறநகரெனப் பிரிந்து கிடந்தது.

புள்ளணி கழனியும் பொழிலும் பொருந்தி,

வெள்ளநீர்ப் பண்ணையும், விரிநீர் ஏரியும்,

காய்குலைத் தெங்கும், வாழையும், கமுகும்,

வேய்த்திரள் பந்தரும் விளங்கிய இருக்கை;

அறம்புரி மாந்தர் அன்றிச் சேராப்

புறஞ்சிறை மூதூர் புக்கனர் புரிந்து -என்' (புறஞ்சேரி இறுத்த காதை 190-195) எனக் கவுந்தியடிகளுடன் கோவலனும் கண்ணகியும் மதுரையின் புறநகரைச் சென்றடைந்ததைச் சிலம்பு வருணிக்கும். புறநகருக்கும், அகநகருக்குமிடையில் கட்டுவேலியுடன் கூடிய காவற்காட்டுடன் வளைந்து கிடந்தது மதுரையின் அகழி. யானைகள் செல்வதற்காக புறநகருக்கும் அகநகருக்குமிடையில் நிலத்தின் கீழ் அமைந்திருந்த சுருங்கைப் பாதையினூடு கோவலன் நகரினுள் சென்றதைச் சிலம்பு பின்வருமாறு வருணிக்கும்:

'இளைசூழ் மிளையொடு வளவுடன் கிடந்த

இலங்குநீர்ப் பரப்பின் வலம்புணர் அகழியில்

பெருங்கரை யானை இனநிரை பெயரும்

சுருங்கை வீதி மருங்கிற் போகிக் - ( ஊர் காண் காதை; 60-65). மேற்படி 'கடிமதில் வாயிலை'க் 'காவலிற் சிறந்த அடல்வாள் யவனர் காத்து நின்றனர் (ஊர் காண் காதை; 66-67). மேற்படி சிலம்பின் ஊர்காண் காதை மதுரை மாநகரின் அகநகரில் காணப்பட்ட பல்வேறு வகையான வீதிகளைப் பற்றியும் (செல்வர்கள் மற்றும் அரசர்களுக்குரிய வீதிகள், கணிகையர்கள் வாழும் வீதிகள், வேற்றரசுகளும் விரும்பும் செல்வச் சிறப்புடைய அங்காடி வீதிகள், இரத்தினக் கடைத்தெரு, பொற்கடைத் தெரு, துணிக்கடைத்தெரு:அறுவை வீதி, மிளகு மலிந்து கிடக்கும் கூல வீதி) எனப் பல்வேறுபட்ட வீதிகளைப் பற்றியும் கூறும். அத்துடன் அங்கு 'நூலோர் சிறப்பின் முகில்தோய் மாட' மாடங்களுடன் கூடிய மாட மாளிகைகள் இருந்ததையும், சுடுமண்ணினால் வேயாது பொற்றகடுகளால் வேயப்பட்ட, 'சுடுமண் ஏறா வடுநீடுங்கு சிறப்பு' மிக்க மனைகளில் கணிகையர் வாழ்ந்ததையும் மேற்படி ஊர் காண் காதையிலிருந்து அறிய முடிகிறது. இவ்விதமாக 'பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவும், அந்தியும் (முச்சந்தி), சதுக்கமும் (நாற்சந்தி), ஆவண வீதியும் (கடைத்தெரு), மன்றமும், கவலையும் (பல தெருக்கள் ஓரிடத்தில் பிரியுமிடம்), மறுகும் (தெரு)' எனப் பல்வேறு வகையான தெருக்களில் கோவலன் அலைந்து திரிந்ததாகக் கூறும் 'ஊர் காண் காதை'யிலிருந்து அகநகரில் காணப்பட்ட பல்வேறு வகையான தெருக்களைப் பற்றிய தகவல்களைப் பெற முடிகிறது.

இவ்விதமாக விளங்கிய மதுரை நகரின் அகநகரில் காணப்பட்ட அகலத் தெருக்கள் பற்றியும், தேரணி வீதிகள் பற்றியும், தோரண வாயில்கள் பற்றியுயும் திருவிளையாடற் புராணத்தின் திருநகரச் சிறப்புப் பகுதியில் விபரிக்கப்பட்டுள்ளது.

மதுரைக் காஞ்சியிலும் மதுரை பற்றித் தகவல்கள் பல மலிந்து கிடக்கின்றன. மதில்மேல் பெரிய மலைமுகடுகள் போல் பொறிகளுடன் விளங்கிய மாடங்களிருந்ததையும், கோட்டை வாயில் வையை ஆற்றையொத்து உயிரோட்டமுடன் விளங்கியதையும் அது பின்வருமாறு விபரிக்கும்:

'மண்ணுற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கின்

விண்ணுற வோங்கிய பல்படைப் புரிசைத்

தொல்வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை

நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்

மழையாடு மலையி னிவந்த மாடமொடு

வையை யன்ன வழக்குடை வாயில்' (மதுரைக் காஞ்சி 351-156).

மேலும் மதுரை நகரின் தெருக்களில் காணப்பட்ட வீடுகள் தென்றல புகுந்து செல்லும் சாளரங்களையுள்ளடக்கி இருந்ததையும் அது ' வகைபெற எழுந்து வான மூழ்கிச் , செல்காற் றிசைக்கும் பல்புழை நல்லில், யாறு கிடந்தன்ன அகல்நெடுந் தெரு' என்கிறது.

காவிரிப்பூம்பட்டினம்!

மேலும் மதுரை தவிர தமிழர் வரலாற்றில் தடம் பதித்த இன்னுமொரு முக்கியமான நகரம் காவிரிப்பூம்பட்டினம். சங்க காலத்தில் மிகவும் புகழ்பெற்று விளங்கிய துறைமுகப் பட்டினமிது. சோழநாட்டின் காவிரியாறு கடலிலுடன் கலக்கின்ற புகார்முகத்தில் இருந்த காரணத்தினால் 'புகார்' என்றும், 'பூம்புகார்' என்று அழைக்கப்பட்ட இந்நகர் அக்காலகட்டத்தில் உள்ளூர் மற்றும் சர்வதேச வணிகத்திற்கும் பெயர்போன் துறைமுகநகர். மேலும் கடற்கரை நகரத்தைப் பட்டினமென அழைப்பது பழந்தமிழ் வழக்கு. காவிரியின் கழிமுகத்தில் உருவான நகரமென்பதால் 'காவிரிப்பூம்பட்டினமென்றும்' அழைக்கப்பட்டது. பழைய பௌத்த நூல்கள் இந்நகர் கவீரபட்டனமென அழைக்கப்பட்டதாக மயிலை சீனி. வேங்கடசாமி கருதுவார் (நூல்: 'பழங்காலத் தமிழர் வணிகம்'; பக்கம் 81). 'காகந்தி' என்றும் இதற்கொரு பழைய பெயர் இருந்ததாகவும் அவர் கருதுவார். அக்காலகட்டத்தில் (கி.பி.2ஆம் நூற்றாண்டளவில்) வணிகர்கள் உரோமாபுரியிலிருந்தும் (யவனர்கள்), 'சாவகத்திலிருந்து'ம்( இன்றைய இந்தோனேசியா), வட இந்தியாவிலிருந்தும், ஈழத்திலிருந்தும் இங்கு வந்து வணிகம் செய்தார்கள். சோழ வணிகர்கள் இங்கிருந்து சாவகம், காழகம் (இன்றைய பர்மா), ஈழம் போன்ற நாடுகளுக்கு இத்துறைமுகத்திலிருந்து புறப்பட்டு வாணிகம் செய்தார்கள். 'கமரா' என்று 'பெரிளுஸ்' என்னும் கிரேக்க நூல் கூறுவது காவிரிப்பூம்பட்டினத்தின் சுருக்கமென்றும், கிரேக்க தாலமி குறிப்பிடும் 'சபரிஸ்' என்பது காவியின் திரிபென்றும் மேலும் மயிலை சீனி.வேங்கடசாமி கருதுவார். மேலும் வேற்று நாடுகளிலிருந்தெல்லாம் மக்கள் புலபெயர்ந்து வந்து இப்புகார் நகரில் வாழ்ந்ததை சிலம்பின் 'கடல் ஆடும் காதையில்' வரும் 'கலந்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்' என்னும் வரிகளும் மற்றும் 'இந்திரவிழவு ஊர் எடுத்த காதையில்' வரும் 'கலம்தரு திருவின் புலம்பெயர் மாக்கள் கலந்துஇருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும் புலப்படுத்துகின்றன. பட்டினப்பாலையும் மேற்படி புலம்பெயர்ந்து வந்து புகாரில் வாழ்ந்த மக்கள் பற்றி 'மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப், புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்,முட்டாச் சிறப்பிற் பட்டினம்' (பட்டினப்பாலை; 21-218) எனக் கூறும். சீத்தலைச் சாத்தனாரின் மணிமேகலையும்

தன்பங்கிற்கு இம்மக்கள் பற்றிக் குறிப்பிடுகையில் 'பரந்தொருங் கீண்டிய பாடை மாக்கள்' என்று கூறும்.

கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் 'பட்டினப்பாலை'யிலும், இளங்கோவின் 'சிலப்பதிகாரத்திலும்' , மேலும் பல புறநானூற்றுச் செய்யுள்களிலும் புகார் பட்டினம் பற்றிய செய்திகள் மலிந்து கிடக்கின்றன. உதாரணமாக சிலப்பதிகாரத்தின் 'இந்திரவிழவு எடுத்த காதை', 'கடல் ஆடு காதை' போன்ற பகுதிகளில் புகார் பற்றியும், அந்நகர அமைப்பு பற்றியும், அங்கு வாழ்ந்த மக்கள் பற்றியும் தகவல்கள் மலிந்து காணப்படுகின்றன. இத்துறைமுகத்திற்கு வந்து குவிந்த பொருட்கள் பற்றிப் பட்டினப்பாலை பின்வருமாறு கூறும்:

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்

காலின் வந்த கருங்கறி மூடையும்

வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்

குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்

தென்கடல் முத்துங் குணகடல் துகிரும்

கங்கை வாரியும் காவிரிப் பயனும் ....

ஈழத் துணவும் காழகத் தாக்கமும்

அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி

வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்" (பட்டினப்பாலை 185-193).

மேற்படி செய்யுள் வரிகளில் பல உண்மைகள் தெரிய வருகின்றன. குதிரைகள் கடல்வழியாகக் கொண்டு வரப்பட்டன ('நீரின் வந்த நிமிர்பரிப் புரவி). 'காலின் வந்த' என்பது காற்றின் உதவியினால் வந்த எனப் பொருள்படும். 'காலின் வந்த கருங்குறி மூடை' என்பது பருவக் காற்றின் உதவியினால் வந்த கப்பல்களில் கரிய மிளகு மூட்டைகள் கொண்டுவரப்பட்டன என்பதைக் குறிக்கும். 'வடமலைப் பிறந்த பொன்னும் மணியும்' என்னும் வரிகள் இமயமலைப் புறத்தில் கிடைத்த பொன்னும் மணியும் கங்கையாற்றின் முகத்துவாரத்தின் வழியாகக் கடல்மூலம் வந்ததையும், மேற்குத் தொடர்ச்சி மலைப்பக்கத்திலிருந்து சந்தனமும் ('குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்') , அகிலும், தென்னாடான பாண்டிநாட்டுக் கடல்களிலிருந்து முத்துக்களும் ('தென்கடல் முத்து'), கிழக்குக் கடல் வழியாக சாவகத்திலிருந்து பவழமும் ('குணகடல் துகிர்'), கங்கைக்கரை ஊர்களிலிருந்து உள்ளூரிலிருந்து மற்றும் வெளியூர்களான ஈழம் , காழகம் ஆகியவற்றிலிருந்து பல்வேறு பொருட்களும் ('கங்கை வாரியும் காவிரிப் பயனும் .... ஈழத் துணவும் காழகத் தாக்கமும்') இவ்விதம் உள்ளூர் மற்றும் சர்வதேச வர்த்தகம் சிறந்து விளங்கும் நகராகப் புகார் விளங்கியதை அறிய முடிகிறது.

ஆனைப்பந்தியில் நிற்கும் ஆனைகள் அசைவதைப்போல் இத்துறைமுகத்தில் வந்து தங்கிய பாய்மரக் கப்பல்கள் கொடிகளுடன் அசைந்தனவாமெனப் பட்டினப்பாலை மேலும் கூறும்:

"வெளிலிளக்குங் களிறுபோலத்

தீம்புகார்த் திரைமுன்றுறைத்

தூங்குநாவாய் துவன்றிருக்கை

மிசைச்கூம்பி னசைச்கொடியும்" (பட்டினப்பாலை 172-175).

உறையூர் முதுகண்ணனின் சோழன் நலங்கிள்ளியைப் புகழ்ந்து பாடும் புறநானூற்றுச் செய்யுளில் வரும் 'கூம்பொடு மீப்பாய் கலையாது மிசைப்பரந் தோண்டாது புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்' வரிகள் ஆழமாகவும் கலமாகவும் பல கப்பல்கள் தங்குவதற்கேற்ற வகையில் அமைந்திருந்த புகார் பற்றிக் கூறும்.

சிலப்பதிகாரத்தின் 'இந்திரவிழவு எடுத்த காதையில்' ஆசிரியர் இளங்கோ புகார் நகர் 'மருவூர்ப் பாக்கம்', 'பட்டினப்பாக்கம்', நாளங்காடி' என மூன்று முக்கிய பகுதிகளாக விளங்கியதையும், அப்பகுதியில் காணப்பட்ட மக்களின் தொழில்கள, வீதிப்பெயர்கள் பற்றியெல்லாம் விரிவாகவே எடுத்துரைப்பார். புகாரின் மருவூர்ப்பாக்கத்தைப் பற்றிக் கூறும் சிலம்பு அங்கு காணப்பட்ட மாளிகைகள் பற்றி, யவனர்களின் இருப்பிடங்கள் பற்றி, வணிகத்தின் பொருட்டுப் பல்வேறு நாடுகளிலிருந்து புலம்பெயர்ந்து வந்து வாழும் மக்களின் குடியிருப்புகள் பற்றி, விற்பதற்காக அங்கே குவிந்து கிடக்கும் பொருட்கள் பற்றி, பல்வேறு தொழிலாளர்கள், சிறு விற்பனையாளர்கள் செய்யும் தொழில்கள், விற்கும் பொருட்கள், மற்றும் அவர்கள் வாழும் வீதிகள் பற்றி, இசைக்கலைஞர்கள் பற்றி அவர்தம் இருப்பிடங்கள் பற்றியெல்லாம் விரிவான தகவல்களைச் சிலம்பு தரும்:

"வேயா மாடமும், வியன்கல இருக்கையும்,

மான்கண் காதலர் மாளிகை இடங்களும்,

கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்

பயன்அறிவு அறியா யவனர் இருக்கையும்,

கலம்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்

கலந்துஇருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்,

வண்ணமும் சுண்ணமும் தண்நறுஞ் சாந்தமும்

பூவும் புகையும் மேவிய விரையும்

பகர்வனர் திரிதரு நகர வீதியும்,

பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்

கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கையும்,

தூசும் துகிரும் ஆரமும் அகிலும்

மாசுஅறு முத்தும் மணியும் பொன்னும்

அருங்கல வெறுக்கையோடு அளந்துகடை அறியா

வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகும்,

பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு

கூலம் குவித்த கூல வீதியும்,

காழியர் கூவியர் கள்நொடை யாட்டியர்

மீன்விலைப் பரதவர் வெள்உப்புப் பகருநர்

பாசவர் வாசவர் பல்நிண விலைஞரொடு

ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்,

கஞ்ச காரரும் செம்புசெய் குநரும்

மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்

கண்ணுள் வினைஞரும் மண்ஈட் டாளரும்

பொன்செய் கொல்லரும் நன்கலம் தருநரும்

துன்ன காரரும் தோலின் துன்னரும்

கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப்

பழுதுஇல் செய்வினைப் பால்கெழு மாக்களும்

குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்

வழுஇன்றி இசைத்து வழித்திறம் காட்டும்

அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும்,

சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு

மறுஇன்றி விளங்கும் மருவூர்ப் பாக்கமும்" (இந்திரவிழவு ஊர் எடுத்த காதை; 7-39).

இது போல் பட்டினப்பாக்கம் பற்றிய தகவல்களைப் பற்றியும் சிலம்பு விரிவாக விபரிக்கும்:

கோவியன் வீதியும், கொடித்தேர் வீதியும்,

பீடிகைத் தெருவும், பெருங்குடி வாணிகர்

மாட மறுகும், மறையோர் இருக்கையும்,

வீழ்குடி உழவரொடு விளங்கிய கொள்கை

ஆயுள் வேதரும் காலக் கணிதரும்

பால்வகை தெரிந்த பன்முறை இருக்கையும்,

திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையோடு

அணிவளை போழுநர் அகன்பெரு வீதியும்,

சூதர் மாகதர் வேதா ளிகரொடு

நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்

காவல் கணிகையர் ஆடல் கூத்தியர்

பூவிலை மடந்தையர் ஏவல் சிலதியர்

பயில்தொழில் குயிலுவர் பன்முறைக் கருவியர்

நகைவே ழம்பரொடு வகைதெரி இருக்கையும்,

கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர்

நெடுந்தேர் ஊருநர் கடுங்கண் மறவர்

இருந்துபுறம் சுற்றிய பெரும்பாய் இருக்கையும்,

பீடுகெழு சிறப்பின் பெரியோர் மல்கிய

பாடல்சால் சிறப்பின் பட்டினப் பாக்கமும், (இந்திரவிழவு ஊர் எடுத்த காதை; 40-58).

மேற்படி பட்டினப்பாக்கம் நாளங்காடிக்கு மேற்கே அமைந்திருந்தது. அரசனின் அரண்மனை, அரச வீதிகள், தேரோடும் வீதிகள், செல்வம்மிக்க வணிகர்களின் மாட மாளிகைகள், அவர்க்குரிய பெருந்தெருக்கள், அந்தணர்கள் வாழும் மனைகள் அமைந்த தெருக்கள், உழவர், மருத்துவர், காலக் கணிதர் தம் தொழிலுக்கேற்ப வாழும் தெருக்கள், முத்துக் கோப்பவர் போன்றோர், மன்னர் முன் நின்று வணங்கும் சூதர்கள், இருந்து வணங்கும் மரகதர், நாழிகை கூறும் நாழிகைக் கணக்கர், கணிகையர், குற்றேவல் செய்யும் ஏவல் மகளிர், புகழ்பாடும் வைதாளிகர், தோல், துளை, உருக்குக் கருவிகள் வாசிப்போர், குதிரைப்பாகர், யானைப்பாகர் போன்ற பலவேறு மக்கள் வாழுந்தெருக்களை உள்ளடக்கி விளங்கியது பட்டினப்பாக்கம். இவ்விரு பகுதிகளையும் இரு பெரு வேந்தர்களின் போர்முனைகளாக விபரிக்கும் இளங்கோ, இவ்விரு பகுதிகளுக்கும் கடைத்தெருவான நாளங்காடியினை மேற்படி போர்முனைகளுக்கிடையிலுள்ள

இடைநிலமாக விபரிப்பார். அத்துடன் சித்திரா பௌர்ணமியில் மன்னனின் நல்வாழ்வுக்காக அங்கிருந்த காவற்பூதத்திற்குப் மறக்குடி மகளிர் பலிகொடுத்ததையும் எடுத்துரைப்பார்:

இருபெரு வேந்தர் முனையிடம் போல

இருபால் பகுதியின் இடைநிலம் ஆகிய

கடைகால் யாத்த மிடைமரச் சோலைக்

கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்

நடுக்குஇன்றி நிலைஇய நாள்அங் காடியில்

சித்திரைச் சித்திரத் திங்கள் சேர்ந்தென

வெற்றிவேல் மன்னற்கு உற்றதை ஒழிக்க எனத்

தேவர் கோமான் ஏவலின் போந்த

காவல் பூதத்துக் கடைகெழு பீடிகைப்

புழுக்கலும் நோலையும் விழுக்குஉடை மடையும்

பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து

துணங்கையர் குரவையர் அணங்குஎழுந்து ஆடிப்

பெருநில மன்னன் இருநிலம் அடங்கலும்

பசியும் பிணியும் பகையும் நீங்கி

வசியும் வளனும் சுரக்க என வாழ்த்தி

மாதர்க் கோலத்து வலவையின் உரைக்கும்

மூதிற் பெண்டிர் ஓதையின் பெயர, (இந்திரவிழவு ஊர் எடுத்த காதை; 61-75).

மேலும் மருவூர்ப்பாக்கத்தின் சுற்றுப்புறங்களிலும், பட்டினப்பாக்கத்தின் அயலிலும் வீரம் மிக்க மறவர்கள் படைக்கலங்களுடன் விளங்கியதை "மருவூர் மருங்கின் மறம்கொள் வீரரும் பட்டின மருங்கின் படைகெழு மாக்களும் " ((இந்திரவிழவு ஊர் எடுத்த காதை; 76 -77).

இது தவிர நாட்டில் சட்டம் மற்றும் ஒழுங்கு நிலைநாட்டுப் பொருட்டு ஐவகையான மன்றங்களும் (வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், பூத சதுக்கம், நெடுங்கல் நின்ற மன்றம், பாவை மன்றம்') பட்டினப்பாக்கத்தில் இருந்ததையும் சிலம்பு விபரிக்கும்.

"உடையோர் காவலும் ஒரீ இய ஆகிக்

கட்போர் உளர்எனின் கடுப்பத் தலைஏற்றிக்

கொட்பின் அல்லது கொடுத்தல் ஈயாது

உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்,

கூனும் குறளும் ஊமும் செவிடும்

அழுகுமெய் யாளரும் முழுகினர் ஆடிப்

பழுதுஇல் காட்சி நன்னிறம் பெற்று

வலம்செயாக் கழியும் இலஞ்சி மன்றமும்,

வஞ்சம் உண்டு மயல்பகை உற்றோர்

நஞ்சம் உண்டு நடுங்குதுயர் உற்றோர்

அழல்வாய் நாகத்து ஆர்எயிறு அழுந்தினர்

கழல்கண் கூளிக் கடுநவைப் பட்டோ ர்

சுழல வந்து தொழத்துயர் நீங்கும்

நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றமும்,

தவம்மறைந்து ஒழுகும் தன்மை இலாளர்

அவம்மறைந்து ஒழுகும் அலவல் பெண்டிர்

அறைபோகு அமைச்சர் பிறர்மனை நயப்போர்

பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளர்என்

கைக்கொள் பாசத்துக் கைப்படு வோர்எனக்

காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்

பூதம் புடைத்துஉணும் பூத சதுக்கமும்,

அரைசுகோல் கோடினும் அறம்கூறு அவையத்து

உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்

நாவொடு நவிலாது நவைநீர் உகுத்துப்

பாவைநின்று அழுஉம் பாவை மன்றமும்,

மெய்வகை உணர்ந்த விழுமியோர் ஏத்தும்

ஐவகை மன்றத்தும் அரும்பலி உறீஇ," ((இந்திரவிழவு ஊர் எடுத்த காதை; 114-140).

மேலும் காவிரிப்பூம்பட்டினத்தில் மலர்வனம், உய்யாவனம், சம்பாதி வனம், சுவேர வனம் மற்றும் உவ வனம் ஆகிய ஐவகை வனங்களும் இருந்ததாக மணிமேகலை கூறும். அத்துடன் நகரில் சிவன், திருமால், பலராமன், இந்திரன், முருகன், சூரியன், சந்திரன்,அருக தேவன் ஆகியோருக்குக் கோட்டங்கள் (கோயில்கள்) அமைந்திருந்ததை சிலம்பு பின்வருமாறு கூறும்:

"அமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்

புகர்வெள்ளை நாகர்தம் கோட்டம் பகல்வாயில்

உச்சிக் கிழான்கோட்டம் ஊர்க்கோட்டம் வேல்கோட்டம்

வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்

நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம் புக்குளங்கும் " (கனாத்திரம் உரைத்த காதை; 9-13).

இதுதவிர நகரில் ஏழு புத்த விகாரங்களுமிருந்ததை மணிமேகலை, சிலப்பதிகாரம் ஆகியன கூறும் (சிலம்பு, 'நாடு காண் காதை'; 14: 'இந்திர விகாரம் ஏழுடன் போகி'; மணிமேகலை; 'இந்திர விகாரம் என எழில் பெற்று').

ஸ்தபதி வை.கணபதியின் 'நகரமைப்புக் கலை' ஆய்வுக் கட்டுரையினை ஆதாரமாக வைத்து நா.பார்த்தசாரதி தனது 'பழந்தமிழர் கட்டடக்கலையும் நகரமைப்பும்' நூலில் பின்வருமாறு குறிப்பிடுவார்: "மயமதம் கூறும் நகரமைப்புக் கலை இலக்கணப்படி மொத்தச் சுற்றளவில் 20இல் ஒரு பாகம் 'குடும்ப பூமி' என்ற பெயரில் குடியிருப்புக்களுக்கும், பிற பகுதிகள் தோட்டங்கள், நீர் நிலைகள், இளமரக்காக்கள் ஆகியவற்றுக்கும் ஒதுக்கப்பட வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. பூம்புகார் நகரிலும் இவ்வமைப்பு இருந்திருப்பதைக் காண முடிகிறது" (பக்கம் 164). இது மேலும் விரிவாக ஆராயப்பட வேண்டிய விடயம்.

இவ்விதமாகப் புகழ்பெற்று விளங்கிய வாணிக நகரான பூம்புகார் கி.பி.இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புயல் காற்றடித்து வெள்ளப் பெருக்கெடுத்து நீரில் மூழ்கி விட்டதை மணிமேகலை குறிப்பிடுமெனச் சுட்டிக் காட்டும் மயிலை சீனி. வேங்கடசாமி 'ஆனால் இப்பட்டினம் அடியோடு முழுகிவிடவில்லை. வெள்ளம் வடிந்த பிறகு மீண்டும் இப்பட்டினம் நெடுங்காலம் பேர் பெற்றிருந்தது. கி.பி.10ஆம் நூற்றாண்டில் இருந்த பட்டினத்து அடிகள் காவிரிப் பூம்பட்டினத்தில் வாழ்ந்தவர்.... பிறகு இப்பெரிய பேர்போன் பட்டினம் சிறப்புக் குன்றி சிறிது சிறிதாகப் பெருமை குறைந்து இப்போது குக்கிராமமாக இருக்கிறது' என்பார் ('பழங்காலத் தமிழர் வணிகம்; பக்கம் 89).

இது தவிர பொருநைக் நதிகரையில் அமைந்திருந்த கொற்கை, தாமிரபரணிக் கரையில் அமைந்திருந்த காயல் மற்றும் மாமல்லபுரம் ஆகிய துறைமுக நகரங்களெல்லாம் காலப்போக்கில் மண் தூர்ந்து ஈழத்தின் மாந்தையைப் போல் தம் முக்கியத்துவத்தை இழந்தன.

## மருங்கூர் பட்டினம்!

இவற்றைவிட இன்னுமொரு துறைமுகப் பட்டினத்தையும் கட்டாயம் இங்கு குறிப்பிட வேண்டும். அது பாண்டி நாட்டின் கிழக்குக் கரையிலிருந்த மருங்கூர் பட்டினம். இது பற்றி மயிலை சீனி. வேங்கடசாமி தனது 'பழங்காலத் தமிழர் வணிகம்' நூலில் முக்கியத்துவம் தந்து குறிப்பிடுவார். நக்கீரர், மருதன் இளநாகனார் போன்றோரின் அகநானூற்றுச் செய்யுள்களில் இந்நகர் பற்றிய தகவல்கள் காணப்படுகின்றன. காவிரிப் பூம்பட்டினம் எவ்விதம் பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் என விளங்கியதோ அவ்விதமே மருங்கூர் நகரும் ஊணூர், மருங்கூர் பட்டினமெனப் பிரிவுகளுடன் விளங்கியதைச் சுட்டிக் காட்டுவார் மயிலை சீனி.வேங்கடசாமி. மருங்கூர்ப் பட்டினம் தோட்டங்களையும், காயல்களையும் (உப்பங்கழிகளையும்), செல்வம் கொழிக்கும் கடைத்தெருக்களையும் கொண்டு விளங்கியதை பாண்டி நாட்டுப் புலவரான நக்கீரர் 'விழுநிதி துஞ்சும் நீறுபெறு திருநகர், இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து, எல்லுமிழ் ஆணவம்' (அகம்: 227:19-21) என்று குறிப்பிடுவார். காவிரிப்பூம்பட்டினத்தைப் போல் ஊணூரும் மதிலையும் அகழியையும் கொண்டு விளங்கியது ('கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்' - அகம்; 227: 18). ஊணூரைச் சூழ்ந்து வயல்கள் இருந்ததை 'முழங்கு, கடல் ஓதம் காலைச் சொட்கும் நெல்லின் ஊணூர்' என்று மருதன் இளநாகனார் குறிப்பிடுவதைச் சுட்டிக் காட்டுவார் மயிலையார் மேற்படி கட்டுரையில். மேலும் மதுரைக் காஞ்சி குறிப்பிடும் நெல்லூர்

அல்லது சாலியூர் மருங்கூரும் ஊணூரும் சேர்ந்த ஊரையே குறிக்குமென்றும் கூறுவார் மயிலையார் மேற்படி கட்டுரையில். அத்துடன் தாலமி குறிப்பிடும் சாலூர் (Salour) என்பது இந்தச் சாலியூரேயென்றும் அவர் குறிப்பிடுவார் (மயிலை சீனி.வேங்கடசாமி; 'பழங்காலத் தமிழர் வணிகம்' பக்கம் 95-96). இவை தவிர காஞ்சி, உறையூர், வஞ்சி ஆகியன ஏனைய புகழ் மிக்க நகர்களாக விளங்கியவை. இவற்றில் காஞ்சி இன்றும் புகழ்பெற்று விளங்குமொரு நகர். உறையூர் புகார் நகருக்கு முன்னர் புகழ் பெற்று விளங்கிய பழம்பெரு நகர்.

# அத்தியாயம் பதினொன்று: நல்லூர் இராஜதானி நகர அமைப்பு!

இதுவரை நல்லூர் இராஜதானி பற்றிய வரலாற்றுத் தகவல்களையும், பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை, நகர அமைப்புப் பற்றிய தகவல்களையும் பார்த்தோம். ஏற்கனவே இருந்திருக்கக் கூடிய நல்லூர் இராஜதானி பற்றிய தகவல்களைச் சிற்சில இடங்களில் கோடிட்டுக் காட்டியிருந்தேன். இப்பொழுது அவற்றையெல்லாம் மீண்டும் முழுதாகப் பார்ப்போம். இந்த நகர் அமைப்பை நான் ஆய்வதற்காக எடுத்துக் கொண்ட மிக முக்கியமான ஆரம்பப்படியாகப் பின்வருவனவற்றைக் கூறலாம். நகரின் சந்தைப் பகுதி நகரைன் மையத்தில் அமைந்திருந்தது என்பதுதான் அது.

**சந்தையும், நகர் மையமும், பிரதான வீதிகளும்!**

பொதுவாக சந்தையென்பது பிரதான வீதிகள் சந்திக்கும் இடத்தில் அமைந்திருப்பதுதான் இயற்கை. சந்தையின் வெற்றிக்கு இது முக்கியம். பௌத்தர்களின் பழம்பெரும் நகர்களிலொன்றான அநுராதபுரம் தொடக்கம் பண்டைய நகரங்கள் பலவற்றில் சந்தையானது நகரின் இரு பிரதான வீதிகள் சந்திக்கும் பகுதிகளில் அமைந்திருந்ததை அறியக் கூடியதாகவுள்ளது. இதனால்தான் நல்லூர் இராஜதானியின் மையப்பகுதியாகவும் சந்தையிருந்திருக்க வேண்டுமெனற முடிவுக்கு வந்தேன். இந்த என் முடிவுக்கு மேலும் வலுவூட்டும் வகையில் இச்சந்தைப் பகுதியை மையமாக வைத்துப் பார்க்கையில் நகரில் காணப்படும் ஒழுங்கு இருக்கிறது.

அடுத்ததாக நல்லூர் இராஜதானியானது இரு பிரதான் வீதிகளால் பிரிக்கப்பட்டிருந்தது என்ற முடிவுக்கு வந்தேன். இதற்காதாரமாகப் பின்வருவனற்றைக் கூறலாம்:

இராஜதானிக்கு மேற்கு, வடக்கு வாசல்களிருந்ததை வரலாற்று நூல்கள், குறிப்புகள் புலப்படுத்துகின்றன. தமிழகத்தில் தலைமறைவாகவிருந்துவிட்டு, மீண்டும் படையெடுத்து வந்த கனகசூரிய சிங்கையாரியனைப் பற்றி யாழ்ப்பாண வைபவமாலை பின்வருமாறு கூறும்: "....கனகசூரிய சிங்கையாரியன் மதுரையிற் சேர்ந்த பொழுது பாண்டிநாட்டைப் பகுதியாய் ஆண்ட சிற்றரசர் பலரும் சேனைகளையும் ஆயுதங்களையும் கொடுத்துவிட, அவன் சகல ஆயுதங்களுடனேயே யாழ்ப்பாணம் வந்து சேர்ந்து, மேற்கு வாசல் வழியாக நுழைந்தான்" (வைபவமாலை; பக்கம்:47) இங்கு குறிப்பிடப்பட்டுள்ள மேற்கு வாசலென்பது நல்லூர்க் கோட்டையின் மேற்கு வாசலே என்பது வெள்ளிடமலை. இம்மேற்கு வாசலைப்பற்றிப் பறங்கிகளின் படையெடுப்புப் பகுதியிலும் கூறப்பட்டுள்ளது. "...யுத்தம் வாசற்புறத்தே நல்லூர்க் கோட்டையின் கோவிலுக்கு முன்னதாகவிருந்த வெளியையே இடமாக நியமித்துக் குறித்த நாளிலே யுத்தத்தை ஆரம்பித்துப் பதினொரு நாளாக நடத்தினார்கள்" (வைபவமாலை; பக்கம் 70). இந்த யுத்தத்தைப் பற்றிப் போர்த்துகேயரின் குறிப்புகளும் விபரமாக விளக்குகின்றன. Conquest of Ceylon நூலில் வீரமாகாளியம்மன் கோவிலுக்கு அண்மையில் நல்லூர்க் கோட்டையின் மேற்கு வாயில் அமைந்திருந்ததும், யுத்தம் நிகழ்ந்ததும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவையெல்லாம் நல்லூர் இராஜதானியின் மேற்கு வாசல் பற்றியும், அவ்வாசல் வீரமாகாளியம்மன் ஆலயத்திற்கண்மையில் இருந்துள்ளது பற்றியும், அதற்கண்மையில் நடைபெற்ற யுத்தங்கள் பற்றியும் விபரிக்கின்றன. அதே சமயம் இம்மேற்கு வாசலுக்கு அண்மையில் ஆனைப்பந்தி என்னுமிடம் காணப்படுவது அங்கு தமிழரசரின் ஆனைப்படைகளின் தங்கிமிடமொன்று இருந்ததை உணர்த்துவதாகவுள்ளது. இதுபோல் நல்லூர்க் கோட்டைக்கு வடக்கு வாயிலொன்று இருந்த விபரமும், அதற்குப் பாதுகாப்பாகச் சிவாலயமொன்று இருந்த விபரமும் வைபவமாலயில் வரும் சுபதிட்ட முனிவர் கதையில் கூறப்பட்டுள்ளன: "...அவ்வாலயங்களில் வடமதில் வாயில் காப்பாக நின்ற சிவாலயம் ஒன்று மாத்திரமே சிவகடாட்சம் பெற்ற ஒருவனால் முதன் முதல் நிறைவேறும்" (வைபவமாலை; பக்கம்

53-54). இது இராஜதானியின் வடக்கு வாசல் பற்றியும், அவ்வாசல் சட்டநாதர் ஆலயத்திற்கண்மையில் அமைந்திருந்தது பற்றியும் அறிவிக்கிறது. மேலும் நகரின் கிழக்குப் பகுதியில் காணப்படும் காணிப்பெயர்களான 'கோட்டைவாசல்', 'கோட்டையடி' என்பவை அப்பகுதியில் கிழக்கு வாசல் இருந்திருக்கலாம் என்பதை உணர்த்தின. மேற்கு வாசலுக்குப் பாதுகாப்பாக வீரமாகாளியம்மன் கோயிலும், வடக்கு வாசலுக்குப் பாதுகாப்பாகச் சட்டநாதர் ஆலயமும் இருந்ததை வரலாற்று நூல்கள் குறிப்பிடுவதால் கிழக்கு வாசலுக்குப் பாதுகாப்பாக வெயிலுகந்த பிள்ளையார் ஆலயமிருந்திருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தேன்.

மேற்படி 'கோட்டை வாசல்', 'கோட்டையடி' ஆகிய காணிப்பெயர்களும் வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்திற்கண்மையிலிருப்பதும் அதனையே உறுதி செய்கின்றன. நகரின் நான்கு திக்குகளிலும் பாதுகாப்பாக நான்கு ஆலயங்களான வீரமாகாளியம்மன் கோயில், சட்டநாதர் கோயில், வெயிலுகந்த பிள்ளையார் கோயில், மற்றும் கைலாசநாதர் ஆலயமாகியவற்றைச் சிங்கைப் பரராசேகரன் அமைத்திருந்தான் என்பது வரலாற்று நூல்கள் தகவலகாகவுள்ளது. இதன்படி நல்லூர் இராஜதானியின் தெற்கு வாசலும் அதற்குப் பாதுகாப்பாகக் கைலாயநாதர் கோயிலும் இருந்திருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தேன்.

இவ்விதமாக முடிவெடுத்த பின்னர் இராஜதானியானது நான்கு வாசல்களைக் கொண்டிருந்ததனால், நகரானது நான்கு வாசல்களையும் இணைக்கும் வடக்கு - தெற்கு மற்றும் கிழக்கு - மேற்கு என்று இரு பிரதான வீதிகளால் பிரிகப்பட்டிருக்க வேண்டுமென்று முடிவு செய்தேன். இவ்விதமாக நகரானது இருபெரும் பிரதான வீதிகளால் பிரிக்கப்பட்டிருந்தது என்ற முடிவுக்கு வந்தபின்னர் சந்தையானது இவ்விரு பிரதான் வீதிகள் சந்திக்குமிடத்தில் அமைந்திருந்தது என்ற முடிவுக்கு வருவது எளிதாயிற்று. நகரமானது நான்கு வாசல்களையும் இரு பிரதான வீதிகளையும், நான்கு வாசல்களுக்குப் பாதுகாப்பாக நான்கு ஆலயங்களையும் கொண்டதாக அமைந்திருந்தது என்ற முடிவுக்கு வந்ததும் மேலும் சில பிரச்சினைகள் தோன்றின. தற்போது காணப்படும் ஆலயங்களெல்லாம் போர்த்துகேயரால் இடிக்கப்பட்டு மீளக் கட்டப்பட்டவை. நல்லூர் இராஜதானியின் காலகட்டத்தில் இவற்றின் உண்மையான இருப்பிடமெவையாக இருந்திருக்கக் கூடும்?

முன்பே குறிப்பிட்டதைப் போல முத்திரைச் சந்தையென அழைக்கப்படும் பகுதியே நகரின் மையப்பகுதியாக இருந்திருக்க வேண்டும். இவ்விதம் முத்திரைச் சந்தையே நகரின் மையத்திலிருந்ததென்ற முடிவுக்கு வந்ததும் இப்பகுதியிலிருந்து வெயிலுகந்த பிள்ளையார் ஆலயம் கிழக்கிலும், சட்டநாதர் ஆலயம் மேற்கிலும் அமைந்திருந்ததும், இவற்றின் தூரங்கள் முத்திரைச்சந்தையிலிருந்து அண்ணளவாகச் சமமான தூரத்திலிருந்ததும் அவதானிக்கப்பட்டது. இவற்றிலிருந்து பின்வரும் முடிவுகள் எடுக்கப்பட்டன: சட்டநாதர் ஆலயத்தினதும், வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்தினதும் தூரங்கள் அண்ணளவாகச் சமமாயிருப்பதால் இவை அவையிருந்த பழைய இடங்களில் அல்லது அவற்றிற்கண்மையில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். நல்லூர் கந்தசாமி கோயில் மீண்டும் குருக்கள் வளவில் அமைக்கப்பட்டதால் இதனை மையமாக வைத்து ஏனைய கோயில்களான வீரமாகாளியம்மன் கோயில் மற்றும் கைலாசநாதர் ஆலயமாகியன அமைக்கப்பட்டன போலும்.

# நல்லூர் இராஜதானி நகர அமைப்பின் வடிவம்!




மேலும் சட்டநாதர் ஆலயத்தினதும், வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்தினதும் தூரங்கள் முத்திரைச் சந்தைப் பகுதியிலிருந்து அண்ணளவாகச் சமமான தூரத்திலிருப்பதாலும், முத்திரைச்சந்தைப் பகுதியை மையமாக வைத்துப் பார்க்கையில் காணப்படும் நகர அமைப்பில் காணித்துண்டுகளின் பெயர்களில் காணப்படும் ஒழுங்கும் நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பானது வட்ட வடிவானதாக அல்லது சதுர வடிவானதாக இருந்திருக்கலாமென்ற ஐயத்தினை ஏற்படுத்தின. ஆயினும் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை மற்றும் நகர அமைப்பு பற்றிய தகவல்களிலிருந்து சதுர வடிவமே பெரும்பாலும் கருத்துமுதல்வாதிகளான இந்துக்களால் பாவிக்கப்பட்டது அறியப்பட்டது. அத்துடன் இந்துக்கள் இப்பிரபஞ்சத்தை வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு போன்ற திசைகளால் உருவான சதுர வடிவான வெளியாகவும், அவ்வெளியில் நேரத்தின் பாதிப்பை இராசிகளினாலும் உருவகித்ததும் அவதானிக்கப்பட்டது. அதே சமயம் பெரும்பாலான பெளத்த கட்டடங்கள் வட்ட வடிவில் அமைக்கப்பட்டிருந்தும் அவதானிக்கப்பட்டது. பெளத்தர்களின் தாதுகோபங்கள் வட்டவடிவில் அமைக்கப்பட்டன. அவர்களின் புனித நகர்களிலொன்றான அநுராதபுரத்தின் பண்டைய நகர அமைப்பானது வட்டமானதொரு ஒழுங்கில் வட்டவடிவமான தாதுகோபங்களால் சூழப்பட்டிருந்ததை ரோலன் டி சில்வா என்னும் சிங்களப் பேராசிரியர் தனது ஆய்வுக் கட்டுரையொன்றில் விளக்கியிருந்ததையும் ஏற்கனவே பார்த்தோம். தோற்றத்தினையும், அழிவினையும்,

இரவையும் பகலையும் இவ்விதமாக ஒருவித வட்டவடிவில் நகரும் காலத்தைப் பொருள்முதல்வாதிகளான பௌத்தர்கள் வட்டவடிவினைப் பாவிப்பதன்மூலம் வெளிப்படுத்தினார்களென்பது ஆய்வாளர்கள் பலரின் முடிவென்பதையும் அறிந்தோம். எனவே பிரபஞ்சத்தை ஒருவிதமான வெளி நேர அமைப்பாகவே (நவீன பௌதிகம் கூருவதைப் போல்) கருத்துமுதல்வாதிகளான இந்துக்கள் விளங்கி வைத்திருந்தார்களென்பதுவே தர்க்கச் சிறப்புமிக்கதென்பதையும் அறிந்தோம். அத்துடன் பண்டைய இந்துக்களின் நகரங்கள் பல சதுர (அல்லது இயலாத பட்சத்தில் செவ்வக) வடிவாக அமைக்கப்பட்டதை ஏற்கனவே பார்த்தோம். இத்தகைய காரணங்களினால் நல்லூர் இராஜதானி நகர அமைப்பின் வடிவமும் சதுரமாகவே இருந்திருப்பதற்கே அதிகளவான சாத்தியக் கூறுகளிருப்பதாக முடிவு செய்யப்பட்டது.

மேலும் பண்டைய இந்துக்களின் நகரங்கள் சாதிவாரியாகப் பிரிக்கப்பட்டே அமைக்கப்பட்டிருந்ததும் அவதானிக்கப்பட்டது. இன்றைய நல்லூர் நகரின் முத்திரைச் சந்தைப் பகுதியினை மையமாக வைத்துப் பார்க்கையில் நான்கு திக்குகளிலும் காணப்படும் காணிப்பெயர்கள் மற்றும் வரலாற்று நூல்கள் கூறும் தகவல்கள் ஆகியனவும் இதனையே புலப்படுத்துவதை வெளிக்கள ஆய்வுத் தகவல்களும் வெளிப்படுத்தின.

இந்துக்களின் பண்டைய கட்டடக்கலை நூல்கள் கூறும் தகவல்களின்படி பிராமணர்கள், சோதிடர்கள் போன்றோர்க்குரிய பகுதி வடக்கும், வடமேற்கும் என்பதும், அரசர்க்குரிய பகுதி கிழக்கும் என்பதும் அறியப்படுகின்றது. நல்லூரில் நடத்திய வெளிக்கள ஆய்வுகள் தரும் தகவல்களின்படியும் வடமேற்குப் பகுதியில் அந்தணருக்குரிய குருக்கள் வளவு, அரசவைக் கவிஞருக்குரிய அரசகேசரி வளவு ஆகிய காணிப்பெயர்களைக் கொண்ட காணிகளிருந்ததும் அவதானிக்கப்பட்டது. அத்துடன் வடமேற்குப் பகுதியில் அரசருக்குரிய பல காணித்துண்டுகளிருப்பதும் உதாரணமாக பண்டாரக்குளம், பண்டாரமாளிகை வளவு, சங்கிலியன் வீதி, சங்கிலியன் தோப்பு ஆகியன இருப்பது பகுதியில் அவதானிக்கப்பட்டன. அத்துடன் வடகிழக்குப் பகுதியில் நல்லூர்க்கந்தசாமி ஆலயமும் (தற்போது கிறிஸ்தவ ஆலயமிருக்கும் பகுதியில்), பகர வடிவான யமுனாரி என்னும் தீர்த்தக் கேணியும் காணப்பட்டதையும் அவதானித்தோம். மேற்படி நல்லூர்க் கந்தசாமி ஆலயமானது மிகப்பெரிய ஆலயமாக மதில்களுடன் விளங்கியதைப் போர்த்துகேயரின் வரலாற்று நூல்கள் கூறின.

இன்றும் யமுனாரிக்கண்மையிலுள்ள வீதியில் காணப்படும் கட்டடச்சிதைவுகளைச் கலாநிதி க.குணராசா போன்றோர் மேற்படி கந்தசாமி ஆலயத்தைச் சேர்ந்ததாகக் கருவதையும் பார்த்தோம். மேற்படி கந்தசாமி ஆலயம் பெரியதொரு நிலப்பரப்பில் வடகிழக்கில் காணப்பட்டதால் போலும் அப்ப்குதியில் அரசருக்குரிய பகுதிகள் அதிக அளவில் காணப்படவில்லை போலும். அதே சமயம் மேற்படி வடகிழக்குப் பகுதியில் காணப்படும் காணித்துண்டொற்றிற்கு (பருத்தித்துறை வீதியை அண்மித்த, 'கராஜ்' காணப்படும் பகுதி) 'பாண்டியமாளிகை வளவு' என்றிருப்பதும் அவதானிக்கப்பட்டது.

பொற்கொல்லர் போன்ற தொழில்களைச் செய்பவர்கள் வாழும் பகுதி நகரின் தென்கிழக்குப் பகுதியில் இருக்க வேண்டுமென்பதைப் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை நூல்கள் பல கூறின. இதனை உறுதி செய்வது போல் நல்லூரின் தென்கிழக்குப் பகுதியில் (முத்திரைச் சந்தையை மையமாக வைத்துப் பார்க்கையில்) பல காணிப்பெயர்கள் உதாரணமாக சாயாக்காரத் தெரு.. போன்ற தொழிலாளர்க்குரிய காணிப்பெயர்கள் விளங்குகின்றன. இதுபோலவே போர்வீரர்கள், அரண்மனை ஊழியர்கள் போன்றோர் தென்மேற்குப் பகுதியில் வாழ்ந்திருக்க வேண்டுமென்பதைப் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை நூல்களும் , வெளிக்கள ஆய்வுத் தகவல்களும் (இராசகுலத்தான் வளவு போன்ற காணிப்பெயர்கள்) உறுதிப்படுத்துகின்றன. சந்தையைப்

பொறுத்தவரையில் வடகிழக்குப் பகுதியிலேயே அமையவேண்டுமென இந்துக்களின் கட்டடக்கலை நூல்கள் கூறுகின்றன. நல்லூர் ராஜதானியின் மையத்திலிருந்த முத்திரைச்சந்தையும் நகரின் நான்கு பிரதான வீதிகளின் சந்திப்பில் , வடகிழக்குப் பகுதியிலேயே அமைந்திருக்க வேண்டும். தென்கிழக்குப் பகுதி தொழிலாளருக்குரியதாக விளங்கியதால் மேற்படி அனுமானம் ஏற்றுக்கொள்ளப்படக் கூடியதே. மேற்படி சந்தையைப் பற்றிப் போர்த்துக்கேயரின் நூல்களிலொன்றான Early Christianity in Ceylon (17th Centuray Narrative) கூறுவதையும், இச்சந்தையின் நடைமுறைகளை அரசன் தனது மாளிகையிலிருந்து பார்க்கக்கூடியதாகவிருந்ததை மேற்படி நூல் விபரித்திருப்பதையும் ஏற்கனவே பார்த்தோம். மேற்படி சந்தையில் தமிழரசர் காலத்தில் சந்தையில் விற்கப்ப்டும் துணிகள் அரசாங்க முத்திரையிடப்பட்டே விற்கப்பட்டு வந்தனவென்பதை யாழ்ப்பாண வைபவமாலை, யாழ்ப்பாணச் சரித்திரம் போன்ற நூல்கள் வாயிலாகவும் அறிந்துள்ளோம். "..தமிழரசர் காலத்திற்போலவே அரசாட்சி முத்திரையில்லாத துணிகள் விற்கப்படமாட்டா. முத்திரை குத்துவதற்கும் ஒரு வரி அறவிடப்பட்டது.."(யாழ்ப்பாணச்சரித்திரம்; பக்கம் 48).

மேலும் நல்லூர் இராஜதானியைச் சுற்றிவர கோட்டை மதிலிருந்தது. இத்தகைய மதிலின் உட்புறமாக நகரைச் சுற்றிவரப் பாதையொன்று இருந்திருக்கக் கூடியதற்கும் பண்டைய இந்துக்களின் கட்டடக்கலை /நகர அமைப்பு நூல்களின் தகவல்களின் அடிப்படையில் சாத்தியக்கூறுகளுண்டு.

இவற்றையெல்லாம் ( பண்டய இந்துக்களின் நகர அமைப்பு / கட்டடக்கலை நூல்கள் மற்றும் வெளிக்கள ஆய்வுத் தகவல்கள் அடிப்படையில்) வைத்துப் பார்க்கையில் நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு எவ்வகையில் இருந்திருக்க வேண்டுமென்பது பற்றியதொரு முடிவுக்கு வர முடிகிறது. நகரானது சுற்றிவர மதிலினால் சூழப்பட்டிருந்தது. நகரின் நான்கு திக்குகளிலும் வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என நான்கு கோட்டை வாசல்களிருந்தன. இந்தக் கோட்டை வாசல்களை இணைக்கும் வகையில் நகரின் இரு பிரதான வீதிகள் வடக்கு- தெற்காகவும், கிழக்கு-மேற்காகவும் அமைக்கப்பட்டிருந்தன. மேற்படி பிரதான வீதிகளிரண்டும் சந்திக்கும் பகுதியில், சந்திப்பின் வடகிழக்குப் பகுதியில் நகரின் பிரதான சந்தையான தற்போதுள்ள முத்திரைச் சந்தை அமைந்துள்ள பகுதியில் அமைந்திருக்க வேண்டும். இவ்விதம் நகரானது மேற்படி இரு பிரதான வீதிகளாலும் வடகிழக்கு, தென்கிழக்கு, வடமேற்கு மற்றும் தென்மேற்கு என நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததையே தற்போதுள்ள முத்திரைச்சந்தையென்னும் பகுதியினை மையமாக வைத்துப் பார்க்கையில் நகரில் தென்படும் ஒழுங்கு புலப்படுத்துகின்றது. இவ்விதம் பார்க்கையில் வடகிழக்கில் அரசருக்குரிய , தெய்வத்துக்குரிய பகுதிகளும், வடமேற்கில் அரசர், அந்தணர், மந்திரி மற்றும் அரசகவி போன்றோருக்குரிய பகுதிகள் காணப்படுவதும், தென்கிழக்குப் பகுதியில் தொழிலாளர்க்குரிய பகுதிகள் காணப்படுவதும், மற்றும் தென்மேற்குப் பகுதியில் போர் வீரகள் மற்றும் அரண்மனை ஊழியர்கள் போன்றோருக்குரிய பகுதிகள் காணப்படுவதும் இப்பகுதியில் தற்போதும் காணப்படும் காணிப்பெயர்கள் மற்றும் சரித்திரச் சின்னங்கள், வீதிப் பெயர்கள் வாயிலாக அறியப்பட்டது. இவற்றையெல்லாம் ஏற்கனவே எமது வெளிக்கள ஆய்வுத்தகவல்கள் பகுதியில் விரிவாகவே பார்த்துள்ளோம். அத்துடன் நகரின் நான்கு திக்குகளிலும், கோட்டை வாசல்களுக்குப் பாதுக்காப்பாக நான்கு கோயில்கள் (சட்டநாதர் ஆலயம், கைலாசநாதர் ஆலயம், வீரமாகாளியம்மன் ஆலயம் மற்றும் வெயிலுகந்த பிள்ளையார் ஆலயம் ஆகியன) இருந்ததையும் தற்போதுள்ள நகல்களான ஆலயங்கள் மூலமாகவும், வரலாற்று நூல்களில் காணப்படும் தகவல்கள் வாயிலாகவும் அறிந்தோம்.

இவையெல்லாம் நல்லூர் இராஜதானியானது இராஜதானியாகவும் அதே சமயம் ஆலயநகராகவும் விளங்கியதைப் புலப்படுத்தி நிற்கின்றன. அத்துடன் நல்லூர்

இராஜதானி கோட்டை மதில்களுடனும், நான்கு வாயில்களுடனும், அவற்றிற்குப் பாதுகாவலாக ஆலயங்களுடனும் விளங்கியதை வரலாற்று நூல்கள், பண்டைய இந்துக்களின் கட்டட மற்றும் நகர அமைப்புக் கோட்பாடுகள், மற்றும் எமது வெளிக்கள ஆய்வுகளின்போது அவதானிக்கப்பட்ட காணிப்பெயர்கள், வரலாற்றுச் சின்னக்கள் அடிப்படையில் உய்த்துணர்ந்தோம். அத்துடன் மேற்படி நல்லூர் இராஜதானிக் கோட்டைக்குப் பாதுகாவலாகக் கொழும்புத்துறையிலும், பண்ணைத்துறையிலும் (தற்போது கொட்டடி என்றழைக்கப்படும் பகுதி பண்ணைத்துறைக்கண்மையில் காணப்படுகிறது. இது கோட்டையடி என்பதின் திரிபாகவே படுகிறது. அவ்விதமிருக்கும் பட்சத்தில் பண்ணைத்துறையில் அமைந்திருந்த கோட்டையானது இப்பகுதியிலேயே அமைந்திருக்க வேண்டுமென்று படுகிறது. )மற்றும் கோப்பாயிலும் மேலும் மூன்று கோட்டைகள் இருந்ததையும் வரலாற்று நூல்கள், காணப்படும் காணிப்பெயர்கள் மூலமாக அறிய முடிகிறது. மேலும் நல்லூர்க் கோட்டைக்கும் மேற்படி கோட்டைகளுக்குமிடையிலான பிரதான வீதிகள் ஆங்காங்கே படைவீரர்களின் முகாம்களைக் கொண்டு விளங்கியதையும், பண்ணைத்துறையில் தரையிறங்கிய போர்த்துக்கேயப் படைகள் நல்லூர் இராஜதானியின் பிரதான கோட்டையினை நோக்கிப் படை நகர்வுகளை மேற்கொண்ட போது மேற்படி போர் வீரர்களின் நிலைகளில் பலத்த எதிர்ப்பினைச் சந்திக்க நேர்ந்ததையும் போர்த்துக்கேயரின் Conquest of Celyon விரிவாகவே விபரிக்கும். இவ்வாய்வு நல்லூர் இராஜதானியின் பிரதான கோட்டையினைப் பற்றியே ஆராய்வதில் கவனத்தினைச் செலுத்தியதென்பதை இத்தருணத்தில் நினைவில் வைத்துக் கொள்வது நல்லது. கோப்பாய்க் கோட்டைபற்றி சுவாமி ஞானப்பிரகாசர் கோப்பாய்ப் ப்ழைய கோட்டை என்னுமொரு கட்டுரையொன்றினை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். அதிலவர் கோப்பாய்ப் பழைய கோட்டை இருந்ததாக அறியபப்டும் பகுதி பற்றி விளக்குவார். திருமதி வூட்ஸ்வேர்த் என்பவருகுச் சொந்தமான The Old Castle என்றழைக்கப்படும் காணியிலேயே தம்ழி மன்னர்களின் கோப்பாய்க் கோட்டை இருந்ததாக அவர் குறிப்பிடுவார். அதற்காதாரமாக அப்பகுதியினைச் சுற்றியுள்ள பகுதி 'கோட்டை வாய்க்கால்' என்றழைக்கப்படுவதைச் சுட்டிக் காட்டுமவர் அதுவே மேற்படி கோப்பாய்க் கோட்டையின் அகழியாக இருந்திருக்கக் கூடுமென்பார்.

அப்பகுதியிலும், மேற்படி கோட்டை அமைந்திருந்ததாகக் கருதப்படும் காணியிலும் காணப்படும் கட்டடச்சிதைவுகள் கோப்பாய்க் கோட்டையின் சிதைவுகளாகவிருக்கக் கூடும். இது பற்றிய அகழ்வாராய்வுகள் போதிய அளவில் நடத்தப்பட வேண்டும். சுவாமி ஞானப்பிரகாசர் குறிப்பிட்டுள்ள மேற்படி 'பழைய கோட்டை' பகுதி இன்று பல காணித்துண்டுகளாகப் பிரிவு பட்டுப் போயிருப்பதையே எண்பதுகளில் அப்பகுதிக்குச் சென்றபோது அறிந்து கொள்ள முடிந்தது. நம்மவருக்குக் காணியில் இருக்கும் ஆர்வம், காணப்படும் ப்ழமையின் சின்னங்களைப் பேணுவதிலில்லை என்பதற்கு மேற்படிக் கோப்பாய்க் கோட்டையின் இன்றைய நிலையும், நல்லூர் இராஜதானியின் இன்றைய நிலையும் புலப்படுத்தும்.

இதுவரையில் ஈழத்துத் தமிழ் மன்னர்களான ஆரியச் சக்கரவர்த்திகளின் யாழ்ப்பாண இராச்சியத்தின் இறுதி இராஜதானியாகப் புகழ்பெற்று விளங்கிய நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு எவ்விதமிருந்திருக்க வேண்டுமென்பது பற்றி இயலுமானவரையில் வரலாற்றுத் தகவல்கள், காணிப்பெயர்கள், காணப்படும் வரலாற்றுச் சின்னங்கள், கட்டடக்கலை மற்றும் நகர அமைப்புப் பற்றிய பண்டைய இந்துக்களின் நூல்கள் மற்றும் ஆய்வாளர்கள் கூறும் தகவல்களின் அடிப்படையிலும், மேற்படி அறிவின் விளைவாக உண்டான தர்க்கரீதியிலான ஞானத்தின் அடிப்படையிலும் ஒரு முடிவுக்கு வந்தோம். எவ்விதம் வந்தோமென்பதை இவ்வத்தியாயத்தில் விபரித்திருந்தோம். எதிர்காலத்தில் சந்தர்ப்பமேற்படின் மீண்டும் விரிவாக இவ்வாய்வு நூல் புதுக்கி எழுதப்படும். இவ்விதமாக ஈழத்துத் தமிழ் இராஜதானிகளிலொன்றான நல்லூர் இராஜதானியின் நகர அமைப்பு பற்றி விபரிக்கும் முதனூலென்ற பெருமையினை இந்நூல் பெறுகின்றது. இந்நூலின்

அணிந்துரையில் பிரபல எழுத்தாளர் செ.யோகநாதன் கூறுவதுபோல் 'பின்னொருகாலத்தில் , சுதந்திரக்காற்று வீசும் சூழலில் வாழப்போகின்ற இளந்தலைமுறை ஆய்வாளர்களுக்கு இந்த நூல் ஓர் ஆக்கபூர்வமான வழிகாட்டியாக அமையுமென்று நிச்சயமாக நம்புகின்றேன்.

## உசாத்துணை நூல்கள், கட்டுரைகள்:


1. யாழ்ப்பாண வைபவமாலை - குல சபாநாதன் பதிப்பித்தது.
2. யாழ்ப்பாணச் சரித்திரம் - முதலியார் செ.இராசநாயகம்.
3. யாழ்ப்பாணச் சரித்திரம் - ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை
4. ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி - கலாநிதி செ.நடராசா.
5. தமிழகம்: ஊரும் பேரும் - ரா.பி.சேதுப்பிள்ளை.
6. தமிழ் மனையடி சாத்திரம்.
7. Conquest of Ceylon- Queros F. Vol 1 & 4.
8. Tamils and Ceylon - C.S.Navaratnam
9. The Kindom of Jaffan - S.Pathmanathan.
10. Urban and Regional Planning - Rame Gowda.
11. Urban Geography (Thesis) - Prof. Jeryasingam.
12. Early Christianity in Ceylon - Fr.Rev.Peris, Fr. Meersman.
13. Living Architecture: Indian - Andreas Volwahsen.
14. Monumental Art and Architecture of India - K.Sundaram.
15. The Arts and Crafts of India and Ceylon - Ananda Coomarasamy.
16. The Kings of Jaffna during Prtugeese Period (Article) - Swami Gnanappirakasar.
17. யாழ்ப்பாணம் என்ற பெயரின் காரணங்கள் பற்றிய கருத்தாய்வு - கலாநிதி செ.நடராசா (கட்டுரை, தமிழோசை 11-11-1993, கனடா).
18. ஈழமும், இந்து மதமும் - பொலநறுவைக் காலம்- கலாநிதி சி.க.சிற்றம்பலம் (சிந்தனை ஆடி 1984).
19. யாழ்ப்பாணம் என்ற பெயர் தோன்றிது எவ்வாறு? - ம.க.அ.அந்தனிசில் (வீரகேசரி 9-10-1990)
20. யாழ்ப்பாணத்துப் பெரிய கோயில் - கலாநிதி க.குணராசா (வீரகேசரி 15-08-1993)
21. வையாபாடல் - கலாநிதி செ.நடராசா (தமிழோசை, 15-12-1993, கனடா).
22. யாழ்ப்பாண இராச்சியம் - கலாநிதி சி.க.சிற்றம்பலம் (ஈழமுரசு, கனடா 25-2-1994, 11-03-1994)
23. பழந்தமிழர் கட்டடக்கலையும் நகர அமைப்பும் - நா.பார்த்தசாரதி.
24. சிலப்பதிகாரம் - இளங்கோவடிகள் (புலியூர்க் கேசிகன் பதிப்பித்தது).
25. தமிழர் தெய்வங்கள் - நடன. காசிநாதன்.
26. பழங்காலத் தமிழர் வாணிகம் - மயிலை. சீனி. வேங்கடசாமி.
27. ஈழத்து வாழ்வும், வளமும் - பேராசிரியர். க.கணபதிப்பிள்ளை.
28. நூல்: நல்லூர் இராஜதானி நகர அமைப்பு. ஆசிரியர்: வ.ந.கிரிதரன், பதிப்பகம்: சிநேகா, 348 டிடிகே சாலை இராஜப்பேட்டை, சென்னை - 600014 / மங்கை பதிப்பகம், கனடா முதல் பதிப்பு: டிசம்பர் 1996நில அளவைத்
29. திணைக்கள வரைபடங்கள்:Jaffna Town Planning Assesment Surveys sheet no: A2/45/4W, A2/45/3E

# கோப்பாய்ப் பழைய கோட்டையின் கோலம்! - வ.ந.கிரிதரன்

*- 15-3-1981* வீரகேசரி வாரவெளியீட்டில் வெளி வந்த கட்டுரை இது*. 35* ரூபா அனுப்பியிருந்தார்கள்*. -*

நல்லூர் நகர் பற்றி ஆராய விளைந்த போது, கட்டடக் கலை மாணவனான நான் உதவி நாடி கலாநிதி கா.இந்திரபாலாவை நாடிய போது தான், அவர் தனது சிரமத்தைப் பொருடபடுத்தாது தனது வேலைகளுக்கு மத்தியில் எனக்கு உதவினார். அபோதுதான் அவர் கோப்பாயில் அமைந்திருந்த தமிழ் மன்னர்களின் கோட்டையைப் பற்றியும் அது பற்றிய சுவாமி ஞானப்பிரகாசரின் கட்டுரை பற்றியும் கூறினார். தமிழரின் பழமை வாய்ந்த சின்னங்களின் பரிதாப நிலை கண்டு மனம் நொந்திருந்த எனக்கு அந்தக் கோட்டை அந்தக் கோட்டையின் இன்றைய நிலையைப் பார்க்க வேண்டும் போலிருக்கவே , கோப்பாய் விரைந்தேன். கோப்பாய் பொலிஸ் ஸ்டேசனுக்கு முன்பாயுள்ள சேர்ச்சைச் சேர்ந்த சற்குணசிங்கம் என்பவர் எனக்கு அப்பகுதியினைக் காட்டி உதவினார்.

மானிப்பாய் கைதடிச் சந்திக்குச் சற்று அப்பால் வீதியின் வலது புறமாக இருந்த ஒரு பழமையான வாயில் முகப்பை காட்டிய அவர் 'இதுதான் பழைய கோட்டை' (Old Castle) என்ற போது தனிமையான நிலையில் நீண்ட காலமாக அமைதியுடன் காத்து நிற்கும் ஒருமனிதனைப் போன்று அந்தப் பகுதி எனக்குத் தோன்றியது.

அந்த வாசலைக் கடந்து உள்ளே சென்றோம். சற்குணசிங்கம் சொன்னார்:

'அருகிலுள்ள எல்லாக் காணிகளுமே பழைய கோட்டை என்றுதான் அழைக்கப் படுகின்றன. ஆனால் ஒவ்வொரு துண்டும் ஒவ்வொருத்தரின் கைக்கு மாறிக் காலத்தின் கோலத்திற்கேற்ப வெகுவாக மாறி விட்டன. கடைசியாக உள்ள காணி மட்டும் இன்னும் விற்க படாமலுள்ளது..'

அந்தப் பின்புறக் காணித் துண்டை அடைந்ததுமே ஒருவித பழமை வாய்ந்த சூழலின் இனிமையில் மனது மூழ்கி விடுகின்றது. புதுமையானதொரு உலகிற்கு வந்து விட்டது போன்றதொரு உனர்வு ஏற்படுகின்றது. சற்குணசிங்கம் மேலும் கூறலானார்:

'இந்தக் காணியில் முன்பொருமுறை நான் வேம்பொன்றை வெட்டியபோது எலும்புத் துண்டுகள் அகப்பட்டன. நிலத்தில் செங்கற்கள் குவிந்து கிடக்கின்றன. அதோ அங்கே நிலத்தைப் பாருங்கள்.'

பார்த்தேன். அவர் காட்டிய இடத்தில்; பூமியினூடு எட்டிப் பார்த்தபடி செங்கற்கள் சிரித்தன. அவரே தொடர்ந்தார்:

'நிலத்தின் அமைப்பைப் பாருங்கள் தம்பி. ஒரு பக்கம் பதிந்தும், இன்னொரு பக்கம் உயர்ந்தும் கிடப்பதை. உயர்ந்து கிடக்கும் பகுதியைத் தோண்டிப் பார்ப்போமாயின் பழைய கோட்டையின் சரித்திரம் தெளிவாகலாம்'.

எனக்கு ஆச்சர்யமாகவிருந்தது. மனுஷன் எவ்வளவு ஆழமாகச் சிந்தித்திருக்கிறார். அத்துடன் அவர் ஒரு கதையையும் கூறினார்:

'நல்லூர்க் கோட்டையையும் , இந்தக் கோட்டையையும் இணைக்கும் ஒரு சுரங்கப் பாதை இருந்ததாக ஒரு கதை உள்ளது.'

அப்போதுதான் சுவாமி ஞானப்பிரகாசர் தனது கட்டுரையில் எழுதியிருந்த கோட்டை வாய்க்கால் பற்றி நினைவிற்கு வரவே கோட்டை வாய்க்காலைப் பற்றி வினவினேன். அந்தப் பழைய கோட்டை எனப்படும் காணித்துண்டுகளின் அருகாகச் செல்லும் சிறிய ஒழுங்கையையே கோட்டை வாய்க்கால் என்கின்றார்கள். அந்த ஒழுங்கையானது பழைய கோட்டை எனப்படும் நிலப் பகுதியிலும் தாழ்வானதாக அமைந்துள்ளது. சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கள் இந்தக் கோட்டை வாய்க்காலையே பழைய கோட்டையின் அகழியாகக் கருதுகின்றார்.

கோட்டை வாய்க்கால் என்னுமிப்பகுதி வயலுடன் முடிவடைகின்றது. பழைய கோட்டையின் பின்புறமாக உள்ள வயற்பகுதியும் வெகு தாழ்வானதாக உள்ளது. அவ்வயலில் பயிர் விளைவிக்கும் விவசாயியும் தான் மண்ணைக் கொத்துகையில் எலும்புகள் கிடைத்ததாகக் கூறினார்.

ஒரு காலத்தில் தனிச்சிறப்புப் பெற்று விளங்கிய அப்பகுதியின் இன்றைய பரிதாப நிலை கண்டு வயிறு பற்றியெரிந்தது. சற்குணசிங்கம் கூறினார்:'இப்பகுதியில் ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டு பாதுக்காக்கப்பட வேண்டும் ' அவரது குரலில் அப்பகுதியின் இன்றைய நிலைகண்டு படர்ந்த கவலை நியாயமானதுதான்.

வரலாற்றில் ஒரு தெளிவின்றிக் கிடக்கும் இலங்கைத் தமிழினத்திற்கு இன்றைய நிலையில் தேவையானது வெறும் வாய்ச் சவடால்களல்ல. ஆக்கபூர்வமான ஆய்வுகளே. இதற்கு தமிழ்ப்பகுதிகளில் காணப்படும் பழைமையான சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சின்னங்கள், அழிபாடுகள் என்பவை பேணிப்பாதுகாக்கப்படல் மிகவும் அவசியமானதொன்றாகும்.

இலங்கையின் கடைசித்தமிழ் மன்னர்களான ஆரியச் சக்கரவர்த்திகளின் காலத்தில் புகழ்பெற்ற இராஜதானியாக விளங்கிய நகர்தான் நல்லூர். இன்றோ அது காலத்தின் கோலத்திற்கேற்ப வெகுவாக மாறிக்கொண்டு வருகின்றது. சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பேணிபாதுகாக்கப்படவேண்டிய அந்நகரின் பழமையின் சின்னங்களைக் காண்பதே அரிதாகிக் கொண்டு வருகின்றது. பொதுமக்களோ, அரசியல்வாதிகளோ இது பற்றிக் கவனிக்காமல் இருப்பது வருத்ததிற்குரியது. யமுனாரி (யமுனா ஏரி) செல்லும் மண்பாதையிலும் நிலத்தில் காணப்படும் செங்கற்களை ஆராய்ந்து பார்ப்பின் அவை எத்தனையோ கதைகளைக் கூறக்கூடும்.

தமிழ் இனத்தின் சரித்திரத்தை விளக்கக்கூடிய சின்னங்களே அரிதாகக் காணப்படும் இன்றைய காலகட்டத்தில் , காணப்படும் ஒருசில சின்னங்களையாவது பேணிப்பாதுகாப்பது மிகவும் அவசியமாகும். இதையாவது நாம் செய்யாதுவிடின் வருங்காலச் சந்ததியினர் நம்மை என்றுமே மன்னித்து விட மாட்டார்கள்.

நன்றி: வீரகேசரி, தாயகம், பதிவுகள்

# ஆய்வு: கோப்பாய்க் கோட்டை பற்றிய வரலாற்றுக் குறிப்புகள்! - வ.ந.கிரிதரன் -

- 'எழுநா' இணையத்தளத்தில் வெளியான கோப்பாய்க் கோட்டை பற்றிய கட்டுரை. -

தமிழர்களின் இராஜதானியாக நல்லூர் விளங்கிய பதினாறாம் நூற்றாண்டில், இராஜதானியில் அமைந்திருந்த பிரதான கோட்டைக்குப் பாதுகாப்பாக மூன்று சிறு கோட்டைகள் கொழும்புத்துறை, பண்ணைத்துறை மற்றும் கோப்பாய் ஆகிய இடங்களில் அமைந்திருந்தன. இவற்றைப் பிரதான கோட்டையுடன் இணைக்கும் பிரதான வீதிகளில் காவலரண்களும் அமைக்கப்பட்டிருந்தன. கொழும்புத்துறை, பண்ணைத்துறை ஆகியவை துறைமுகங்களாகவும் விளங்கின. இவற்றில் கோப்பாயில் அமைந்திருந்த கோட்டை பற்றி விபரிக்கின்றது இந்தக் கட்டுரை.

எண்பதுகளில் இக்கட்டுரையாசிரியர் தனது 'நல்லூர் ராஜதானி நகர அமைப்பு' பற்றிய ஆய்வின்பொருட்டுப் பேராசிரியர் கா. இந்திரபாலாவை யாழ். பல்கலைக்கழகத்தில் சந்தித்தபோது அவர் , 'சுவாமி ஞானப்பிரகாசர் பல வருடங்களுக்கு முன்னரே கோப்பாய்க் கோட்டை பற்றியும், அது இருந்ததாகக் கருதப்படும் இடம் பற்றியுமொரு கட்டுரையொன்றினை ஆய்விதழொன்றில் எழுதியிருப்பதாகவும், அது யாழ். பல்கலைக்கழகத்தின் நூலகத்தில் இருப்பதாகவும் ' குறிப்பிட்டிருந்தார். அந்தக் கட்டுரை ஜனவரி 1917 இல் வெளியான Ceylon Antiquary and Literary Register என்னும் வரலாற்றிதழின் 194, 195ஆம் பக்கங்களில் 'Sankily's Fortress at Kopay' (சங்கிலியின் கோப்பாய்க் கோட்டை) என்னும் தலைப்பில் வெளியாகியிருந்த கட்டுரை. கோப்பாய்க் கோட்டை பற்றிய ஆய்வுகள் செய்யும் எவரும் அந்தக்கட்டுரையினைத் தவறவிட முடியாது. அத்துணை முக்கியத்துவம் மிக்க கட்டுரை அது. அதிலவர் போர்த்துகேய வரலாற்றாசிரியரான தியாகோ தோ கூத்தோ (Diego do Couto) கொன்ஸ்தந்தீனு த பிறகன்சா என்னும் போர்த்துகேயத் தளபதிக்கும், யாழ்ப்பாண இராச்சியத்தின் அரசன் செகராசசேகரனுக்கும் (இவனே முதலாம் சங்கிலி என்பது வரலாற்றாய்வாளர் கருத்து) நல்லூரில் நடந்த போரின் போது சங்கிலி கோப்பாயில் அமைந்திருந்த கோட்டைக்கு ஓடியது பற்றியும், அந்தக் கோட்டை பற்றியும் குறிப்பிட்டிருந்ததைச் சுவாமி ஞானப்பிரகாசர் பின்வருமாறு சுட்டிக்காட்டுவார்:

"கோப்பாய்க் கோட்டையானது சுடாத செங்கற்களானது. அதன் கொத்தளங்கள் (Bastions), கூண்டுக் கோபுரங்களுடன் (Turrets) சிறப்பாகவும், உறுதியாகவும் கட்டப்பட்டிருந்தது" (கூத்தோ) ('சங்கிலியின் கோப்பாய்க் கோட்டை', 'பக்கம் 194)

அத்துடன் வேர்ணாவோ டி குவேறாஸ் சுவாமிகளின் (Fernao De Queyrcz) கோப்பாய்க் கோட்டை பற்றிய குறிப்புகளின் அடிப்படையில் வரலாற்றாசிரியர் P. E. பீரிஸ் சங்கிலியின் பாதுகாப்பிடம் கோப்பாயிலேயே இருந்திருக்க வேண்டுமென்று கருதுவதையும் சுட்டிக்காட்டுவார் சுவாமி ஞானப்பிரகாசர். வேர்ணாவோ டி குவேறாஸ் சுவாமிகளின் குறிப்புகளில் கிறிஸ்தவ ஆலயம் யாழ். மன்னனின் இருப்பிடத்தில் கட்டப்பட்டது என்று குறிப்பிடப்பட்டிருக்கும் தகவலின் அடிப்படையில் சுவாமி ஞானப்பிரகாசர் அவ்விடத்தைக் கண்டுபிடித்து அங்கு செல்கின்றார். அப்பகுதியானது மானிப்பாய்- கைதடிச் சந்திக்குக் கிழக்காக, பருத்தித்துறை வீதியில் அமைந்திருந்தது என்பதையும் சுட்டிக்காட்டுகின்றார். அக்காணியின் பெரும் பகுதி திருமதி C.வேர்ட்ஸ்வேர்த் (Mrs.C.Wordsworth) என்பவருக்குச் சொந்தமாகவிருந்தது. அக்காணியின் பெயர் கோயில் வளவு என்று அழைக்கப்பட்டது. அங்கு ஃபிரான்சிஸ்கான் கிறிஸ்தவ ஆலயம் (Franciscan Church) கட்டப்பட்டபின்பு அப்பெயர் வந்தது. அப்பகுதி 1880இற்கு முன் C.M.S மிஷனுக்குச் சொந்தமாகவிருந்ததென்றும், சிம்மொன்ஸ் சுவாமிகளால்

(Rev.Mr.Syammons) திருமதி வேர்ட்ஸ்வேர்த்துக்கு விற்கப்பட்ட விபரங்களையும் சுவாமி ஞானப்பிரகாசரின் மேற்படி கட்டுரை அறியத் தருகின்றது. கோட்டை அமைந்திருந்த காணி சுமார் பத்து ஏக்கரென்றும், அதன் 6/10 பகுதி C.M.S மிஷனுக்குச் சொந்தமாக இருந்ததென்றும், அப்பகுதியையே மிஷன் ,திருமதி வேர்ட்ஸ்வேர்த்துக்கு விற்றதென்றும் மேற்படி கட்டுரை விபரிக்கின்றது.

இக்காணியில் யாழ். மன்னர்களின் கோட்டை அழிக்கப்பட்டு கிறிஸ்தவ ஆலயம் கட்டப்பட்டு, கூடவே ஆலயத்துக்குரிய இல்லமொன்றும் கட்டப்பட்டது. இந்த ஆலயம் பின்னர் ஒல்லாந்தர் காலத்தில் கவனிப்பாரற்று சிதைந்து போயிற்று. இந்த ஆலய இல்லத்தின் (Church House) இடிபாடுகளுக்கு மேல்தான் திருமதி வேர்ட்ஸ்வேர்த்தின் இல்லம் கட்டப்பட்டது என்பதை சுவாமி ஞானப்பிரகாசரின் மேற்படி கட்டுரை தெரிவிக்கின்றது. இதற்கு அவருக்கு உதவியது ஒல்லாந்தச் சுவாமியான பிலிப்பஸ் பால்டேயஸின் (Rev.Philippus Baldaus) நூலிலிருந்த போர்த்துக்கேயரின் கிறிஸ்தவ ஆலய வரைபடங்கள். இச்சுவாமியே ஒல்லாந்தர் முதலில் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றியபோது அவர்களுடன் வந்திருந்த கிறிஸ்தவ சுவாமியாவார். இவர் அக்காலகட்டத்தில் யாழ்ப்பாணத்திலிருந்த பெரும்பாலான போர்த்துக்கேயரின் கிறிஸ்தவ ஆலயங்களின் வரைபடங்களைத் தனது புகழ்பெற்ற நூலான ‘மலபார், கொரொமண்டெல் மற்றும் சிலோன்’ (Malabar, Coromandel and Ceylon) என்னும் நூலில் உள்ளடக்கியுள்ளார். பிலிப்பஸ் பால்டேவியஸ் சுவாமிகளின் ஒல்லாந்த மொழியிலான மூல நூல் 1672 இல் அம்ஸர்டாமில் பிரசுரிக்கப்பட்டதாகவும், அதன் ஆங்கில வடிவம் 1703இல் வெளியானதாகவும் மேற்படி தனது கட்டுரையில் சுவாமி ஞானப்பிரகாசர் குறிப்பிடுவார்.

அந்த வரைபடங்களிலிருந்த ‘ஆலய இல்லத்தின் வரைபடத்தின் அடிப்படையில் திருமதி வேர்ட்ஸ்வேர்த்தின் இல்லத்தை ஆராய்ந்து பார்த்த சுவாமி ஞானப்பிரகாசர் ‘ஆலய இல்லத்தின் ஒரு சுவர் இன்னும் முழுமையாக திருமதி வேர்ட்ஸ்த்தின் இல்லத்திலிருப்பதை அவதானிக்கின்றார். அத்துடன் பழைய ‘ஆலய இல்லத்தின் அறையொன்றின் அத்திவாரத்தின் மீது திருமதி வேர்ட்ஸ்வேர்த்தின் இல்லம் கட்டப்பட்டுள்ளதையும் அவதானிக்கின்றார். இவ்விதமாக மேற்படி கட்டுரை கோப்பாய்க் கோட்டை அமைந்திருந்த பகுதியில் போர்த்துக்கேயரால் கட்டப்பட்ட கிறிஸ்தவ ஆலயம் பற்றியும், ‘ஆலய இல்லம்’ பற்றியும் பல தகவல்களைத் தருகின்றது.

மேற்படி கட்டுரையில் மேலும் பல வரலாற்று முக்கியத்துவம் மிக்க தகவல்களையும் சுவாமி ஞானப்பிரகாசர் சுட்டிக்காட்டுவார். கோப்பாய்ப் பகுதி மக்களால், திருமதி வேர்ட்ஸ்வேர்த்தின் இல்லம் அமைந்திருந்த பகுதி ‘பழைய கோட்டை’ (The Old Castle) என்று அழைக்கப்பட்டது என்பதைச் சுட்டிக்காட்டிய ஞானப்பிரகாசர் திருமதி வேர்ட்ஸ்வேர்த்திடம் “அதற்கான காரணம் தெரியுமா?” என்று கேட்கின்றார். அதற்கவர் “தெரியாது” என்கின்றார். அதற்கு ஞானப்பிரகாசர் “தமிழ் மன்னர்களின் கோட்டை இங்கிருந்தது. சங்கிலி போர்த்துகேயருக்கெதிராக இங்கிருந்துதான் போராடினான்” என்கின்றார்.

அத்துடன் மேற்படி பழைய கோட்டையைச் சுற்றியுள்ள தாழ்வான பகுதி ‘கோட்டை வாய்க்கால்’ என்று அவ்வூர் மக்களால் அழைக்கப்படுவதைச் சுட்டிக்காட்டும் ஞானப்பிரகாசர் அது கோப்பாய்க் கோட்டையின் அகழி என்று அடையாளப்படுத்துவார். இவ்வரிய வரலாற்று முக்கியத்துவம் மிக்க தகவல்களைத் தருகின்றது,சுவாமி ஞானப்பிரகாசரின் 1917இல் எழுதப்பட்ட மேற்படி கோப்பாய்க் கோட்டை பற்றிய கட்டுரை.

இந்தக்கோட்டை பற்றித் தனது 'யாழ்ப்பாண வைபவ விமர்சனம்' நூலிலும் சுவாமி ஞானப்பிரகாசர் குறிப்பிட்டுள்ளார். அதனையும் ஆவணப்படுத்தும் பொருட்டு இங்கு சுட்டிக்காட்டுவது பொருத்தமானதும், நியாயமானதுமாகும்:

"நல்லூர்க் கோட்டை அக்காலப் போருக்குப் போதிய பலமுள்ளதாகவிருந்தமையால் செகராசசேகரன் அதிலிருந்து போர் தொடுப்பானெனப் பறங்கியர் காத்திருந்தனர். ஆயின் அர்த்தசாமத்தில் அவன் தன் திரவியங்கள் அனைத்தையும் அள்ளிக்கொண்டு அரண்மனைக்கும் நெருப்பு வைத்திட்டுக் கோப்பாய்க் கோட்டைக்கு ஓட்டம் பிடித்தான். இது 'சுடாத செங்கற்களால் நன்றாய்ச் சமைக்கப்பட்டுக் கொத்தளங்களோடும், உருண்டைக் கோபுரங்களோடும்  கூடியதாய் நயமான பெலனுள்ளதாய்' விளங்கியது. (Couto) இதன் நிலையம் மானிப்பாய்க் கைதடித் தெருவும், யாழ்ப்பாணப் பருத்தித்துறைத் தெருவும் குறுக்கிடுஞ் சந்திப்பின், வடகிழக்குக் கோணத்தில் தற்காலம் ஸ்ரீ வேர்ட்ஸ்போத் குடும்பத்தினரது ஆட்சியிலிருக்கும் 'பழைய கோட்டை'  எனும் வளவாமென எம்மால் சில ஆண்டுகளின் முன்னர்  கண்டுபிடிக்கப்பட்டது. ('யாழ்ப்பாண வைபவ விமர்சன், பக்கம் 127 & 128)"

கோப்பாய்க் கோட்டை பற்றி சுவாமி ஞானப்பிரகாசருக்குப் பின்னர் எழுதப்பட்ட தனிக்கட்டுரையாக  'கோப்பாய் பழைய கோட்டையின் கோலம்' என்னும் தலைப்பில் 15.3.1981 அன்று வெளியான வீரகேசரி வாரவெளியீட்டில் இந்தக்கட்டுரையாசிரியர் வ.ந.கிரிதரன் எழுதிய  கட்டுரையைக் குறிப்பிடலாம்.  வேறு யாராவது 1917 – 1981 காலகட்டத்தில்  எழுதியிருப்பதாகத்தெரியவில்லை.  கலாநிதி கா.இந்திராபாலவுடனான சந்திப்பின்போது அவர் குறிப்பிட்டிருந்த சுவாமி ஞானப்பிரகாசரின் 'கோப்பாய்க் கோட்டை' கட்டுரையை வாசித்ததிலிருந்து அதனை நேரில் சென்று பார்க்கவேண்டுமென்ற பேரார்வம் இக்கட்டுரையாசிரியருக்கு எழுந்தது. அதனால் அப்பகுதியைச் சென்று பார்த்து, அதன் நிலை கண்டு வருந்தி அவர் எழுதிய கட்டுரை அது.

அவ்விதம் கோப்பாய் சென்று  கோப்பாய்ப் பொலிஸ் ஸ்டேசனுக்கு முன்பாயுள்ள 'சேர்ச்சைச்' சேர்ந்த சற்குணசிங்கம் என்பவரைச் சந்தித்தபோது   அவர்  மானிப்பாய் கைதடிச் சந்திக்குச் சற்று அப்பால் வீதியின் வலது புறமாக இருந்த ஒரு பழமையான வாயில் முகப்பை காட்டி   'இதுதான் பழையகோட்டை' (Old Castle) என்றார். அதன் வாயில் முகப்பில் Old Castle என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. சுவாமி ஞானப்பிரகாசரின் 1917 கட்டுரையில் அம்முகப்பில் அவ்விதம் குறிப்பிடப்படாததால் அவ்வாயில் முகப்பு அதற்குப் பின்னர் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.  இக்கட்டுரையாசிரியர் சென்றிருந்தபோது  'பழைய கோட்டை' என்றழைக்கப்பட்ட அக்காணி மேலும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு விற்கப்பட்டிருந்தது. எஞ்சிய பகுதி மட்டும் விற்கப்படாமல் திருமதி வேர்ட்ஸ்வேர்த் குடும்பத்தினருக்குச் சொந்தமாகவிருந்தது. தற்போது அப்பகுதி அடையாளம் தெரியாத வகையில் மாறிவிட்டது.

அக்காணியில் வேம்பொன்றை வெட்டும்போது எலும்புத் துண்டுகள் அகப்பட்டதையும், நிலத்தில் காணப்படும் செங்கற்களையும் சற்குணசிங்கம் எடுத்துரைத்தார்.  அத்துடன் 'நல்லூர்க் கோட்டையையும், கோப்பாய்க்  கோட்டையையும் இணைக்கும் ஒரு சுரங்கப்பாதை இருந்ததாக ஒரு கதை உள்ளது' என்றும் கூறினார்.  சுவாமி ஞானப்பிரகாசர் குறிப்பிட்ட கோட்டை வாய்க்கால்  'பழைய கோட்டை'  காணியின் அருகிலுள்ள சிறிய ஒழுங்கை. அந்த ஒழுங்கை வயலுடன் முடிவடைகின்றது.  கோட்டை வாய்க்கால் பகுதி 'பழைய கோட்டை' காணிப்பகுதியைவிடத் தாழ்வானதாக அமைந்துள்ளது. சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கள் இந்தக் கோட்டை வாய்க்காலையே பழைய கோட்டையின் அகழியாகக் கருதுகின்றார்.

கோட்டை வாய்க்கால் முடியுமிடத்திலிருந்த வயலில் பயிர் விளைவிக்கும் விவசாயி ஒருவரையும் அந்த விஜயத்தின் போது சந்திக்க முடிந்தது . 'மண்ணைக் கொத்துகையில் எலும்புகள் கிடைத்ததாக ' அவர் கூறினார்.

ஒரு காலத்தில் தனிச்சிறப்புப் பெற்று விளங்கிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த அந்தப்பகுதி, சுவாமி ஞானப்பிரகாசரால் ஆய்வுகள் மூலம் அடையாளம் காணப்பட்ட பிரதேசம், இன்று நகரமயமாக்கலில் காணாமலே போய்விட்டது துரதிருஷ்டவசமானது, வருந்தத்தக்கது. அடையாளம் காணப்பட்ட வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பகுதிகளைக் கூடப் பாதுகாக்க முடியவில்லையென்பதை என்னவென்பது?

கோப்பாய்க் கோட்டை பற்றி முனைவர் பொ. ரகுபதியின் தனது முனைவர் பட்ட ஆய்வேடான Early Settlements in Jaffna (யாழ்ப்பாணத்தின் ஆரம்பக் குடியிருப்புகள்') நூலில் கோப்பாய்க் கோட்டை பற்றிய இரு பக்கக் கட்டுரையுள்ளது. அது தற்போது இராசமாளிகை என்றழைக்கப்படும் காணித்துண்டொன்று பற்றிய தகவற் கட்டுரையே. இக்கட்டுரையில் கோப்பாய் பற்றிய வரலாற்றுக்குறிப்புகள் பொதுவாகக் குறிப்பிடப்படுகின்றன. ஓரிடத்திலும் சுவாமி ஞானப்பிரகாசரின் 1917இல் எழுதப்பட்ட கோப்பாய்க் கோட்டை பற்றிய கட்டுரை பற்றியோ, கோப்பாய்க் கோட்டை இருந்த இடம் பற்றிய அவரது ஆய்வு முடிவுகள் பற்றியோ குறிப்பிடப்படாதது ஆச்சரியமளிக்கின்றது.

மேலும் இராசமாளிகை என்று இவர் குறிப்பிடும் பகுதிக் காணி 'பழையகோட்டை' (Old Castle) என்றே அவ்வூர் மக்களால் அழைக்கப்பட்டு வந்ததை 1917இல் வெளியான சுவாமி ஞானப்பிரகாசரின் கட்டுரையும் அவ்வாறே குறிப்பிடுகின்றது. 1981 இல் இப்பகுதிக்கு இக்கட்டுரையாசிரியர் சென்றபோது வாயில் முகப்பில் Old Castle என்று எழுதப்பட்டிருந்ததை அவதானித்துள்ளார். அங்கு தமிழ் மன்னரின் அரண்மனை அழிந்த பின்னர் போர்த்துக்கேயர் கட்டிய கிறிஸ்தவ ஆலயமிருந்த காரணத்தால் இக்காணியின் பெயர் 'கோயில் வளவு' என்றழைக்கப்பட்டதையும் சுவாமி ஞானப்பிரகாசர் தனது 1917இல் எழுதிய கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இவற்றை முனைவர் பொ. ரகுபதி தவறவிட்டிருப்பது அவர் மேற்படி சுவாமி ஞானப்பிரகாசரின் கோப்பாய்க் கோட்டை பற்றிய ஆய்வுகளை அறியவில்லையோ என்னும் சந்தேகத்தைத் தருகின்றது.

தமிழ் மன்னர்களின் காலத்தில் பிரதான கோட்டையான நல்லூர்க் கோட்டைக்குப் பாதுகாப்பாக மேலும் மூன்று கோட்டைகள் கோப்பாய், பண்ணைத்துறை, கொழும்புத்துறை ஆகிய இடங்களில் இருந்ததாக ஈழநாடு வாரமலரில் வெளியான இக்கட்டுரையாசிரியரின் இரு கட்டுரைகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. கோப்பாய், நல்லூரில் கோட்டைகள் இருந்ததை போர்த்துக்கேயரின் வரலாற்றுக் குறிப்புகள் தருகின்றன. அதுபோல் கொழும்புத்துறை, பண்ணைத்துறை ஆகிய இடங்களில் பாதுகாப்பு துறைமுகங்கள் இருந்ததையும் அவை தெரிவிக்கின்றன. இந்நிலையில் பண்ணைத்துறை, கொழும்புத்துறை ஆகிய இடங்களில் ஏன் கோப்பாயிலுள்ளதைப் போல் கோட்டைகள் இருந்திருக்க வேண்டும் என்பதற்கான காரணங்களாக ஈழநாடு வாரமலரின் 2.11.1980 பதிப்பில் இக்கட்டுரையாசிரியர் எழுதிய 'தமிழரின் சரித்திரம் கூறும் பழைய சின்னங்கள் சிதைவுறாமல் பாதுகாக்க வேண்டும்' என்னும் கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளன:

".. நல்லூரில் பெரிய கோட்டை ஒன்றையும், கோப்பாய், பண்ணை என்பவற்றில் பாதுகாப்பின் நிமித்தம் வேறு சிறு கோட்டைகளையும் நிர்மாணித்திருந்தார்கள். .... வெளிநாட்டார் படையெடுப்பிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ளும் பொருட்டு மன்னன் பண்ணையில் சிறு கோட்டையொன்றைக் கட்டியிருந்ததாக அறியப்படுகின்றது. அந்தக் கோட்டை தற்போதுள்ள கோட்டைக்கருகாமையில் தான் இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. கொட்டடி என்ற பகுதியில் அந்தக் கோட்டை இருந்திருக்கலாமென்று

எனக்குப்படுகிறது. கோட்டையடியே கொட்டடியாக மாறியிருக்க வேண்டுமென்றுபடுகின்றது. கொட்டடிக்கு அண்மையில் நெடுங்குளம், வண்ணான் குளம், பிரப்பங்குளம் வீதி, கொல்லர் வீதி இருப்பது போன்ற அதே நிலை கொழும்புத்துறைக்கு அருகாமையிலிருப்பதையும் அவதானிக்கலாம்."

இங்கு குறிப்பிடப்பட்டுள்ள பண்ணைத்துறை, கொழும்புத்துறை ஆகிய பகுதிகளுக்கு அண்மையில் குறிப்பிடப்பட்டுள்ள காணிகளின் பெயர்களை நிலப்பட வரைஞரின் யாழ்ப்பாண நகருக்கான வரைபடங்களிலிருந்து இக்கட்டுரையாசிரியர்பெற்றிருந்தார். இப்பொழுதும் அவ்விதமே அழைக்கப்படுகின்றனவா அல்லது பெயர்கள் மாறிவிட்டனவா என்பது ஆய்வுக்குரியது. 14.12.1980 இல் ஈழநாடு வாரமலரில் வெளியான இக்கட்டுரையாசிரியரின் கட்டுரையான 'பதினைந்தாம் நூற்றாண்டில் நல்லூர் நகர அமைப்பு' என்னும் இக்கட்டுரையிலும் இதனை வலியுறுத்தியுள்ளார்.

பேராசிரியர் ப.புஷ்பரட்ணம் அவர்களும் இவ்விதமே கோப்பாய்க் கோட்டை, பண்ணைக்கோட்டை, கொழும்புத்துறைக் கோட்டை ஆகியன பிரதான நல்லூர்க் கோட்டைக்குப் பாதுகாப்பாக இருந்துள்ளதாகக் கருதுவார். அவரது கோப்பாய்க் கோட்டை பற்றிய Kōpāy Caṅkiliyaṉ Fort (March 1, 2022) என்னும் முகநூல் குறிப்பொன்றில் இதனைக் குறிப்பிட்டிருப்பார்.

## உசாத்துணைப் பட்டியல்

1.'Sankily's Fortress at Kopay By Rev. S.Gnana Prakasar – Ceylon Antiquary and Literary Register (1917), Pages 194 & 195

2. யாழ்ப்பாண வைபவ விமர்சனம் – சுவாமி ஞானப்பிரகாசர் (1928) – மீள் பிரசுரம் – ஆசியக் கல்விச் சேவை (Asian Educational services), 2003

3. கட்டுரை; 'கோப்பாய்ப் பழைய கோட்டையின் கோலம்' – வ.ந.கிரிதரன் , வீரகேசரி வாரவெளியீடு, 13. 3.1981

4.Early Settlements in Jaffna (Pagers 105 & 106) – Dr. P.Ragupathy, 1987

5.The temporal And spiritual Conquest of Ceylon By Fernao De Queyrcz (Translated From Portuguese), Asian Educational services, 1992

6. கட்டுரை – 'தமிழரின் சரித்திரம் கூறும் பழைய சின்னங்கள் சிதைவுறாமல் பாதுகாக்க வேண்டும் – வ.ந.கிரிதரன், 2.11.1980 ஈழநாடு வாரவெளியீடு.

7. Kōpāy Caṅkiliyaṉ Fort By Prof. P. Pusparatnam (Facebook Post) March 1, 2022

8. கட்டுரை; பதினைந்தாம் நூற்றாண்டில் நல்லூர் நகர அமைப்பு – வ.ந.கிரிதரன் (ஈழநாடு வாரமலர் 14.12.1980)

# சிங்கை நகர் பற்றியதொரு நோக்கு - வ.ந.கிரிதரன் -

சிங்கை நகர் வன்னிப் பகுதியில் இருந்ததாக கலாநிதி குணராசா , கலாநிதி புஷ்பரட்ணம் ஆகியோர் கருதுவார்கள். ஆனால் சிங்கை நகர் வல்லுபுரத்திலேயே இருந்திருக்க வேண்டுமென்பதுதான் இக்கட்டுரையாளரின் கருத்து. நல்லூர் இராஜதானி நகர அமைப்பு ஆய்வின் இரண்டாம் பதிப்பு நூலாக வெளிவரும்போது இந்தக் கட்டுரையும் உள்ளடக்கியே வெளிவரும். இக்கட்டுரை ஏற்கனவே திண்ணை, பதிவுகள் ஆகிய இணைய இதழ்களில் வெளிவந்தது. இப்பொழுது மீள்பிரசுரமாக வெளிவருகிறது ஒரு பதிவுக்காக.. - வ.ந.கி -] சிங்கை நகர் நல்லூர் தமிழரசர்களின் இராஜதானியாக விளங்குவதற்கு முன்னர் விளங்கிய நகர். இதன் இருப்பு பற்றிப் பல்வேறு விதமான ஊகங்கள், கருதுகோள்கள் நிலவுகின்றன. ஒன்றிற்குப் பின் முரண்பாடான ஊகங்கள் ஆய்வாளர்களை மேலும் மேலும் குழப்பத்திலாத்தி வைப்பனவாகவுள்ளன. முதலியார் இராசநாயகம், சுவாமி ஞானப்பிரகாசர் போன்றோர் வல்லிபுரமே சிங்கை நகராக இருந்திருக்கக் கூடிய சாத்தியங்கள் உள்ளதாகக் கருதுவர். பேராசிரியர் சிற்றம்பலமோ நல்லூரே சிங்கைநகரெனக் கருதுவார். கலாநிதி க.குணராசா, கலாநிதி ப.புஷ்பரட்ணம் ஆகியோர் பூநகரிப் பகுதியிலேயே சிங்கை நகர் அமைந்திருந்ததாகக் கருதுவர். ஆனால் கலாநிதி புஷ்பரடணத்தை மேற்கோள் காட்டி கலாநிதி குணராசா சிங்கை நகர் பூநகரிப் பகுதியில் இருந்ததை வலியுறுத்துவார்.

கலாநிதி புஷ்பரட்ணமோ கலாநிதி குணராசாவின் நூல்களை தனது சிங்கை நகர் வாதத்திற்கு வலு சேர்ப்பதற்காகக் குறிப்பிடுவார். ஆனால் இவர்கள் இருவருக்குமிடையிலும் கூட சிங்கை நகர் என்னும் பெயர் வந்ததற்கான காரணம், மற்றும் சிங்கை நகரின் தோற்றத்திற்கான காலகட்டம் ஆகியவற்றில் மாறுபட்ட குழப்பகரமான கருத்துகளே நிலவுகின்றன. இக்கட்டுரையில் இவர்களிருவரினதும் சிங்கைநகர் பற்றிய கருதுகோள்களில் காணப்படும் வலுவிழந்த தன்மைபற்றி சிறிது ஆராய்வோம். பின்னுமோர் சமயம் இது பற்றி மேலும் விரிவாக ஆய்வோம். கலாநிதி புஷ்பரட்ணத்தின் தர்க்கத்தில் காணப்படும் முரண்பாடுகள் சிங்கை நகர் பற்றிய சுவாமி ஞானப்பிரகாசர் மற்றும் முதலியார் செ.இராசநாயகம் ஆகியோரின் சிங்கைநகர் பற்றிய கருதுகோட்களுக்கே வலுசேர்ப்பதாக அமைகின்றன என்பது அடியேனின் நிலைப்பாடு.

சிங்கை நகர் பற்றிய கலாநிதி குணராசா பின்வருமாறு கூறுவார்: "... உக்கிரசிங்கன் புதிய தலைநகர் ஒன்றினைத் தன் இராச்சியத்தில் உருவாக்க விரும்பி வன்னிப் பிரதேசத்தில் திக் விஜயம் ஒன்றினை மேற்கொண்டான். அவன் வன்னி மார்க்கமாகச் செல்லுகையில் வன்னியர்கள் ஏழுபேரும் எதிர்கொண்டு வந்து வன்னி நாடுகளைத் திறை கொடுத்து ஆள உத்தரவு கேட்டார்கள். உக்கிரசிங்கன் அதற்குச் சம்மதித்தான். அப்பிரதேசத்தில் அவன் உருவாக்கிக் கொண்ட தலைநகர் சிங்கை நகராகும்..." (நூல்: 'யாழ்ப்பாண அரசபரம்பரை'- க.குணராசா; பக்கம் 59).

வன்னியர்கள் வாழ்ந்த பகுதி அடங்காப்பற்று என அழைக்கப்பட்டது. இதற்குரிய முக்கிய காரணங்களிலொன்று வன்னிச் சிற்றரசர்கள் பலதடவைகள் யாழ்மன்னர்களுட்பட ஏனைய மன்னர்களுக்கு அடங்காமல் வாழ்ந்தவர்கள் என்னும் கூற்று. சில சமயங்களில் யாழ்மன்னர்களுக்கெதிராகக் கலகங்களையும் தூண்டி விட்டுள்ளதை யாழ்ப்பாண வைபவமாலை (யாழ்ப்பாணவைபவமாலை, முதலியார் குலசபாநாதன் பதிப்பு; பக்கம் 37-40) விபரிக்கும். மேலும் பழைய வரலாற்று நூல்களில் பூநகரி, பல்லவராயன் கட்டு போன்ற வன்னிப் பகுதிகளை 'வெளிநாடு' (யாழ்ப்பாணவைபவமாலை: பக்கம் 29) என்றுதான் அழைத்துள்ளார்கள். இவ்விதமான வெளிநாடொன்றிற்கு, அதிலும் அதிக அளவில் எதிர்ப்புச் சூழல் நிலவியதொரு இடத்துக்கு எதற்காக இராஜதானி கதிரைமலையிலிருந்து மாற்றப்பட்டது?

"...சிங்கை நகர் என்ற பெயர் கலிங்கநாட்டு நகரங்களுள் ஒன்றாகிய ஸிங்கபுரத்தின் தொடர்புடைய பெயர் என்று கொள்ள இடமுண்டு.... சிங்கை நகர் என்ற பெயர், முதன் முதல் கதிரைமலையிலிருந்து தலைநகரை வேறிடத்திற்கு மாற்றிப் புதிய தலைநகர் ஒன்றினை உருவாக்கிய உக்கிரசிங்கனின் பெயரைத் தாங்கி சிங்க(ன்) நகர் என விளங்கியிருந்தது எனக் கொள்வதே சாலப் பொருத்தமானது." (நூல்: 'யாழ்ப்பாண அரசபரம்பரை'- க.குணராசா; பக்கம் 59) என்பார் க.குணராசா. இதுபற்றிய கலாநிதி புஷ்பரட்ணத்தின் கருதுகோள் வேறானது. அவர் சோழரே சிங்கைநகரென்னும் பெயர் ஏற்படக் காரணமென்பார்: " ...இப்பெயர் ஒற்றுமை கூடக் கலிங்கநாட்டுச் சிங்கபுரத்தொடர்பால் நேரடியாக வட இலங்கைக்கு வந்ததெனக் கூறுவதைவிடத் தமிழகத்துடனான தொடர்பால் வந்ததெனக் கூறுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது. ஏனெனில் தமிழகத்திலும் இப்பெயர் நீண்டகாலமாகப் புழக்கத்திலிருந்து வந்துள்ளது. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த பல்லவ மன்னன் சந்திராதித்ய காலச் செப்பேடு சிங்கபுர என்ற இடத்தில் இவன் அமைத்த ஆலயம் பற்றிக் கூறுகிறது....... அதே போல வட இலங்கையை வெற்றி கொண்ட முதலாம் பராந்தக சோழன் கால இரு நகரங்கள் சிங்கபுரம், சிங்கபுரநாடு என்ற பெயரைப் பெற்றிருந்தன. அத்துடன் கொங்கு மண்டலத்திலுள்ள காங்கேயநாடு சோழர் ஆட்சியின்போது சிங்கை என்ற இன்னொரு பெயரையும் பெற்றிருத்தது. இச்சிங்கை நாட்டு வேளாளத் தலைவர்களுக்கு சோழர்கள் இட்ட மறுபெயர் சிங்கைப் பல்லவராயர் என்பதாகும். இவர்கள் சோழருடன் இணைந்து இலங்கை நாட்டுடனான அரசியலிலும், படையெடுப்புக்களிலும், வர்த்தகத்திலும் ஈடுபட்டதற்குப் பல சான்றுகள் உண்டு.." (நூல்: தொல்லியல் நோக்கில் இலங்கைத் தமிழர் பண்பாடு - ப.புஷ்பரட்ணம்; பக்கம் 183)

முதலியார் இராசநாயகம் 'கோட்டகம' கல்வெட்டில் 'பொங்கொலி நீர்ச் சிங்கை நகராரியன்' எனக் குறிப்பிட்டிருப்பதைக் காரணம் காட்டி அதற்குரிய பிரதேசமாக வல்லிபுரமே அவ்விதமான துறைமுகப் பொலிவுள்ள நகரென்று கருதுவார். ஆனால் கலாநிதி க.குணராசாவோ இது பற்றிப் பின்வருமாறு கூறுவார்: "....யாழ்ப்பாணக் கடனீரேரி அன்று பொங்கு கடலாகவே விளங்கியது....." (நூல்: 'யாழ்ப்பாண அரசபரம்பரை'- க.குணராசா; பக்கம் 60) பதினான்காம் நூற்றாண்டில் நிகழ்ந்த சம்பவத்தைக் கூறுவது கோட்டகம கல்வெட்டு. இக்காலகட்டத்தில் கலாநிதி க.குணராசா குறிப்பிடுவது போல் யாழ்ப்பாணக் கடனீரேரி பொங்கு கடலாக இருந்ததா என்பது சந்தேகத்திற்குரியது. இதற்குப் பல நூறு வருடங்களுக்கு முன்னரே மாந்தை கூடத் தன் முக்கியத்துவத்தினை இழந்து விட்டது. பொங்கு கடலாகவிருந்த யாழ்ப்பாணக் கடனீரேரி மிக விரைவாக அதன் இன்றைய நிலைக்கு மாறி விட்டதா?

இவ்விடத்தில் முதலியார் இராசநாயகத்தின் இவ்விடயம் சம்பந்தமான கருதுகோள்களை ஆராய்வதும் பயனுள்ளதே. இவரது 'யாழ்ப்பாணச் சரித்திரம்' பண்டைய யாழ்ப்பாணம் பற்றி விபரித்தபடியே தொடங்குவது குறிப்பிடத்தக்கது. அதில் பின்வருமாறு விபரிக்கப்பட்டுள்ளது:"இப்போது குடாநாடாக விருக்கும் யாழ்ப்பாணம், முன்னொரு காலத்தில் அதாவது கிறிஸ்துவுக்கு அநேக ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே, இரண்டு தீவுகளாகவிருந்தது. மேற்கே நாகதீவம், மணிநாகதீவம், மணிபுரம், மணிபல்லவம் என்னும் நாமங்களால் வழங்கபப்பட்ட பெருந்தீவும், கிழக்கே எருமைத் முல்லைத்தீவு, எருமைதீவு என்று பெயர்பெற்ற சிறுதீவும் ஆக இரு பிரிவாக இருத்தது. காலந்தோறும் பூகம்பங்களினாலும், பிரளயங்களினாலும் அழிக்கப்பட்டு, மேற்கே ஒன்றாயிருந்த பெருந்தீவகம் பலதீவுகளாகப் பிரிக்கப்பட்டது. காரைதீவு, வேலணை, மண்டைதீவு, புங்குடுதீவு, அனலைதீவு, நயினாதீவு, நெடுந்தீவு முதலிய தீவுகளும், வலிகாமமும் அப்பெருந்தீவகத்தின்பகுதிகளேயாம். அவ்வாறே கிழக்கே ஒன்றாகவிருந்த சிறுதீவகம் களப்புக் கடலால் வடமராட்சி, தென்மராட்சி, பச்சிலைப்பள்ளியென்னும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. பண்ணைக்கடல், பூநகரிக்கடல், யானையிறவுக்கடல் என்னுங் களப்புக்கடல்கள் முன்னே வங்காளக்குடாக்கடலுடன் சேர்ந்து, ஆழமும் அகலமும்

உள்ளனவாயிருந்தன; அன்றியும் மேலைத்தேசங்களிலும், சீனம் முதலிய கீழைத்தேசங்களிலுமிருந்து போக்குவரவு செய்யுங் கப்பல்களுக்குப் பெரும் வழியாகவும், சோளகம் வாடைக்காற்றுக்கள் தொடங்குங் காலங்களில் உண்டாகும் புயல்களுக்கு, அக்கப்பல்களின் ஒதுக்கிடமும் உறைவிடமுமாகவும் இருந்தன" ('யாழ்ப்பாணச்சரித்திரம்'; பக்கம்1-2). இவ்விதமாகவிருந்த நிலை காலப்போக்கில் மாறி யாழ்ப்பாணக்குடாநாடு உருவாகியதற்குக் காரணங்களாக வங்காளக்குடாக்கடலின் அலைகளால் ஒதுக்கப்படும் மணற்றிரளினையும், வடக்கில் முருகைக்கற்பூச்சினால் உண்டாக்கப்படும் கற்பாறைகளையும், தெற்கிலிருந்து சோளகக்காற்றினால் கொண்டுவரப்படும் மணலினையும் சுட்டிக் காட்டுவார் முதலியார் இராசநாயகம்.

மேலும் இவரது ஆய்வின்படி கி.மு முதலாம் நூற்றாண்டிலிருந்து , கி.பி..மூன்றாம் நூற்றண்டுவரையில் மாதோட்டம் புகழ்மிக்க துறைமுகமாகவிருந்தது. கிரேக்கர், ரோமர் மற்றும் அராபியர்கள் எனப்பலர் மாதோட்டத்துறைமுகத்து தமது கீழைத்தேய வியாபாரநிமித்தம் வந்து போயினர். மன்னாரிலும் ,மாதோட்டத்திலுங் காணப்படும் பெருக்குமரங்கள் அராபியர்களால் கொண்டுவரப்பட்டவையே என்பது இவரது கருத்து. மாதோட்டம் பற்றி யாழ்ப்பான இராச்சியம் பின்வருமாறு விபரிக்கும்: "அக்காலத்தில் இலங்கையின் பிரசித்த துறைமுகம் மாதோட்டம் என்னும் பெருந்துறையே. அதைப் பிரதான துறைமுகமாகக் கொண்டு வங்காளக்குடாக்கடலுக்கூடாய்க் கீழைத்தேசங்களுக்குப் போகும் மரக்கலங்களும், சீன தேசத்திலிருந்து வரும் மரக்கலங்களும் யானையிறவுக்கடலுக்கூடாகப் போக்குவரவு செய்வதுண்டு" (யாழ்ப்பாணச்சரித்திரம்'; பக்கம் 19). அக்காலகட்டத்தில் நாவாந்துறை, பூநகரி மற்றும் கல்முனை ஆகியனவும் துறைமுகங்களாக விளங்கியதாகவும், நாவாந்துறையிலிருந்து வழுக்கியாற்றின் வழியே தலைநகராயிருந்த கதிரைமலைக்கு சங்கடம் என்னுந் தோணிகளில் வியாபாரப்பண்டங்கள் ஏற்றி செல்லப்பட்டனவென்றும், இதனாலேயே நாவாந்துறைக்கு சங்கடநாவாந்துறையென்னும் பெயர் இப்பொழுதும் வழங்கிவருவதாகவும் இராசநாயகம் அவர்கள் மேலும் கருதுவார். இவ்விதமாகப் புகழ்பெற்று விளங்கிய மாதோட்டம் 'மண்ணேறிட்டிருந்தபடியால் துறை உபயோகம் அருகி, ஒன்பதாம் நூற்றாண்டளவில் கப்பல்கள் அத்துறைக்கு வருதல் முற்றாக ஒழிந்து, அதன் பின் முஸ்லீம்கள் வரத்தொடங்கிய காலத்தில் அவர்கள் நூல்களில் 'கலா'வென்றழைக்கப்பட்ட ஊராத்துறை முக்கியத்துவம் பெற்றதென்று கருதுவார் இராசநாயகம் அவர்கள்.

சி.பத்மநாதனின் மாந்தை பற்றிய கருத்தும் இத்தகையதே. 'சோழராட்சிக்குப் பிற்பட்ட காலத்தில் மாந்தை நகரம் வீழ்ச்சியுற்றது. பதினோராம் நூற்றாண்டின்பின் மாந்தைத் துறைமுகத்திற்குத் தூரதேசங்களிலிருந்து ஆழ்கடல் வழிச் செல்லும் பெருங்கப்பல்கள் வந்திருந்தமைக்குச் சான்றுகளில்லை. ஆழ்கடல் வழியான வாணிபத்தில் ஒரு பிரதானதொடர்பு நிலையம் என்ற நிலையினை இழந்தமையால் மாந்தையில் நகர வாழ்க்கை சீரழிந்தது. கி.பி.1050 ஆம் ஆண்டிற்குப் பிறபட்ட சாசனங்களிலும் இலக்கியங்களிலும் மாந்தையிலுள்ள வணிகரைப்பற்றியோ அங்கிருந்த கட்டட அமைப்புகளைப்பற்றியோ குறிப்புக்கள் காணப்படவில்லை' என்பார் அவர் (கட்டுரை: 'இலங்கை தமிழ வணிகக் கணங்களும் நகரங்களும்'- சி.பத்மநாதன்; 'சிந்தனை' ஆடி 1984 இதழிலில்). கி.மு காலத்திலிருந்தே வங்காளக்கடலினூடு தூர நாடுகளுக்குச் செல்லும் கப்பல்கள் யானையிறவுக் கடலினூடு மாந்தை துறைமுகம் வழியாகப் பயணிக்க முடிந்ததால் அந்நகர் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகவிருந்தது. காலப்போக்கில் யானையிறவுக் கடல் மண்மேடிட்டுத் தூர்ந்ததால் அது தடைபடவே காலப்போக்கில் மாந்தை தன் முக்கியத்துவத்தினை இழந்தது.

இதேசமயம் பதினான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த இபின் பதூத்தா என்னும் முஸ்லீம் பயணி ஆரிய மன்னனை இலங்கையின் சுல்தானெனவும், பல கப்பல்களுடன் விளங்கிய

கடற்படையினை அவன் வைத்திருந்தது பற்றியும் தெரிவித்திருக்கின்றான். இத்தகைய மன்னனின் சிங்கை நகர் அமைந்திருக்கக் கூடிய இடம் வல்லிபுரம் போன்றதொரு பகுதியாக இருந்திருப்பதற்கே அதிகமான சாத்தியங்களுள்ளன.

இத்தகையதொரு நிலைமையில் க.குணராசா அவர்கள் 'யாழ்ப்பாணக் கடனீரேரி அன்று பொங்கு கடலாகவே விளங்கியது' என்று பொதுவாகக் கூறுவது பொருத்தமற்றதாகவே படுகிறது. கோட்டகம் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள 'பொங்கொலி நீர்சிங்கைநகர்' பூநகரியினை அண்டிய வன்னி மாவட்டத்தில் இருப்பதை வலியுறுத்துவதற்காக அவ்விதம் கூறினார் போலும். அவர் கூறுவது உண்மையானால் கடந்த எட்டு நூற்றாண்டுகளுக்குள் பொங்கு கடலாக விளங்கிய யாழ்ப்பாணக் கடனீரேரி தூர்ந்து இன்றைய நிலையினை அடைந்திருக்க வேண்டும்.

மேலும் யாழ்பாடி பற்றிய யாழ்ப்பாண வைபவமாலையின் கூற்றினைக் குறிப்பிடும் கலாநிதி க.குணராசா பின்வருமாறு குறிப்பிடுவார்: "...கண்தெரியாத ஒரு யாழ்ப்பாடிக்கு இசைக்குப் பரிசாகத் தனது இராச்சியத்திற்கு வடக்கே இருந்து ஒரு மணல் வெளியே தமிழ்மன்னன் ஒருவன் பரிசளித்ததாகக் கூறும் இச்சம்பவத்தின் உண்மை பொய் எவ்வளவு என்பதை ஆராய்வதைவிடுத்து மணல் வெளியாகக் கருதப்பட்ட யாழ்ப்பாணம் வடக்கேயிருந்தது என்றால், அதைப் பரிசாகத் தந்த மன்னன் இருந்தவிடம் தென்நிலப்பரப்பாக இருந்தது என்பது ஏற்றுக் கொள்ளப்படத்தக்கதே.." ((நூல்: 'யாழ்ப்பாண அரசபரம்பரை'- க.குணராசா; பக்கம் 62). இது பற்றிய கலாநிதி ப.புஷ்பரட்ணத்தின் கூற்றும் இத்தகையதே.

"... இதில் சிங்கை நகருக்கு வடக்கிலுள்ள நாடு மணற்றிடர் எனக் கூறப்பட்டுள்ளது. யாழ்ப்பாணம் என்னும் பெயர் 15ஆம் நூற்றாண்டில் ஏற்படும்வரை இதும்மணற்றி, மணவை, மணற்றிடர் என அழைக்கப்பட்டதற்கு ஆதாரங்களுண்டு....... இதில் வடக்காகவுள்ள இப்பிராந்தியத்தை சிங்கையில் இருந்து ஆட்சிபுரிந்த மன்னன் யாழ்ப்பாணனுக்கு வழங்கினான் எனக் கூறுவதிலிருந்து யாழ்ப்பாணத்திற்குத் தெற்காக சிங்கையிருந்தது தெரிகிறது. இங்கே யாழ்ப்பாணத்திற்குத் தெற்காக வன்னிப் பிராந்தியமே இருப்பது கவனத்தில் எடுத்துக் கொள்ளத்தக்கது..." (நூல்:'தொல்லியல் நோக்கில் இலங்கைத் தமிழர் பண்பாடு'- ப.புஷ்பரட்ணம்; பக்கம்: 168). உண்மையில் இவர்களிருவரும் கூறும் யாழ்ப்பாண வைபவமாலையில் ".... அரசன் அதைக்கேட்டு மிகுந்த சந்தோசம் கொண்டு அவனுக்குப் பரிசிலாக இலங்கையின் வட திசையிலுள்ள மணற்றிடர் என்னும் நாட்டைக் கொடுத்தான்.."(நூல்: 'யாழ்ப்பாண வைபவமாலை' - மயில்வாகனப்புலவர், முதலியார் குலசபாநாதன் பதிப்பு; பக்கம்:24) என்றுதான் குறிப்பிடப்பட்டுள்ளது.. சிங்கை நகருக்கு வடக்கிலுள்ள நாடு மணற்றிடரென்று கூறப்படவில்லையே. 'இலங்கையின் வட திசையிலுள்ள மணற்றிடர்' என்றுதானே கூறப்பட்டுள்ளது. இலங்கையின் வடதிசையில்தானே யாழ்ப்பாணமுள்ளது. இதிலென்ன ஆச்சரியம்? சிங்கை நகரிலிருந்து ஆண்ட மன்னன் இலங்கையின் வடக்கிலுள்ள மணற்றிடரென்பதை ஏன் கலாநிதி குணராசாவும், கலாநிதி புஷ்பரட்ணமும் சிங்கை நகருக்கு வடக்கிலென்று வலிந்து பொருள்கண்டார்கள்? இலங்கை என யாழ்ப்பாண வைபவமாலையில் குறிப்பிடப்படுவதை கலாநிதி குணராசாவும், கலாநிதி புஷ்பரட்ணமும் சிங்கைநகரினைக் குறிப்பதாகக் கருதுகின்றார்களா? ஏன்?

இவற்றையெல்லாம் பார்க்கும்போது சிங்கைநகர் பூநகரிப்பகுதியில் இருந்திருக்கலாமென்று ப.புஷ்பரட்ணம் மற்றும் க.குணராசா ஆகியோர் கருதுவது காத்திரமான வாதமாகப் படவில்லை. மேலும் யாழ்பாடி கதையினை ஆதாரம் காட்டும் அவர்கள் அதில் யாழ்ப்பாணத்தை (மணற்றிடர்) சிங்கை நகருக்கு வடக்கிலுள்ளதொரு நகராக வலிந்து பொருள்கண்ட விதமும் எப்படியாவது தங்களது 'சிங்கை நகர் பூநகரிப் பகுதியிலிருந்துள்ளதென்ற' கருத்தினை எப்படியாவது நிறைவேற்றவே அவர்கள்

முனைந்துள்ளார்களோவென்ற ஐயத்தினை ஏற்படுத்துகிறது. மேலும் ப.புஷ்பரட்ணம் அவர்கள் தனது சிங்கை நகர் பற்றிய கருத்தினை நிறுவுவதற்காக பூநகரிப்பகுதியில் கிடைக்கப்பெறும் கட்டடப்பகுதிகள், நாணயங்கள் மற்றும் இடப்பெயர்களையும் துணைக்கழைப்பார். ஆனால் இவையெல்லாம் அப்பகுதியின் வரலாற்று முக்கியத்துவத்தினை வலுப்படுத்துகின்றனவேயல்லாமல் அங்கொரு இராஜதானி இருந்திருப்பதற்கான உறுதியான சான்றுகளாகக் கருதமுடியாது. வரலாற்றில் கி.மு.காலகட்டத்திலிருந்தே முக்கியத்துவம் பெற்றிருந்த பூநகரிப்பகுதியில் அரசர்கள், சிற்றரசர்கள், வணிகக்கணங்கள் மற்றும் படைத்தலைவர்களுக்கெல்லாம் மாளிகைகள், வியாபாரநிலையங்கள், மற்றும் அரசமுக்கியத்துவம் வாய்ந்த கட்டடங்கள் இருந்திருப்பது இயல்பே. அத்தகைய பகுதியில் இதன் காரணமாகப் பெருமளவில் நாணயங்கள் கிடைக்கப்படுவதும், அரச முக்கியத்துவம் வாய்ந்த இடப்பெயர்கள் நிலவுவதும் பெரிதான ஆச்சரியப்படத்தக்க விடயமல்ல. இவற்றைக் கண்டுவிட்டு , விழுந்தடித்துக் கொண்டு, இதற்குக் காரணம் அங்கொரு அரசு இருந்ததுதான் என்று முடிவுக்கு வந்து விடுவது உறுதிமிக்க தர்க்கமாகப் படவில்லை. இதற்கு மாறாக கி.மு.காலத்திலிருந்தே சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பகுதியாக விளங்கிய பூநகரிப் பகுதி பின்னர் சோழர் காலத்திலும், யாழ்ப்பாண அரசின் காலத்திலும் அதன் கேந்திர, வர்த்தக, இராணுவரீதியான முக்கியத்துவத்தினை இழக்காமலிருந்துள்ளதையே மேற்படி கட்டடச் சிதைவுகளும், இடப்பெயர்களும் மற்றும் கண்டெடுக்கப்பட்ட நாணயங்களும் உறுதிப்படுத்துகின்றன என்று வேண்டுமானால் வாதிடலாம். அது பொருத்தமாகவும், வலுவானதாகவுமிருக்கும்.

உசாத்துணை நூல்களில் சில:

1. 'யாழ்ப்பாண வைபவமாலை'- மாதகல் மயில்வாகனப் புலவர் (முதலியார் குல. சபாநாதன் பதிப்பு)

2. 'யாழ்ப்பாணச் சரித்திரம்' - முதலியார் செ.இராசநாயகம்

3. 'தொல்லியல் நோக்கில் இலங்கைத் தமிழர் பண்பாடு'- ப.புஷ்பரட்ணம்

4. 'யாழ்ப்பாண அரச பரம்பரை' - கலாநிதி க.குணராசா

5. 'இலங்கைத் தமிழ் வணிகக் கணங்களும் நகரங்களும் (கி.பி.1000 - 1250) -சி.பத்மநாதன் (ஆய்வுக் கட்டுரை; 'சிந்தனை' ஆடி 1984 இதழ்).

6. 'இலங்கையில் திராவிடக் கட்டிடக்கலை' - கலாநிதி கா.இந்திரபாலா

நன்றி: பதிவுகள், திண்ணை, எழுநா, தமிழர் மத்தியில்

# யாழ்ப்பாணம் வேறு! நல்லூர் வேறு! மேலுமொரு முக்கிய வரலாற்றுத் தகவல்! - வ.ந.கிரிதரன் -

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு என்னும் எனது நூலின் இரண்டாவது அத்தியாயம் 'நல்லூரும் யாழ்ப்பாணமும்! இதில் நல்லூரும் ராஜதானியும் ஒன்று என்பார்கள் கலாநிதி சி.க.சிற்றம்பலம், சுவாமி ஞானப்பிரகாசர் என்பதைச் சுட்டிக்காட்டி, ஆனால் முதலியார் இராசநாயகம் , கலாநிதி க.செ.நடராசா ஆகியோர் அவை இரு வேறானவை என்பார்கள் என்பதையும் சுட்டிக்காட்டி, அவற்றில் தர்க்க நியாயங்களின் அடிப்படையில் முதலியார் இராசநாயகம் , கலாநிதி க.செ.நடராசா ஆகியோரின் கருத்தான நல்லூரும், யாழ்ப்பாணமும் வேறானவை என்னும் என் கருத்தை முன் வைத்திருப்பேன்.

நான் மீண்டும் நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வினை மீண்டும் கனடாவிலிருந்து எழுதிய காலகட்டடத்தில் என்னிடமும் இந்நூல் இருக்கவில்லை. ஏனயோர் எழுதிய குறிப்புகளின் அடிப்படையிலெயே என் தர்க்கத்தை முன் எடுத்திருந்தேன். அதன்படி முதலியார் செ.இராசநாயகம், கலாநிதி க.செ. நடராசா ஆகியோரின் கூற்றுக்களுக்கமையவும், அவர்களின் தர்க்கத்தின் அடிப்படையிலும், கைலையமாலையில் யாழ்ப்பாணம், நல்லூர் ஆகியவைத் தனித்தனியாகக் குறிப்பிடப்படுவதன் அடிப்படையிலும், நல்லூர் வேறு, யாழ்ப்பாணம் வேறு என்னும் முடிவுக்கு வந்திருந்தேன். அண்மையில் மீண்டும்பதினாறாம் நூற்றாண்டுப் போர்த்துக்கேயரின் நூலான 'The Temporal And Spiritual Conquest Of ceylon என்னும் நூலை மீண்டும் வாசிக்கும் சந்தர்ப்பம் கிட்டியது. அதனை எழுதியிருப்பவர் Fernao De Queyroz. ஆங்கில மொழிபெயர்ப்பு - S.G.Perera. இந்நூலில் மேற்படி கேள்விக்கான பதில் தெளிவாகவுள்ளது. சுவாமி ஞானப்பிரகாசரின் கண்களிலிருந்தும், கலாநிதி சி.க.சிற்றம்பலத்தின் கண்களிலிருந்தும் இது தப்பி விட்டது. முதலியார் செ.இராசநாயகத்தின் பார்வையிலிருந்தும், கலாநிதி க.செ.நடராசாவின் பார்வையிலிருந்தும் இது தப்பி விட்டது. பட்டிருந்தால் அவர்களும் இதனைச் சுட்டிக் காட்டியிருப்பார்கள். ஆயினும் இது அவர்கள்தம் பார்வைகளில் படாமலிருப்பினும் , அவர்கள் ஊகம் சரியானதாகவே அமைந்திருக்கின்றது.

தற்போது மேற்படி நூலின் மீதான மீள்வாசிப்பில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஆதாரமான நல்லூரும் , யாழ்ப்பாணமும் வேறு வேறான நகர்கள் என்னும் உறுதி செய்யும் கூற்று இந்நூலின் 27ஆம் அத்தியாயத்திலுள்ள 353ஆம் பக்கத்திலுள்ளது. அது இதுதான்:

".. ...... the other half a league from the city of Nelur, called patanao, where there was less danger,.. ."
(The Temporal And Spiritual Conquest of ceylon; பக்கம் 353)

மேற்படி அத்தியாயத்தின் தலைப்பு - Chapter 27 Other Successes of this war and the expedition of the Viceroy to Jafanapatao (Page 347)

பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பக் காலகட்டத்தில் நிகழ்ந்த , பதினாறாம் நூற்றாண்டில் நிகழ்ந்த போர்த்துகேயரின் யாழ்ப்பாணப் படையெடுப்புகள் பற்றியெல்லாம் இந்நூலில் விரிவாக விபரிக்கப்பட்டுள்ளன. பதினாறாம் நூற்றாண்டின் நிகழ்வுகள் ஏனைய போர்த்துகேயரின் குறிப்புகளின் அடிப்படையில் விபரிக்கப்பட்டுள்ளன. இக்குறிப்பின்படி Nelur (நல்லூர் நகர்) நகரிலிருந்து அரை லீக் தொலைவிலுள்ள Patanao ( Jafanapatao - யாழ்ப்பாணப் பட்டினம்) என்பதை அறிய முடிகின்றது. இது முக்கியமான வரலாற்றுக் குறிப்பு. இதன்படி யாழ்ப்பாணப் பட்டினம் என்பது நல்லூர் நகரிலிருந்து அரை லீக்

தொலைவிலுள்ள பட்டினம். யாழ்ப்பாணம் வேறு. நல்லூர் வேறு என்பதைத் தெளிவாக்கும் கூற்று இது.

நன்றி: பதிவுகள்

# நல்லூர் ராஜதானி நகர அமைப்பு நூல் (முதற் பதிப்பு) பற்றி வெளியான கட்டுரைகள் :

## கால யந்திரத்தினூடாக நல்லூர் ராஜதானிக்கு *! - –* கத்யானா அமரசிங்ஹ | தமிழில் – எம்.ரிஷான் ஷெரீப் *-*

எனது 'நல்லூர் இராஜதானி நகர அமைப்பு' நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பினை *(*எழுத்தாளர் லதா ராமகிருஷ்ணன் மொழிபெயர்த்தது*)* அடிப்படையாக வைத்துத் திறனாய்வுக் கட்டுரையொன்றினை லக்பிமா *(Lakbima)* சிங்களத் தினசரியின் வாரவெளியீட்டின் இலக்கியப்பகுதிக்குப் பொறுப்பான எழுத்தாளர் கத்யான அமரசிங்க அவர்கள் *27.05.2018* ஞாயிற்றுக்கிழமை லக்பிமா வாரவெளியீட்டில் எழுதியுள்ளார். சிறப்பான அச்சிங்களக் கட்டுரையினை தமிழில் மொழிபெயர்த்திருக்கின்றார் எழுத்தாளர் ரிஷான் ஷெரீப். இருவருக்கும் எனது மனம் நிறைந்த நன்றி. இக்கட்டுரையினைத் தங்களது வாரவெளியீட்டில் வெளியிட்ட லக்பிமா பத்திரிகை நிறுவனத்துக்கும் மனப்பூர்வமான நன்றி. - வ.ந.கிரிதரன் -

---

பருத்தித்துறையிலிருந்து யாழ்ப்பாண நகரத்துக்குச் சென்ற பயணத்தின் போது நாங்கள் கண்ட அந்தப் பழைய அரண்மையானது, 'மந்திரி மனை' என அழைக்கப்படுகிறது. தென்னிந்திய வீடுகளின் கட்டடக்கலையும், ஐரோப்பிய வீடுகளின் கட்டடக்கலையும் ஒருங்கே அமைந்திருந்த அந்த அரண்மனையை முதன்முதலாகக் கண்டபோது, இலங்கையின் தென்பகுதியில் காணக்கூடிய மழையும், வெயிலும், காலமும் பொலிவிழக்கச் செய்திருக்கும் பழங்கால, பாழடைந்த 'வளவ்வ' எனப்படும் பாரம்பரிய வீடுகளை அது நினைவுபடுத்திற்று. யாழ்ப்பாணத்தில் நல்லூர் பிரதேசத்தில் அமைந்திருக்கும் அந்த அரண்மனையானது, போர்த்துக்கேயர்களின் வருகையோடு ஆரம்பித்த காலனித்துவ யுகத்தில் யாழ்ப்பாணத்தில் வசித்த மந்திரியொருவரின் இல்லமாக இருந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகிறது. அவ்வாறே யாழ்ப்பாணத்தை போர்த்துக்கேயர்கள் கைப்பற்ற முன்பு இம் மந்திரி மனை அமைந்திருக்கும் இடத்துக்கு அண்மையில் யாழ்ப்பாண மன்னரொருவரின் அரண்மனையும் இருந்திருக்கக் கூடும் என்றும் கருதப்படுகிறது.

முதன்முறையாக 'மந்திரி மனை'யைக் கண்ட எனது உள்ளத்தில் யாழ்ப்பாண வரலாறு குறித்த பல தரப்பட்ட எண்ணங்கள் கேள்வியெழுப்பின. எனினும், பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அங்கே இருந்திருக்கக் கூடிய ஸ்ரீலங்காவின் தமிழ் மன்னரொருவரின் ராஜதானியைக் குறித்து கற்பனை செய்து பார்ப்பதைத் தவிர, அதைக் குறித்து மேலதிக விபரங்களைத் தேடிப் பெற்றுக் கொள்ள எனக்கு வாய்ப்பில்லை என்பதனால் அந்தக் கற்பனைகளும் கூட தோன்றிய இடத்திலேயே மரித்து விடவும் வாய்ப்பிருந்தது. அனுராதபுரம், பொலன்னறுவை மற்றும் கண்டி ராஜதானிகள் குறித்து நாங்கள் பலதரப்பட்ட வரலாறுகளைப் படித்திருந்த போதிலும், ஆயிரக்கணக்கான வருடங்கள் யாழ்ப்பாணத்தில் நிலவியிருந்த ராஜதானிகளின் அமைவிடங்கள் மற்றும் வரலாறு குறித்த விரிவான குறிப்பொன்றை எங்கிருந்து தேடிப் படிப்பேன் என்பதை அப்போது நான் அறிந்திருக்கவில்லை.

எனினும் அதற்கு சில வாரங்களின் பின்னர், 'நல்லூர் ராஜதானி நகர அமைப்பு" எனும் ஆய்வு நூலொன்று எனக்குக் கிட்டியதானது, கோடையில் துவண்டிருக்கும் ஒருவர் மீது அகாலத்தில் பெய்த மழை போன்றிருந்தது. மொரட்டுவ பல்கலைக்கழகத்தில் கட்டடவியல் பட்டதாரியும், தமிழ் எழுத்தாளருமான நவரத்தினம் கிரிதரன் (வ.ந.கிரிதரன்) எழுதிய இந்த ஆய்வு நூலானது பல நூற்றாண்டுகள் பழமை வாய்ந்த

யாழ்ப்பாண ராஜதானி நகர அமைப்பு குறித்து எழுதப்பட்ட முதல் அறிவியல் ரீதியான ஆய்வு நூலாகக் கருதப்படுகிறது. தமிழ் மொழியில் எழுதப்பட்ட அந் நூலானது, இந்திய எழுத்தாளர்களில் ஒருவரான லதா ராமகிருஷ்ணனால் ஆங்கில மொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. நான் வாசித்தது ஆங்கில மொழிபெயர்ப்புப் பிரதியாகும்.

எனக்கு முதன்முதலாக கிரிதரன் அறிமுகமாவது ஒரு கவிஞராகவும், சிறுகதை மற்றும் நாவல் எழுத்தாளராகவும்தான். அதற்கும் மேலதிகமாக உலகம் முழுவதும் தமிழ் வாசகர்களிடையே பிரபலமான வலைத்தளமாகவுள்ள 'பதிவுகள்' இணைய இதழாசிரியர் அவர். ஆயிரக்கணக்கான வருடங்களாக யாழ்ப்பாணத்தில் திகழ்ந்த ராஜதானிகளின் வரலாறுகள் குறித்தும், அதன் இறுதி ராஜதானியாகக் கருதப்படும் நல்லூர் ராஜதானியின் நகர அமைப்பு குறித்தும் மிக முக்கியமான தகவல்கள் பலவற்றை, பல வருடங்கள் பாடுபட்டு ஆய்வுகள் செய்து அவர் எழுதியிருக்கும் இச் சிறந்த ஆய்வு நூலிலிருந்து அறிந்து கொண்டேன்.

"சிறு பராயத்திலிருந்து தென்னிந்திய வரலாற்று நாவல்களை வாசிக்க நேர்ந்தபோதும், அனுராதபுரம் போன்ற இதிகாசப் பழமை வாய்ந்த ராஜதானிகள் குறித்த விபரங்களை அறியக் கிடைத்த போதும், அக் காலத்தில் இலங்கையின் தமிழ் மன்னர்கள் ஆட்சி செய்த ராஜதானிகள் எவ்வாறிருந்திருக்கும் என எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பேன். அத்தோடு, நான் பாடசாலைக்குச் செல்லும் காலத்தில், இற்றைக்கு ஐநூறு வருடங்களுக்கு முன்னர் யாழ்ப்பாணத்திலிருந்த நல்லூர் ராஜதானியைக் குறித்து தமிழ் எழுத்தாளர் ஒருவர் எழுதிய நந்திக்கடல் எனும் நாவலை வாசித்ததுவும் நினைவிருக்கிறது."

எனினும் தொல்லியல் ஆய்வுத் துறை மூலம், இலங்கையிலிருந்த சிங்கள ராஜதானிகள் குறித்து விரிவான ஆய்வுகள் செய்யப்பட்டிருப்பதோடு வடக்கின் தமிழ் ராஜதானிகள் குறித்த போதிய ஆய்வுகள் செய்யப்படவில்லை என்பது அவருக்கு வளரும்பருவத்தில் தெளிவாகிறது. அது மாத்திரமல்லாது, அக் காலகட்டத்தில் வடக்கிலிருந்த தொல்லியல் பெறுமதி வாய்ந்த ஸ்தலங்கள் சரியான முறையில் பாதுகாக்கப்பட்டிருக்கவுமில்லை.

"அது மாத்திரமல்ல. இலங்கை தமிழ் மக்கள் வரலாறு குறித்து முறையான ஆய்வு செய்யப்பட்டிருக்கவில்லை என்பதுவும் எனக்குத் தெளிவானது. சிங்கள மக்களுக்கு வரலாற்று நூலாக மகாவம்சம் எனும் தொகுப்பாவது இருக்கிறது. தமிழ் மக்கள் தமது பழங்காலப் பெருமைகளை அதிகம் கதைத்தபோதிலும் கூட, அவர்களுக்கென இருக்கும் ஒரே வரலாற்றுக் கிரந்தம் 'யாழ்ப்பாண வைபவ மாலை' என்பது புரிந்தது. எனினும் அதுவும் எழுதப்பட்டிருந்தது இற்றைக்கு இருநூறு, முன்னூறு வருடங்களுக்கு முன்னர்தான். அடுத்தது, அனுராதபுரம், பொலன்னறுவை போன்ற ஆயிரக்கணக்கான வருடங்கள் பழமை வாய்ந்த ராஜதானிகள் குறித்து பல ஆய்வுகள் செய்யப்பட்டிருந்த போதிலும், இற்றைக்கு ஐநூறு வருடங்களுக்கு முன்பு யாழ்ப்பாணத்திலிருந்த நல்லூர் ராஜதானி நகர அமைப்பு எவ்வாறிருந்தது என்பது எமக்குத் தெரியவில்லையே எனவும் எனக்குத் தோன்றியது."

யாழ்ப்பாணத்தில் பிறந்து, அங்கு பாடசாலைக் கல்வியைப் பூர்த்தி செய்த நவரத்னம் கிரிதரன், பட்டப்படிப்புக்காக எண்பதுகளின் ஆரம்பத்தில் மொரட்டுவை பல்கலைக்கழகத்தின் கட்டடக் கலைத் துறையில் பிரவேசிக்கிறார். மொரட்டுவை பல்கலைக்கழகத்தின் கட்டடக் கலை பிரிவானது அவரது நல்லூர் ராஜதானி கனவை பெரு விருட்சமாக செழித்து வளர்ந்திட உரமிட்டது.

"எமது விரிவுரைகளின் போது ஒரு தடவை பேராசிரியர் நிமல் த சில்வா (Nimal De Silva) அவர்கள், அனுராதபுர ராஜதானி குறித்தும், அங்கு ராஜதானி நகர அமைப்பு

எவ்வாறிருந்தது என்பது குறித்து பேராசிரியர் ரோலண்ட் சில்வா நடத்திய ஆய்வு குறித்தும் விவரித்தார். அனுராதபுர நகரமானது ஸ்தூப வளையங்கள் இரண்டு மற்றும் நகரத்தின் மத்தியிலிருந்த வியாபார மத்திய நிலையத்தோடு திட்டமிடப்பட்ட ஒன்றெனவும் கூறக் கேட்டபோதுதான் எனக்கு அந்த எண்ணம் திடீரென உதித்தது. அக் கணத்தில் பேரானந்தத்தை உணர்ந்தேன். நல்லூர் இராசதானியைக் குறித்து நான் சிந்திக்கத் தலைப்பட்டது அப்போதிலிருந்துதான்"

அப்போது அவர்களுக்கு பட்டப்படிப்புக்கான ஆய்வுக்காக வரலாற்றோடு சம்பந்தப்பட்ட கட்டடக் கலை தொடர்பான தலைப்பொன்றின் கீழ் ஆராய்ச்சிக் கட்டுரையொன்றை சமர்ப்பிக்குமாறு உத்தரவிடப்பட்டிருக்கிறது.

"அக் காலத்தில் என்னுடனிருந்த சிரேஷ்ட மாணவரான தனபாலசிங்கம், எனக்கு முன்பே அதைக் குறித்து எழுதத் திட்டமிட்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன். எனினும் போதியளவு தகவல்களும், சாட்சிகளும் இல்லாத காரணத்தால் அவர் அந்த எண்ணத்தைக் கை விட்டதாகவும் அறிந்து கொள்ளக் கிடைத்தது. எனினும் இதைக் குறித்துத் தேடிப் பார்க்க அவர் எனக்கு ஊக்கமளித்தார்" என கிரிதரன் கூறுகிறார்.

அவர் கூறும் விதத்தில், அந்த ஆய்வை போதியளவு தொல்லியல் சான்றுகள் இல்லாமலேயே செய்ய நேர்ந்திருக்கிறது. போர்த்துக்கேயர்களின் ஆக்கிரமிப்பின் பின்னர் கடந்த ஐநூறு வருடங்களுக்குள் யாழ்ப்பாண ராஜதானியின் நகர அமைப்பானது முற்றுமுழுதாக மாறியிருக்கிறது. எனினும் அண்மைக்கால ஆய்வாளர்களால் யாழ்ப்பாண வரலாறு குறித்து எழுதப்பட்டிருக்கும் தொகுப்புக்கள் அவருக்கு பெருமளவு உதவி புரிந்திருக்கின்றன. அவற்றுள் தமிழ் மொழியில் எழுதப்பட்டுள்ள வரலாற்று ஆய்வு நூல்கள் பலவற்றையும் வாசித்து பரிசீலித்துப் பார்த்ததில் அவருக்கு முதலியார் ராசநாயகம் எழுதிய ‘The Ancient Jaffna’ எனும் தொகுப்பை தர்க்கரீதியாக ஏற்றுக் கொள்ள முடியுமாக இருந்திருக்கிறது.

கிரிதரனின் ஆய்வு நூலை வாசித்துக் கொண்டிருக்கும்போது நானும் கூட அவர் எனக்கு அனுப்பி வைத்திருந்த அந்தத் தொகுப்பின் பி.டி.எ.்ப் பிரதியை வாசிக்கத் தொடங்கினேன். அந்தத் தொகுப்பிலும், ஏனைய வரலாற்று நூல்களிலும் குறிப்பிடப்பட்டிருக்கும் தகவல்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது நல்லூர் ராஜதானி உருவாகும் வரைக்கும், யாழ்ப்பாணக் குடா நாட்டில் நிலவி வந்திருக்கும் ராஜதானிகள் குறித்த வரலாற்றை இவ்வாறு விவரிக்க முடியும்.

கிறிஸ்துவ வருடம் பதினைந்தாம் நூற்றாண்டளவில் இலங்கையின் வடக்குப் பிரதேசத்தில் நாக மன்னர்களின் ராஜதானியொன்று இருந்திருக்கிறது என்பதை அனுமானிக்க முடிவதோடு அதன் தலைநகரம் இப்போது யாழ்ப்பாணத்தில் ‘கந்தரோடை’ எனத் தமிழிலும் ‘கதுருகொட’ என சிங்களத்திலும் அழைக்கப்படும் பிரதேசத்தில் அமைந்திருந்ததை அனுமானிக்க முடிகிறது. இந்த நாக ராஜதானியானது, கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரைக்கும் யாழ்ப்பாணத்தில் நிலவி வந்திருக்கிறது. இற்றைக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பு இந்தியாவுக்கும், யாழ்ப்பாண குடா நாட்டுக்கும் இடையே நிகழ்ந்த பாரியளவிலான தொடர்பாடல்களின் காரணமாக இலங்கை அடையாளத்துடன் கூடிய தமிழ் குடியிருப்புக்கள் வடக்கில் உருவாகத் தொடங்கியிருக்கின்றன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இந்தியாவின் சோழ மன்னரொருவர், நாக இளவரசியொருவரை சுயம்வரம் செய்திருக்கிறார். சோழ மற்றும் நாக வம்சத்தின் இத் திருமணத்தினால் அத் தொடர்பாடல் மேலும் பலம் பெற்றிருக்கக் கூடும் என எண்ணிப் பார்க்க முடிவதோடு அப்போது இலங்கையில் வாழ்ந்து வந்த நாக, யட்ச, காலிங்க போன்ற இனங்களுடன் அத் தமிழ்மக்கள் ஒன்றாகக் கலந்து இலங்கைக்கே உரித்தான தமிழ் குயிருப்புக்கள் யாழ்ப்பாணத்தில் உருவாகியிருப்பதையும் எண்ணிப் பார்க்க

முடிகிறது. (அது, இந்தியாவிலிருந்து வந்த விஜயன் உள்ளடங்கிய குழுவின் பரம்பரையிலிருந்து உருவானதாகக் கூறப்படும் சிங்கள இனத்தவர்கள் இந் நாட்டின் பூர்வீக இனங்களான யட்ச, நாக இனங்களோடு ஒன்றாகக் கலந்ததை ஒத்திருக்கிறது.)

அதன்பிறகு உருவாகிறது வெற்றிடமொன்று. அதாவது கி.பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டு நூற்றாண்டு வரைக்கும் யாழ்ப்பாண ராஜதானி குறித்த போதியளவு விபரங்கள் கிடைக்கப் பெறாத தெளிவற்ற கால கட்டம். (நாக மன்னர்களின் ஆட்சிக் காலத்துக்குப் பிறகு தமிழ் மன்னர்களின் ஆட்சிக் காலம் தோன்றுவது அக் காலகட்டத்திலாக இருக்கக் கூடும்.) அந்தக் காலத்திலோ அல்லது அதன் பிறகோ யாழ்ப்பாண ராஜதானியானது பருத்தித் துறையை அண்டிய சிங்கை நகரில் தோன்றியிருக்கக் கூடும் என்பதை எண்ணிப் பார்க்க முடிகிறது. யாழ்ப்பாண ராஜதானி வரலாற்றில் 'நல்லூர் காலம்' தோன்றுவது அதன்பிறகுதான். அது, கி.பி. 1250 களில் சோழ இளவரசர்களில் ஒருவரான செகராஜசேகரன் இலங்கைக்கு வருகை தந்து செகராஜசேகர சக்கரவர்த்தி என யாழ்ப்பாணத்தில் முடிசூடப்பட்டதும் நிகழ்ந்திருக்கிறது. அவர் மூலமாக யாழ்ப்பாணத்தில் ஆரிய சக்கரவர்த்தி ராஜ வம்சம் தோன்றத் தொடங்குவதோடு சக்கரவர்த்தி தனது ராஜதானியாக நல்லூரைக் களமமைத்துக் கொள்கிறார்.

நல்லூர் ராஜதானியின் அடுத்த முக்கியமான அத்தியாயம் உருவாவது கி.பி. 1450 களில் தெற்கிலிருந்து வந்த சபுமல் இளவரசன் யாழ்ப்பாணத்தை ஆண்டு கொண்டிருந்த சக்கரவர்த்தி வழித் தோன்றலான மன்னர் கனக்சிங்காரியனை தோற்கடித்து, ஸ்ரீ சங்கபோதி புவனேகபாகு எனும் பெயரில் அங்கு மன்னராக முடிசூடிய போது நிகழ்ந்திருக்கிறது. அவர் நல்லூர் கந்தஸ்வாமி கோயிலை முற்றுமுழுதாக புணர்நிர்மாணம் செய்ததாகக் கூறப்படுகிறது.

இலங்கையின் தென்பகுதியிலிருந்து கிளம்பி, தமிழ் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்ட சபுமல் இளவரசன் குறித்து எழுதப்பட்டிருக்கும் ‘கோகில சந்தேஷய’ எனப்படும் சிங்கள சங்கக் கவிதை இலக்கியத்தின் கவிதைகள் பலவற்றிலும் அக் காலத்தில் இருந்த நல்லூர் ராஜதானியின் பெருமை பாடப்பட்டிருப்பதாக கிரிதரன் தனது ஆய்வு நூலில் எழுதியிருக்கிறார். அது வரையில், பல தடவைகள் கேள்விப்பட்டிருக்கும், ‘கோகில சந்தேஷய’ எனப்படும் சிங்கள சங்கக் கவிதை இலக்கியத்தை நான் முதன்முதலாக தொடக்கத்திலிருந்து முடிவு வரைக்கும் கவனமாக வாசிக்கத் தொடங்கியது, அக் கவிதைகளை வாசிப்பதன் மூலம் நான் வாசித்துக் கொண்டிருந்த நல்லூர் ராஜதானியின் நகர அமைப்பின் மீது மிகுந்த நேச உணர்வை உள்ளத்தில் தோற்றுவித்துக் கொள்ளத்தான்.

தங்கத் தோரணங்களும் மணிகளும் தொங்கும்

அலங்கரித்த விசாலமான அரண்மனை வீற்றிருக்கும்

ஆங்காங்கே பூத்துச் செழித்திருக்கும் மலர்த் தோப்புக்களுடன்

வைஷ்ணவ எனும் கடவுள் குடியிருக்கும் யாழ் நகரை (நல்லூர் ராஜதானியை) பாருங்கள்

இவ்வாறு உரைக்கப்பட்டிருக்கும் விதமாக அந்தக் காலத்தில் திகழ்ந்த அழகிய நல்லூர் ராஜதானியானது பதினாறாம் நூற்றாண்டில் போர்த்துக்கேயர்களின் படையெடுப்பின் காரணத்தால் முற்றுமுழுதாக அழிக்கப்பட்டிருக்கிறது. மந்திரி மனையையும், இன்னும் சில இடிபாடுகளையும் தவிர வேறு எதுவும் அங்கு எஞ்சியிருக்கவில்லை. நல்லூர் ராஜதானியைக் குறித்த சான்றுகள் பலவும் அழிந்துபோயிருந்த அவ்வாறானதோர்

இக்கட்டான நிலைமையில்தான் கிரிதரன் தனது ஆராய்ச்சியை நடத்தியிருக்கிறார். எனினும் அவர் தனது முயற்சியைக் கைவிடத் தயாராகவிருக்கவில்லை.

பௌத்த மற்றும் இந்து கட்டடக் கலை மற்றும் நகர அமைப்புக்கள் குறித்து எழுதப்பட்ட புத்தகங்கள், மற்றும் போர்த்துக்கேயர்களால் எழுதப்பட்ட குறிப்புக்களை ஆய்வு செய்ததன் மூலம் அவருக்கு யாழ்ப்பாண தமிழ் ராஜதானிகளின் அமைவுகள் குறித்த விடயங்களை பெற்றுக் கொள்ள முடிந்திருக்கிறது. நில அளவையாளர் காரியாலயத்திலிருந்து பெற்றுக்கொண்ட வரைபடங்களினூடாக வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்களினதும் பாதைகளினதும் பெயர்களைக் கண்டறிந்து அதனூடாக கடந்த காலத்தில் ஓரோர் இடங்களினதும் அமைவிடங்கள் குறித்த தெளிவையும் பெற்றுக் கொள்ள முடிந்திருக்கிறது.

போர்த்துக்கேயர்களால் பதினேழாம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கும் Early Christanity of Ceylon தொகுப்பில் நல்லூர் ராஜதானியில் அமைக்கப்பட்டிருந்த வியாபார மத்திய நிலையம் ஒன்றைக் குறித்து குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதன் செயற்பாடுகளை மன்னர் தனது மாளிகையிலிருந்தே கண்காணிக்கக் கூடிய விதமாக அது அமைக்கப்பட்டிருந்தது என அத் தொகுப்பில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மேலும் நல்லூர் ராஜதானியின் பாதுகாப்புக்காக நகரத்தைச் சூழவும் சிறிய காவலரண்கள் மூன்று அமைக்கப்பட்டிருந்ததாகவும், அக் காவலரண்களைத் தொடர்புபடுத்தி ஒவ்வொன்றினூடாகச் செல்லும் பிரதான பாதைகளிரண்டும் அமைந்திருந்ததாகவும் அத் தொகுப்பில் எழுதப்பட்டிருப்பதைக் காணக்கூடியதாகவிருக்கிறது.

அதற்கும் மேலதிகமாக, இன்றும் கூட யாழ்ப்பாணத்தில் சிதைவுகளாகக் காணப்படக் கூடிய யமுனை ஏரி அல்லது யமுனாரி எனப்படும் ஏரியானது நல்லூர் ராஜதானி குறித்த ஆராய்ச்சியின் போது கிரிதரனுக்கு பெரிதளவில் பயனளித்திருக்கிறது. ராஜவம்சத்தினர் தமது குளியல் தேவைகளுக்காகவோ அல்லது நல்லூர் கந்தஸ்வாமி கோயில் பூஜைகளுக்குப் பயன்படுத்திய ஏரியாகவோ இந்தப் பொய்கை பாவிக்கப்பட்டிருக்கக் கூடும் என்பதை எண்ணிப் பார்க்க முடிகிறது.

இந்த அனைத்து விடயங்களோடும் பண்டைய இந்து வாஸ்து ரீதியான கட்டடக் கலை பொருந்துவதால் கிரிதரனுக்கு தனது நல்லூர் ராஜதானி நகர அமைப்பை கட்டமைக்க முடிந்திருக்கிறது. அது சதுர வடிவான நகரமாகத் திகழ்ந்திருக்குமெனத் தீர்மானிக்கும் அவர் அதில் வட மேற்குத் திசையில் அரச மாளிகை, யமுனை ஏரி, வியாபார மத்தியநிலையம் மற்றும் கந்தஸ்வாமி கோயில் இருந்திருக்கலாமென தீர்மானிக்கிறார். வட கிழக்குத் திசையில் பணியாளர்களது குடியிருப்பும், வேலைத்தளங்களும்,, தென்கிழக்குத் திசையில் படையினரதும், வியாபாரிகளினதும் குடியிருப்பும், தென் மேற்குத் திசையில் புலவர்களினதும், மந்திரிகளினதும், ராஜ குலத்தவர்களினதும் காணிகளாகவும், நகரத்தைச் சூழவும் நான்கு கோயில் இருக்கத் தக்கதாகவும் அவர் அந்த நகர நகர அமைப்பை நிர்மாணித்திருக்கிறார். அந்தத் திட்டமிடலுக்கேற்ப நான் இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருக்கும் மந்திரி மனையானது அமையப் பெறுவது தென் மேற்குத் திசையிலாகும்.

"மந்திரி மனை அமைந்திருக்கும் காணிக்கு பண்டைய காலத்திலிருந்து குறிப்பிடப்படும் பெயர் சங்கிலித் தோப்பு என்பதாகும் என நில அளவையாளர் காரியாலயத்தின் வரைபடத்தைப் பரிசோதித்துப் பார்த்தபோது எனக்குப் புலப்பட்டது. அதற்கு முன்பு அதனை யாரும் கண்டுபிடித்திருக்கவில்லை. சங்கிலித் தோப்பு என்பது ராஜாவுக்கு உரிய தோப்பு (சோலை) என்பதாகும். ஆகவே அதைச் சுற்றிவர அரச மாளிகையும், ஏனைய உயரதிகாரிகளின் கட்டடங்களும் இருந்திருக்கக் கூடுமென தீர்மானிக்க முடிகிறது" என கிரிதரன் விவரிக்கிறார்.

அவர் இந்த ஆய்வுத் தொகுப்பை மீளவும் எழுதி ஒரு நூலாக வெளியிடுவது, பல்கலைக்கழகப் பட்டப்படிப்பைப் பூர்த்தி செய்து, நாட்டை விட்டு வெளியேறியிருக்கும் காலப்பகுதியில்தான். அந்த நூல் 1996 ஆம் ஆண்டு இந்தியாவிலிருக்கும் சினேகா பதிப்பகத்தினூடாக வெளிவந்திருக்கிறது.

"இன்னும் கூட எனது ஆராய்ச்சி முடிவடையவில்லை. நான் இடைக்கிடையே அதற்குரிய பாகங்களைச் சேகரித்து வருகிறேன். அந்தக் காலத்தில் போதியளவு தொல்லியல் சான்றுகளேதுமற்றுத்தான் நான் இந்த ஆய்வை எழுத வேண்டியிருந்தது. இது இலகுவான விடயமல்ல. மிகவும் பாடுபட வேண்டியதொன்று. உண்மையில் இதனூடாகப் பயணித்து இதைக் குறித்து மேலதிக ஆய்வுகளைச் செய்ய விரும்புவோருக்கு ஒரு அடிப்படை அத்திவாரமாக எனது ஆய்வு நூலை அறிமுகப்படுத்த விரும்புகிறேன்" என நவரத்தினம் கிரிதரன் குறிப்பிடுகிறார்.

அவரது இந்த ஆய்வு நூலுக்கு ஆய்வாளர்களதும், வாசகர்களதும் உச்ச வரவேற்பு கிடைத்துள்ளதோடு, நல்லூர் மற்றும் யாழ்ப்பாண ராஜதானிகள் குறித்த ஆராய்ச்சிக் கட்டுரைகளிலும், இணையத்தளங்களில் அதைக் குறித்து எழுதப்படும் கட்டுரைகளிலும் அவரது ஆய்வை அடித்தளமாகக் கொண்டு எழுதப்பட்டிருப்பதை இன்றும் கூடக் காண முடிகிறது.

"இலங்கை வரலாற்றைக் குறித்து ஆராய்ச்சிகள் செய்யப்படும்போது அது ஒருதலைப்பட்சமாக அமையக் கூடாது என நான் ஆழமாக நம்புகிறேன். இலங்கையில் தெற்கு, மேற்கிலிருப்பதைப் போலவே வடக்கிலும் கிழக்கிலுமிருக்கும் தொல்லியல் சான்றுகள் குறித்த ஆய்வுகளை ஒருதலைப்பட்சமாக நிகழ்த்தக் கூடாது என்பதே எனது கருத்து. இந்த அனைத்துப் பிரதேசங்களும் இலங்கை எனும் நாட்டுக்கே உரித்தாகிறது. அனைத்துப் பிரதேசங்களினதும் வரலாறுகள் ஒன்றிணைந்துதான் ஒரு நாட்டின் வரலாறு உருவாகிறது. அவ்வாறு நோக்கும்போது நாங்கள் எமது வரலாறு குறித்து செய்திருக்கும் ஆய்வுகள் போதாது. நாட்டின் அனைத்து பகுதிகளிலும் இருக்கும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் அனைத்தும் பாதுகாக்கப்பட வேண்டும் என எனக்குத் தோன்றுகிறது. இந்த நாட்டின் வரலாறானது நாம் நினைத்துப் பார்ப்பதை விடவும் மிகவும் புகழ் வாய்ந்தது."

கிரிதரனின் அந்தக் கூற்றோடு என்னாலும் இணைய முடிகிறது. நான் ஒரு கணம் நல்லூர் ராஜதானியை மனதால் உருவகித்துப் பார்க்க முயன்றேன். அதில் மனிதர்களின் குரல்களால் எழுந்து நிற்கும் தெருக்கள், உயர்ந்த மதில் சுவர்கள், வியாபார மத்திய நிலையம், இடையறாது மணியோசை எழுப்பும் கோயில்கள், கம்பீரமாக எழுந்து நிற்கும் அரசவை, மாளிகைகள் மற்றும் காவலரண்கள் எனது கற்பனையில் எழுகின்றன.

நான் கிரிதரனுக்கு திரும்பவும் நன்றி தெரிவிக்கிறேன். மரித்துக் கொண்டிருந்த எனது பண்டைய யாழ்ப்பாண நினைவுகளுக்கு அவரால்தான் உயிர் கிடைத்திருக்கிறது. நான் அவரது நல்லூர் ராஜதானியின் நகர அமைப்பு எனும் கால யந்திரத்தினூடாக கடந்த காலத்துக்குச் சென்று நல்லூர் ராஜதானியைக் கண்டு கொண்டிருக்கிறேன்.

- சிங்கள மொழியில் கத்யானா அமரசிங்ஹ | தமிழில் - எம்.ரிஷான் ஷெரீப்

நன்றி: லக்பிமா வாரவெளியீடு

# இதுவரை வெளியான வ.ந.கிரிதரன் நூல்கள்

1. மண்ணின் குரல் (நாவல், கவிதை, கட்டுரைத் தொகுப்பு),
2. எழுக அதி மானுடா! (கவிதைத்தொகுப்பு),
3. அமெரிக்கா (நாவல், சிறுகதைகளின் தொகுப்பு),
4. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (ஆய்வு)
5. மண்ணின் குரல் ( நாவல்களின் தொகுப்பு) ,
6. குடிவரவாளன் (நாவல்) ,
7.. அமெரிக்கா (நாவல், திருத்திய இரண்டாவது பதிப்பு.)
8. கட்டடக்கா(கூ)ட்டு முயல்கள் (சிறுகதைத்தொகுப்பு) ,
9> வ.ந.கிரிதரன் கட்டுரைகள் ,
10. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் (கவிதைத்தொகுப்பு) ,
11. நவீன விக்கிரமாதித்தன் (நாவல்)

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வு நூல் மற்றும் இவரது சிறுகதைகள் சிங்கள மொழிக்கு எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது படைப்புகள் பல அமேசன் - கிண்டில் தளத்தில் மின்னூல்களாகக் கிடைக்கின்றன.

கணையாழி (1995 - 2000 தொகுப்பு, ஞானம் சஞ்சிகையின் ' ஈழத்துப்புலம்பெயர் இலக்கியத்தொகுப்பு', ' பனியும் பனையும்' தொகுப்பு , அமரர் வெங்கட் சாமிநாதன் பற்றிய வாதங்களும், விவாதங்களும் தொகுப்பு ,'வடக்கு வாசல் 'சஞ்சிகையின் இலக்கிய மலர், ஆழி பப்ளிஷர்ஸ் வெளியிட்ட ஆண்டு 'தமிழ்க்கொடி' மலர் ஆகியவற்றில் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன. எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளையும் ஆழி பப்ளிஷர்ஸும் இணைந்து நடத்திய அமரர் சுஜாதா அறிவியல் புனைகதைப் போட்டியில் வட அமெரிக்காவுக்கான விருதினைப் பெற்ற அறிவியற் சிறுகதை 'நான் அவனில்லை'. இச்சிறுகதை ஆழி பதிப்பகம் வெளியிட்ட 'சுஜாதா நினைவுப் புனைவு 2009' , அறிவியற் புனைகதைத்தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. விகடனின் பவளவிழா ஆண்டில் இவரது 'பல்லிக்கூடம்' முத்திரைக் கதையாக வெளியானது.

## வெளியான அமேசன் - கிண்டில் மின்னூல்கள். இவை பதிவுகள்.காம் வெளியீடுகள்.

1. வ.ந.கிரிதரன் பாடல்கள்
2. வ.ந.கிரிதரனின் அணிந்துரைகள்
3. அமெரிக்கா!: அமெரிக்கத் தடுப்பு முகாம் அனுபவம்!
4. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி ஒன்று)
5. வ.ந.கிரிதரனின் 'கணையாழி'க் கட்டுரைகள்
6. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல்!: வ.ந.கிரிதரனின் தமிழ்க் கவிதைத் தொகுப்பு!
7. அருச்சுனனின் தேடலும் அகலிகையின் காதலும் (நாவல்)
8. அண்டவெளி ஆய்வுக்கு அடிகோலும் தத்துவங்கள்: வ.ந.கிரிதரனின் அறிவியற் கட்டுரைகள், சிறுகதைகள்
9. நவீன கட்டடக்கலைச் சிந்தனைகள்!
10.வன்னி மண்: - என் பால்யத்தின் பிரதிபலிப்பு. (நாவல்)
11. பால்ய காலத்துச் சிநேகிதி! (நாவல்)
12. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் பதிப்பு)
13.குடிவரவாளன்: நியூயோர்க் மாநகரத் தமிழ் அகதி அனுபவம்! (நாவல்)
14. மண்ணின் குரல்: - கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். - (நாவல்)
15. கணங்களும் குணங்களும் (நாவல்)
16. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி இரண்டு)
17. இன்று புதிதாய்ப் பிறந்தேன் (வ.ந.கிரிதரன் பாடல்கள் தொகுப்பு 2
18. என்னை ஆட்கொண்ட மகாகவி (மகாகவி பாரதியார் பற்றிய கட்டுரைகள்)
19. அழியாத கோலங்கள் (தொகுப்பு ஒன்று)
20. அழியாத கோலங்கள் ( தொகுப்பு இரண்டு)

# ஆங்கில நூல்கள் (மின்னூல்களாக) - மொழிபெயர்த்தவர் - லதா ராமகிருஷ்ணன்.

1. An Immigrant  (Novel)
2. America (Novel)
3. Nallur Rajadhani City Layout

# வ.ந.கிரிதரன்



தற்போது கனடாவில் வாழ்ந்து வரும் எழுத்தாளர் வ.ந.கிரிதரன் இலங்கையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர். வவுனியா மகாவித்தியாலயம், யாழ் இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் கல்வி கற்ற இவர் , மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தின் கட்டடக்கலைப் பட்டதாரி. "டொராண்டோ" சென்டனியல் கல்லூரியில் இலத்திரனியற் பொறியியல் துறையில் பட்டம் , தகவற் தொழில் நுட்பம் நுட்பத்துறையில் பல்வேறு கல்வித் தகைமைகளைப் பெற்றவர். இலங்கையிலிருந்த காலத்தில் தன் எழுத்துலக வாழ்வினை ஆரம்பித்த புகலிடத்தில் தொடர்ந்து எழுதி வருகின்றார். பதிவுகள் என்னும் இணைய இதழினை 2000 ஆம் ஆண்டிலிருந்து ஆசிரியராகவிருந்து நடாத்தி வருகின்றார்.

இவரது படைப்புகள் இலங்கை, தமிழகம் மற்றும் புகலிடத்தமிழர்கள் வெளியிட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. தமிழக ஆய்வரங்குகளில் இவரது புகலிடப்புனைகதைகளைப் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. தமிழகப்பல்கலைக்கழகங்களில் இவரது படைப்புகளைப்பற்றி முனைவர் மற்றும், முதுகலைத் தத்துவம் கற்கை நெறிகளுக்காக மாணவர்கள் ஆய்வுகள் செய்திருக்கின்றார்கள். 'பொந்துப்பறவை'கள் என்னும் சிறுகதை சிங்கப்பூர் கல்வி அமைச்சினால் தமிழ் மாணவர்களுக்கான பாடத்திட்டமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'அமெரிக்கா' அமெரிக்கன் கல்லூரியின் (தமிழ்நாடு) பாடத்திட்டத்திலுள்ளது.

ஆனந்த விகடனின் பவள விழாப்போட்டி, எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளை மற்றும் ஆழி பப்ளிஷர்ஸ் இணைந்து நடாத்திய உலக அளவிலான அறிவியற் சிறுகதைப்போட்டி ஆகியவற்றில் பரிசுகளைப்பெற்றுள்ளன. கனடாத் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இலக்கியச் சாதனைக்கான இயல் விருது 2022 பெற்றவர்.